ஜூன் - '94
பவ - ஆனி

மலர்: 47
இதழ்: 2

# அமுதசுரபி

எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி
என்றென்றும் வாழியவே — பாரதியார்

## அறிவியல்



## ஆன்மிகம்



## இலக்கியம்



## இளைய அமுதம்



## கலை



## பாவையர் பக்கங்கள்



## சிறுகதை



## சோதிடம்



## தொடர்கதை



## வரலாறு



## நாணயம்



## மருத்துவச் செய்திகள் சிறப்புப் பகுதி 2



★ பதிப்பாளர் : ஏ.வி.எஸ் ராஜா ★ கௌரவ இலக்கிய ஆலோசகர் : என்.வி. சுப்பிரமணியன் ஐ.ஆர்.டி.எஸ்., ★ ஆசிரியர் : கலைமாமணி விக்கிரமன் ★ இதழ் ஆப்செட் அமைப்பு : சிவகுமார் ★ தனி இதழ் விலை : ரூ. 6/- ★ ஆண்டு சந்தா : ரூ. 72 /-.

★ பாரதிராஜா மருத்துவமனை — ஆராய்ச்சி மையத்தின் அறுவைச் சிகிச்சைக் கூடத்தில் நடந்த மிக நுண்ணிய அறுவைச் சிகிச்சை காட்சி, உடற்பயிற்சி, இரத்த அமுத்த நிலை ஆராய்தல் போன்றவற்றை போட்டோ நிபுணர் 'யோகா' வண்ணப்படமாக எடுத்து அளித்துள்ளார்.

## 'புதுச்சேரி — இலக்கியச் — சிறப்பிதழ்'

அமுதசுரபி - ஜூலை 94 இதழ், புதுச்சேரியின் கலை, இலக்கியப் பண்பாட்டுச் செய்திகளுடன் பிரெஞ்சிந்திய காலத்து அரிய புகைப்படங்களையும் வியப்பிற்குரிய தகவல்களையும் தாங்கி வெளிவருகிறது. மேலும் புதுச்சேரி மாநில அரசின் மூன்றாண்டு சாதனைகளுடன் வளர்ச்சித் திட்டங்களும், சுற்றுலா மையங்களின் சிறப்புகளும் இடம் பெறுகின்றன.

புதுச்சேரி எழுத்தாளர்களின் படைப்புகள், சிறுகதைகள், கவிதைகள், கட்டுரைகள் என முழு விவரத் தொகுப்புடன் - "புதுச்சேரி இலக்கியச் சிறப்பிதழ்" வெளிவர உள்ளது.

# அனுபவம் பேசுகிறது!

நடவுவேலை முடிந்து, ஆட்கள் ஒவ்வொருவராக மேடேறத் தொடங்கிய போது, பொழுது சாய்ந்திருந்தது. எப்போதும், சிரிப்பும் கும்மாளியுமாக இருக்கும் நடவாட்கள், அன்று அமைதியாக இருந்தனர். அதன் காரணம், 'பெரியய்யா' என்று அழைக்கப்படும் பெரியவர் ரங்கசாமி அங்கே இருந்தததுதான். 'எல்லோரும் மசமசன்னு நிக்காம, கூலி வாங்கறதுக்கு வரிசையில வந்து நில்லுங்கப்பா! பெரியய்யா காத்திருக்காங்கல்ல!' என்று சின்னான் குரல் கொடுத்தான். உடனே பெரியவர் அமர்ந்திருந்த கயிற்றுக் கட்டிலுக்கு அருகே ஒரு ஒழுங்கற்ற வரிசை உருவானது.

தன் மடியில் இருந்த பணத்தை எண்ணி எண்ணி தனக்கு முன்னே நீண்ட கரங்களில் அவர் போடத் தொடங்கியபோது வேக வேகமாக வந்த பொன்னன், 'எசமான்! பட்டணத்திலிருந்து சின்னய்யா வந்திருக்காருங்க! அம்மா உங்களை வெள்ளென வர சொன்னாங்க' என்று மூச்சிரைத்தபடி சொன்னான்.

'அப்படியா' என்று நெற்றியை சுருக்கியவர் 'எலேய் சின்னான்! கூலியை பட்டுவாடா பண்ணிட்டு வீட்டு பக்கமா வா! நான் முன்ன கிளம்பறேன்' என்று புறப்பட்டார்.

முருகேசன்... அவரது ஒரே மகன். நன்றாக படித்து இப்போது சென்னையில் பெரிய பொறுப்பில் இருக்கிறான். ஒவ்வொரு முறை ஊருக்கு வரும்போதும் பெற்றவர்களை தன்னோடு வந்து விடுமாறு அவன் அழைப்பதும், விவசாயத்தை விட்டு விட்டு வர முடியாது என்று இவர் மறுப்பதும், வாடிக்கையாக நடப்பவை.

'வாப்பா முருகேசு! எப்ப வந்தே' என்ற குரல் கேட்டு, பணிவாக எழுந்துநின்ற மகனை பார்த்து 'மருமக வரலையா?' என்று வாஞ்சையோடு விசாரித்தார். 'இல்லீங்கப்பா நான் மட்டும் தான் வந்தேன்' என்றவனிடம் 'எல்லாரும் சவுகரியந்தானே' என்று கேட்டபடியே ஊஞ்சலில் உட்கார்ந்தார் ரங்கசாமி!

'சவுகரியந்தாம்பா! நான் தான் ஒரு விஷயமா யோசனை கேட்டுட்டு போலாம்னு வந்தேன்.' என்றதும் என்ன விஷயம் என்று கேட்பது போல ஏறிட்டு பார்த்தார்.

'கையில இப்ப கொஞ்சம் பணம் சேர்ந்திருக்குது. அதை பயனுள்ள முறையில முதலீடு செய்யலாம்னு நனைச்சேன். அப்பதான் கூட வேலை பார்க்கிறவங்க, அனுபவ் தேக்கு பண்ணைகளை பற்றி நிறைய சொன்னாங்க. அதுல முதலீடு செய்யலாம்னு யோசனை. எதுக்கும், உங்களைக் கேட்டுட்டு முடிவு செய்யலாம்னு வந்தேன்' என்றான்.

தேக்கின் பெயரைக் கேட்டதும், பெரியவரின் முகம் பிரகாசமானது. உற்சாகத்தோடு சொல்லத் தொடங்கினார். 'முருகேசு, ஒண்ணு சொல்றேன் கேட்டுக்க! நானும் நாப்பது வருசமா பார்க்கிறேன். என் அனுபவத்தில, தேக்கு மரம் எப்பவும் தேவைப்படற ஒண்ணு. அதுவும் வர்ற நாட்களில தேக்கோட மதிப்பு



அதிகமாயிட்டே போகும். அனுபவ் தேக்கு பண்ணைகளைப் பத்தி நானும் கேள்வி பட்டிருக்கேன். தேக்கு மரம் நல்லா விளையற இடங்களா பார்த்துதான் தேக்கு பண்ணைகளை அமைச்சிருக்காங்க. ரொம்ப நவீனமான விவசாய முறைகளை எல்லாம் பயன்படுத்தறாங்க. இருபது வருஷம் கழிச்சி 1440 கன அடி தேக்குக்கு உத்திரவாதம் உண்டாம். அதோட மதிப்பே பல இலட்சங்களுக்கு குறையாம இருக்குமே' என்றதும் முருகேசன் நம்பிக்கையோடு பேசத் தொடங்கினான்.

'அது மட்டும் இல்லப்பா ! முதலீடு பண்ணினதும் தேக்கு வளர்ற நிலமும், நமக்கே சொந்தமாயிடுது. ஆறாவது, பன்னிரண்டாவது வருஷங்களில இடைக்கால வருமானமும் கிடைக்குமாம். இதுவரைக்கும் 12,000 பேர் அனுபவ் தேக்குப் பண்ணைகளிலே முதலீடு செய்திருக்காங்க' என்றான்.

'அப்புறம் என்னப்பா யோசனை? நீ எடுத்த முடிவு சரிதான் ! நல்ல படியா முதலீடு பண்ணு ! எப்படியோ... நீயும், நேரடியா இல்லாட்டியும், அனுபவ் மூலமாகவாவது விவசாயத்துக்கு வர்றியே! ரொம்ப சந்தோஷம்...!' என்றார் ரங்கசாமி.

அவரது குரலில் இருந்த மகிழ்ச்சியில், விவசாயத்தின் மீது அவருக்கு இருக்கும் பிடிப்பு மட்டுமின்றி மகனின் மீது இருக்கும் வாஞ்சையும் வெளிப்பட்டது.

கதாசிரியர் குறிப்பு : இது போன்ற இன்னும் பல அனுபவங்களை அறிய, தொடர்பு கொள்ளுங்கள் :

## "'அமுதசுரபி'யில் மணமகன் - மணமகள் தேவை." விளம்பரங்கள் வரவேற்கிறோம்.

ஆயிரக்கணக்கான வாசகர்களின் விருப்பத்திற்கிணங்க 'அமுதசுரபி'யில் 'மணமகன் - மணமகள் தேவை' பகுதி தொடங்கவிருப்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

எமது ஒரு பத்தி அளவில், அச்சில் 5 வரிகளுக்குள் அடங்குவதாக அனுப்பி வைக்க வேண்டும். 5 வரிகளுக்கு ரூ. 60/- கட்டணம் செலுத்த வேண்டும். அதிகபட்சம் 25 வார்த்தைகளுக்குள் அடங்குவதாக இருக்க வேண்டும். (விளம்பரதாரர்கள் தங்கள் முகவரியைத் தனியே எழுத வேண்டும். முகவரிகள் எமது அலுவலகத்தில் பாதுகாப்பாக வைக்கப்படும்)

ஒவ்வொரு விளம்பரத்திற்கும் அமுதசுரபி வரிசை எண் கொடுக்கப்படும். தொடர்பு கொள்பவர்களின் விவரம் விளம்பரதாரர்களுக்கு சேரச் சேர உடன் அனுப்பி வைக்கப்படும்.

விளம்பர வாசகத்தை அனுப்பும் போதே ரூ. 60/-க்கு மணி ஆர்டர் அல்லது டிராஃப்ட் 'ஸ்ரீராம் டிரஸ்ட்' என்ற பெயருக்கு அனுப்ப வேண்டும். (காசோலைகள் ஏற்கப்படமாட்டாது)

அனுப்ப வேண்டிய முகவரி : - ஸ்ரீராம் டிரஸ்ட், அமுதசுரபி, (மணமக்கள் தேவை பகுதி), 145, லிங்கச் செட்டி தெரு, சென்னை - 600 001.

## மணமகன் தேவை
## மணமகள் தேவை



• சோழிய வேளாளர், சைவம், பட்டதாரி, வயது 24/150, நல்ல குணமும், அழகும் நிறைந்த குடும்பப் பாங்கான பெண்ணிற்கு, அதே இனத்தைச் சேர்ந்த சைவமாகவும், நல்ல குணமும், பண்பும் மிக்க மணமகன் தேவை. ஜாதகம் மற்றும் குடும்ப விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும். விளம்பர எண் 2012.

• தெலுங்கு செட்டியார், 8 வீடு - எம்.ஏ., பி.எட்., தனியார் பள்ளி இடைநிலை ஆசிரியை, ரூ. 3000, வயது 30, சித்திரை, மணமகளுக்கு அரசுப் பணி அல்லது சொந்தத் தொழிலிலுள்ள மணமகன் தேவை. விளம்பர எண் 2013.

• Wanted non-srivatsa Iyengar Girl, son Thengalai-sathayam- 1962/5.10/B.com.,/ Clerk/TVS Group Finance Co.,/1600. Contact with horoscope. Advt No. 2014.

தொடர்பு கொள்ள விரும்புவோர் விளம்பர எண்ணைக் குறிப்பிட்டுக் கீழ்க்காணும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

'அமுதசுரபி',
தபால் பெட்டி எண் 5043,
145, லிங்க செட்டி தெரு,
சென்னை 600 001.



# கரண்ட்

கர்மயோகி

சகுனம் என்பது நம் நாட்டிற்குரியது. நல்ல சகுனம் நல்ல சூழலையும், கெட்ட சகுனம் தாழ்ந்த சூழலையும் குறிப்பிடுவதால் தாழ்ந்த சூழலில் ஆரம்பிக்கும் காரியம் பூர்த்தியாவதில்லை. உயர்ந்த சூழல் காரியத்தைப் பூர்த்தி செய்யும். பரம்பரையாக நாம் அறிந்த சகுனம் அநேகம். அவை ஒரு பெரிய உண்மையைக் குறிக்கின்றன. அன்னை எங்கும் போல இங்கும் அதைவிடப் பெரிய உண்மையைக் குறிக்கிறார். ஆனால் சகுனத்திற்குரிய சட்டத்திற்குள் அவர் செயல்படுகிறார். சட்டத்தை மீறியும் அவர் செயல்படுவதுண்டு. அது அரிது.

ஒரு பரந்த தத்துவ நோக்கோடு நாம் வாழ்க்கையைப் பார்க்கும்பொழுது சகுனமாக நாம் அறிவது 'நிறைகுடம்', ஆனால் அந்த நேரம் நம்மைச் சுற்றியுள்ள அத்தனை நபர்களும், நிகழ்ச்சிகளும், காதில் விழும் சொற்களும் 'நிறைகுடம்' குறிக்கும் அதே நிறைவை ஏதோ ஒரு வகையில் குறிப்பார்கள். குறிப்பிட்ட செயல்கள் தெளிவாக இருப்பதால், அவற்றையே சகுனம் என நாம் எடுத்துக் கொள்கிறோம்.

தன் சொத்துக்கு ஆபத்து வந்த பொழுது பார்க்கும் போஸ்டர், பேப்பர் தலையங்கம், காதில் விழும் சொற்கள், தன் நிலையைப் பிரதிபலிப்பதைக் கண்ட இளைஞர் ஒருவர் ஒரு நாள் காலையில் பேப்பரைப் பிரித்தார், "தீர்ப்பு, விடுதலை" என்றிருந்தது. வழக்கு கோர்ட்டுக்குப் போய் விடுமோ எனப் பயந்த நிலையில் இதைக் கண்டு திடுக்கிட்டார். கோர்ட்டுக்குப் போய் விடுதலை கிடைத்தது.

தீய சக்திகள் ஒருவருக்குத் தொந்தரவு கொடுக்கும்முன், அவர் சூழலைத் தாழ்த்தும். அதற்குரிய உபாயங்களில் ஒன்றாக கரண்ட்டை நிறுத்துவது என அன்னை குறிப்பிடுகிறார். 40 வருஷத்திற்குமுன் ஆசிரமம், பள்ளி, மைதானம் ஆகிய இடங்களில் கரண்ட் நிற்கக் கூடாது என்பதற்காக அன்னை ஒரு ஜெனரேட்டர் அமைத்து, அதன் பக்கத்தில் ஒரு ஸ்டூலில் ஒரு சாதகர் காலை 4.30 முதல் இரவு 11.00 வரை இருக்க ஏற்பாடு செய்தார்.

நம் வீட்டில் நடக்கும் செயலுக்கும், மற்ற எல்லா நிகழ்ச்சிகட்கும் தொடர்புண்டு. அதே போல் கரண்ட்டுக்கும் தொடர்புண்டு. நல்ல காரியங்கள் நடக்கும்பொழுது, மனம் நல்ல எண்ணத்தால் நிரம்பியபொழுது, தியானம் நடக்கும்பொழுது, சுமுகமாக இருக்கும்பொழுது, நல்லவர் வந்துள்ளபொழுது, கரண்ட் ஒரு பொழுதும் நிற்பதில்லை என்பதைக் கவனிக்கலாம். ஊரில் மின்சார இலாக்காவின் ஏற்பாட்டின்படி மின்வெட்டு தினமும் பலமுறை வரும் பொழுதும்கூட, மேற்சொன்னபடி நம் வீட்டில் கரண்ட் நிற்பதில்லை எனக் காணலாம்.

நாம் வெளியிலிருந்து கவலையாக வீட்டுக்கு வந்தால், கரண்ட் இல்லை எனக் கண்டு, நாம் கவலைப்பட்டு அதற்கு, நம் பயம் காரணம் எனப் புரிந்து பயத்தைக் கைவிட வேண்டும், கவலையை மறக்க வேண்டும் என்று மனம் முடிவு செய்த அதே நேரம் கரண்ட் வருவதைப் பார்க்கலாம். இன்னும் 3 மணி நேரம் கரண்ட் இருக்காது என்று அறிக்கை வந்திருந்தாலும், பயம் மனதை விட்டுப் போன நேரம் கரண்ட் வருவதைக் காணலாம். நாம், நம் அளவுக்கு மீறிய பெரிய திட்டங்களை மேற்கொள்ளும் சமயமுண்டு. அதுபோன்ற நாள்களில் அத் திட்டத்தை எடுத்து நினைத்தால், பேசினால், எழுதி

னால், கரண்ட் நிற்பதைக் காணலாம். திட்டம் சூழலில் உள்ள சக்தியை, தான் எடுத்துக் கொள்வதால் சூழல் தாழ்ந்து, அதைக் குறிக்கும் வகையில் கரண்ட் நிற்கும். நம் மனநிலை, மற்ற சூழ்நிலைகள் திட்டத்திற்குத் தகுந்த அளவு உயர்ந்த பின் அது போல் இருப்பதில்லை எனவும் காணலாம்.

பிரச்னையின் அளவுக்கும், கரண்ட் நிற்ப தின் முறைக்கும் தொடர்பிருப்பதையும் பார்க்க லாம். கரண்ட் நிற்கும்பொழுது நம் வீட்டில் மட்டும் நிற்பதுண்டு, நம் பகுதி முழுவதும்கூட இருட்டாவதுண்டு, ஊர் முழுவதும் கரண்ட் இல்லாமலிருக்கும், சில சமயம் தமிழ்நாடு முழுவதும் கரண்ட் இல்லை என்று தெரியும். நாம் கருதும் பிரச்னை சிறியதானால், நம்மை மட்டும் பாதிப்பதானால், அல்லது நம் சரக்குக்கு ஊரில் பஞ்சம் வரப் போவதானால், அதன் அளவு கரண்ட் இல்லாமல் போகும் பாணியால் குறிக்கப்படுவதைக் காணலாம்.

சிலசமயம், அநாவசியமான பயம் பீடிக்கும். வெளியூர் போனவர் விபத்தில் மாட்டிக் கொண்டதாக மனம் நினைக்கும். மனம் பயத் தால் பீடிக்கப்பட்டவருக்கு அடிக்கடி இது போன்று தோன்றும். இந்த பயம் ஆபத்தை அழைக்கவல்லது. மனம் நினைத்த அதே விநாடி கரண்ட் நிற்பதுண்டு. அது பயத்தை வலுப்படுத்தும். அந்த நேரம், "இதுபோல் பயம் எழுவது அறியாமை" என்று நமக்கு நாமே சொல்லிக் கொண்டால் பலருக்கு பயம் போய் விடும். சிலருக்குப் போகாது. "நான் அன்னை மீது நம்பிக்கையுள்ளவன். பயம் தவறு" என நினைத்து பயம் போக அன்னையை அழைத் தால் பயம் மனத்தை விட்டுப் போகும், அதே செகண்ட் கரண்ட் வரும். எந்தத் தவறான எண்ணமும், பயமும், ஆழ்ந்த கவலையும், சந்தேகமும், மனத்தை ஆழ்ந்து தொடும் நேரம் கரண்ட் நிற்பதுண்டு. அதை மாற்ற முடியும். மாற்றினால் கரண்ட் வரும்.

சாதாரணமாக கரண்ட் உள்ள நேரத்தில் உற்சாகமாக, சந்தோஷமாக, நல்ல விஷயங் களைப் பேசினால் வோல்டேஜ் அதிகமாகி விளக்குகள் அதிகப்பிரகாசமாக எரியும். நம்மைப் பொறுத்தவரை, கரண்ட்டுக்கும் நமக்கும் உள்ள தொடர்பை எளிதில் காணலாம். ஒரு நாலைந்து விஷயங்கள் - ஆபீஸ், குழந்தைகள், மாமியார், கடன்கொடுத்தவர் - மட்டும் நம் வீட்டில் கரண்ட் நிற்கக் காரணமாக இருப்பதை நாம் காணலாம். நம் மனத்தை ஆழ்ந்து தொடுபவை நாலோ, ஐந்தோ, பத்தோ விஷயங்களிருக்கும். அவற்றுள் ஒன்று உள் ளிருந்து பயமாகவோ, கவலையாகவோ எழா மல் நம் வீட்டில் கரண்ட் போவதில்லை என்ப தைக் கவனிப்பவர்கள் காணலாம். அதை மனதில் மாற்றினால் கரண்ட் வருவதும் தெரியும்.

ஒரு தகராறான விஷயம் - மருமகள் சண்டை, கடன் பாக்கி, பிள்ளையின் படிப்பு - முக்கிய மாகக் கருதப்படும் பொழுதெல்லாம் கரண்ட் நிற்பதைக் கண்டால், அடுத்த முறை, அந்த விஷயத்தைப் பேசுமுன் கரண்ட் நிற்கக் கூடாது என்ற பிரார்த்தனை அந்த விஷயம் பேசி முடியும் வரை கரண்ட்டை நிற்க விடாது. ஆனால் பிரச்னை வலுவானதானால் - பிரார்த் தனையைவிட வலுவானதானால் அது பேசப் படும் முன்னரோ, பேசிமுடித்த பின்னரோ, கரண்ட் நிற்கும்.

மேல் நாடுகளில் கரண்ட் நிற்பதை அவர்கள் கண்டதில்லை என்பார்கள். அபூர்வமான நிகழ்ச்சி அது. பக்தர் ஒருவருக்கு தொழி லில் வாடிக்கைக்காரர் (Client) அளவு கடந்த பொய் சொல்பவராக அமைந்தார். எடுத்த வேலை முடிந்து விட்டது. பக்தருக்கு மேலும் வாடிக்கைக்காரருக்கு உதவ ஆசை. ஆசை அதிகமான பொழுது வாடிக்கைக்காரர் ஏற் கெனவே அதிக பலன் பெற்றதால், பக்தருடைய உதவியை விரும்பி நாடினார். பக்தர் ஆபீசில் 3 மணி நேரம் கரண்ட் இல்லை! அவர்கள் சரித்திரத்திலில்லாதது கரண்ட் நிற்பது. பக்தர் வாடிக்கைக்காரரை மறந்து விட்டார்.

ஒரு மேலை நாட்டு அம்மணி அன்னைமீது பக்தியால் தன் குழந்தைகளுடன் புதுவையில் வந்து தங்கியிருந்தார். ஒரு முக்கியமான சாதகரை இப்பெண் சந்திக்கப் பல நாள்களாக முயன்று வருகிறார். முடிவில் ஒருநாள் அவரைச் சந்திக்க நேரம் கொடுத்தார்கள். அவர் வீட்டில் 3 நாளாகவே கரண்ட் இல்லை. எலக்ட்ரிஷியன் வந்து கொஞ்சம் வேலை செய்ய வேண்டும். டிபார்ட்மெண்ட் உதவி வேண்டும். வெளிநாட்டவருக்கு இங்குள்ள ஊழியர் சூட்சும பாஷை புரியாது. வருகிறேன் என்றால் வருவார் என எதிர்பார்ப்பார்கள். 3 நாள் இதுபோல் போய்விட்டது. கிடைத்த சந்தர்ப்பம் அரிது. வருவதாகச் சொன்ன எலக்ட்ரிஷியனை எதிர் பார்த்து தினமும் அப்பெண் வீட்டை விட்டுப் போகாமலிருக்கிறார்கள். இந்தச் சந்திப்பை ஏற்படுத்தியவர் அப்பெண் வீட்டுக்கு வந்து நிலைமையை அறிந்தார். "அன்னைக்கு சமர்ப் பணம் செய்தீர்களா?" என்று பெண்ணை விசா ரித்தார். அது தனக்குத் தோன்றவில்லை என்றவர் ஒரு நிமிஷம் கண்ணை மூடினார். அவர் மகள் "அம்மா! எலக்ட்ரிஷியன் வந்திருக்

கிறார்" எனக் குரல் கொடுத்தார். சற்று நேரத்தில் கரண்ட்டும் வந்துவிட்டது.

ஓர் ஆபீசில் வேலை செய்யும் இளைஞன். அதிகாரி தன் நல்ல குணத்தால் இளைஞனுக்கு உதவ முயன்றார். இளைஞனுக்கு முக்கிய குணம் கிராக்கி செய்வது, அடுத்தாற் போன்று வக்கிரம். ஒரு நல்ல திட்டத்தைப் பையனிடம் அதிகாரி சொன்னார். பையன் தன் குண விசேஷத்தை முழுவதும் வெளிப்படுத்தினான். எந்த அதிகாரியும் வக்கிரமான இளைஞனுக்கு வலிந்து உதவமாட்டார். 3 நாள் அதிகாரியும், பையனும் சந்திக்கும் பொழுதெல்லாம் திட்டத் தைப் பற்றி, பழைய பாணியிலேயே பேசிக் கொண்டிருந்தனர். மூன்றாம் நாள் அதிகாரி எப்படியும் இப் பையன் திட்டத்தால் பலன் பெற வேண்டும் என நினைத்தார். கரண்ட் திடீர் என நின்றது. தகுதியில்லாத பையனை வற்புறுத்தி நல்லது செய்வது தவறு என்பதால் கரண்ட் போய்விட்டது என அதிகாரி பக்தராதலால் அறிந்தார். அவரால் மனதை மாற்ற முடிய வில்லை. 10 மணி நேரமாகியும் கரண்ட் வர வில்லை. இரவு தூக்கமும் வரவில்லை. நாம் செய்யும் தவற்றைக் கைவிட வேண்டும் எனப் படுக்கையிலிருந்தபடி அதிகாரி நினைத்த அதே நேரம் கரண்ட் வந்தது.

மனிதர்கள் பலவிதம். எதாவது கேட்டபடி யிருப்பவர்கள் ஒருவகை. எதையுமே கேட்க முடியாதவர் அடுத்த வகை. கேட்கமாட் டார்கள், ஆனால் நாமே கொடுத்தால் வாங்கிக் கொள்வது இன்னொரு வகை. அதில் மற்றொரு வகையினர் கேட்கமாட்டார்கள், ஆனால் தன் கையில் எந்தக் காரணத்தால் வந்த பொருளை யும் தன்பொருளாக நினைத்துத் திருப்பிக் கொடுக்க மாட்டார்கள். அதுபோன்ற ஒரு வரிடம் பக்தர் தன் பொருளைக் கொஞ்சகால உபயோகத்திற்கு கொடுத்திருந்தார். மற்றொரு நண்பரை அப்பொருளைப் பார்த்து வரச் சொல்லலாம் என ஒருநாள் நினைத்தார். நண்பர் காட்டமாட்டார் என்பதால், அதை மறந்து விட்டார். பிறகு மனதை மாற்றிக் கொண்டுநண்பருக்குக்கடிதமெழுதினார். "அப் பொருளை..." என எழுதியவுடன் கரண்ட் நின்றது. காரணம் புரிந்ததால் கடிதத்தை முடிக்காமல் எறிந்து விட்டார். அவனைக் கேட்க வேண்டாம் என நினைத்தார். ஐந்து நிமிஷம் கழித்து கரண்ட் வந்தது.

முதலாளிக்கு மானேஜர்மீது பிரியம், அளவு கடந்த பிரியமும்கூட, மானேஜருக்கு துரோக மனப்பான்மை. முதலாளியின் சொத்தை முழு வதுமாக எடுத்துப் போக வேண்டும் என்ற ஆசை. மானேஜரைத் தம்பிபோல் நடத்தினார்.

மானேஜர் சம்பந்தப்பட்ட காரியங்கள் தலை கீழாகப் போவதைக் கண்டார். லேசாக அவர் அபிப்பிராயம் புரிந்தது. ஆனால் முதலாளி மானேஜருக்குப் புதிய விசேஷ சலுகைககள் கொடுக்கத் தொடங்கினார். ஒவ்வொரு செய லுக்கும் நேர் எதிரான பலன் வருவதைக் கண்டார். இருந்தாலும் மானேஜர் மீதுள்ள பிரியம் குறையவில்லை. அன்னை அருளால் வீட்டில் எப்பொழுதும் கரண்ட் நிற்பதில்லை. மானேஜர் சம்பந்தப்பட்ட இடங்களில் கரண்ட் நிற்பதை முதலாளி கண்டார். பிறகு வீட்டில் மானேஜர் சம்பந்தப்படாத இடங்களில் கரண்ட் நிற்பதேயில்லை, கரண்ட் நின்றால் அங்கு மானேஜர் வந்துள்ளார் எனக் கண்டார்.

மானேஜருக்கு மனம் தீவிரமாகி, முத லாளிக்கு நஷ்டம் ஏற்படுத்துவதில் சந்தோஷம் பெற்றார். வேலைகளைச் சரிவரச் செய்வ தில்லை. ஒரு சமயம் சரக்கு விற்பனையின் போது வாங்க வந்த வியாபாரி சரக்கை ரூபாய் 70,000க்குக் கேட்டான். மானேஜர் அதை ரூபாய் 60,000க்கு விற்க வேண்டும் என ஒரே பிடி வாதமாய் இருந்தார். வருமான வரி ஆபீஸில் உரிய காலத்தில் தஸ்தாவேஜுகளைத் தாக்கல் செய்வதில்லை. மூன்று வருஷம் தொடர்ந்து முக்கிய தஸ்தாவேஜுகளைக் காலம் கடந்து தாக்கல் செய்ததால் லட்ச ரூபாய்க்கு மேல் வரி போட்டனர். முதலாளிக்குக் கஷ்டம், நஷ்டம் வந்தால் மானேஜர் சிரிப்பார். இதன் பின்னும் முதலாளியால் மானேஜரை அனுப்ப முடிய வில்லை. அப்படியாவது முதலாளிக்குத் தொந் தரவு கொடுக்க வேண்டும் என்ற எண்ணம் தீவிரமாயிற்று. அவரது எண்ணம் செயல் படவும் தொடங்கிற்று. தொழிலாளிகள் தகராறு செய்தனர்.

மானேஜர் நியமித்த ஆபீசர்கள், அவருக்கு வேண்டிய குமாஸ்தாக்கள், அவர் பார்க்கும் வேலைகள், முதலாளியின் கழுத்துக்குக் கத்தி யாய் அமைந்தன. எந்தச் சொத்தை மானேஜர் எடுத்துக் கொள்ள ஆசைப்பட்டாரோ அதில் ஊர் தகராறு, சட்டப் பிரச்னை, உரிமைப் பிரச்னை, வருமானத்தில் கோளாறு வந்து, முடிவில் அரெஸ்ட் வாரண்ட்டும் வந்தது. கரண்ட் இந்த சமயம் வரப் போகும் ஆபத்தை யும், வந்துள்ள ஆபத்தின் அளவையும் காண் பிக்க, தர்மாமீட்டர் பாதரஸம் போல் செயல் பட்டது. மானேஜர் சம்பந்தப்படாமல் கரண்ட் நிற்பதில்லை என்ற நிலை ஏற்பட்டது.

ரூபாய் எழுபதாயிரம் மதிப்புள்ள சரக்கை ரூபாய் அறுபதாயிரத்திற்கு விற்க மானேஜர் முனைந்தால் கரண்ட் நிற்கும். அது வீடுவரை இருக்கும். சொத்தின்மீது ஆசைவந்தால், மானேஜர் அந்தக் காரியத்தை முடிக்கும்வரை அரை நாள் கரண்ட் வராது. அது காலனி முழுவதும் கரண்ட் இல்லை என்றிருக்கும். முதலாளி பையனைத் தன் வசமாக்கிக் கொண் டார் மானேஜர். அவனுக்குத் தன் பெண்ணைக் கொடுத்து முழுசொத்தையும் எடுத்துக் கொள்ள அவர் முடிவு செய்தார். அன்று முதலாளி வீட்டிற்கு வந்ததும் கரண்ட் போய் விட்டது. தமிழ் நாடு முழுவதும் போய் விட்டது. மூன்று நாள் வரையும் வரவில்லை. ஒரு வழியாக மானேஜர் முதலாளியை விட்டுப் போனார். கரண்ட் அதன்பின் ஒரே ஒரு முறையும் நிற்ப தில்லை. மானேஜர் சம்பந்தமான காரியம் என்றால் கரண்ட் நிற்காமலிருக்காது.

Hawker தலையில் சரக்கு எடுத்து வருபவன். சேவை செய்ய ஒரு பெரிய ஸ்தாபனத்தை அண்டினான். ஸ்தாபனம் பண்பானவர்களால் நிறைந்திருந்ததைக் கண்டான். ஸ்தாபனத்தில் தலைவர் பதவி காலியாக இருந்தது. அதை முக்கியமானவர் நிரப்பப் பிரியப்படவில்லை. இவனுக்குத் தலைவராக வேண்டும் என்று தோன்றியது. ஆடம்பரமான சேவைகளைச் செய்தான். பிறகு காணிக்கை கொடுத்தான். காணிக்கை ஆபீசினால் வந்தது. பூஜை நேரத்தில் எப்பொழுதும் கரண்ட் போனதில்லை என்பதற்கு மாறாக கரண்ட் நின்றது. பிறகு காணிக்கையைத் திரும்பக் கேட்டான். இந்த இடைவெளியில் அந்த ஸ்தாபனத்தில் அவன் தொடர்பு எதுவானாலும் கரண்ட் அறிவித்து விடும். காலையில் கரண்ட் நின்றால், அனை வரும் அவனை எதிர்பார்ப்பார்கள். அரை மணியில் வருவான். தவறான எண்ணம் சூழ் நிலையைத் தாழ்த்தும். கரண்ட் அதை அறி விக்கும்.

சிஷ்யனுக்கு எண்ணம் மாறி குரு தனக்கு சிஷ்யனாக வேண்டும் என்ற நினைப்பு வந்து விட்டது. அவன் கலந்து கொள்ளும் பூஜைகளில் கரண்ட் தவறாமல் போகும். கரண்ட் மற்ற நேரங்களில் எப்பொழுது நின்றாலும், நிற்கா விட்டாலும், பூஜையில் போனதேயில்லை. சிஷ்யனுக்கு குதர்க்கம் மனதில் வந்து விட்டது. அவனிடமிருந்து தபால் வந்தால், தபால் வீட்டில் நுழைந்ததும் கரண்ட் போகும். ஒரு முறை சிஷ்யன் தன் பெருமையை உணர்ந்து அதை நிலைநிறுத்த முயன்றான். குரு வீட்டில் அதுபோன்ற நிகழ்ச்சிகள் பல நடந்தன. உயிருக்கு ஆபத்து வந்தது. இரண்டு மூன்று முறை வந்தது. உடைமை போயிற்று. சுமார் 30 நாளில் 15 நாள் கரண்ட் நிற்கத் தொடங்கி 3 மணி நேரம், 5 மணி நேரம் கரண்ட் இல்லை என்ற நிலை ஏற்பட்டு முடிவாக 48 மணி

கரண்ட் இல்லை என்று நடந்தது. சிஷ்யன் தன் எண்ணம் பலிக்காது என்றறிந்து மனதை மாற்றிக் கொண்டபின் நிலைமை மாறியது.

பிறப்பாலும், வளர்ப்பாலும், நினைவாலும் தாழ்ந்தவர் திறமையாலும் அறிவாலும் உயர்ந்த பதவிக்கு வந்துவிட்டார். இவருடைய நண்பர் அன்னை பக்தரானார். நட்பு உயர்ந்தது. (Consciousness) ஜீவிய நிலையில் அதிக வித்தியாசம் ஏற்பட்டது. பக்தரால் நண்பரை விட முடியவில்லை. இனிய, விஸ்வாசமான, உயர்ந்த, நெகிழ்ந்த நட்பு, ஆனால் ஜீவியம் தாழ்ந்தது. அவர் கடிதத்தைக் கையில் தொட்ட வுடன் கரண்ட் நிற்கும். அவர் பக்தர் வீட்டிற்கு வரத் தன்னூரில் புறப்பட்டால், புறப்பட்ட நேரத்திலிருந்து கரண்ட் பக்தர் வீட்டில் போய் விடும். அவர் வந்து இருக்கும் வரை கரண்ட் வராது. போனவுடன் கரண்ட் வரும்.

பார்ட்னர். எல்லா வகையிலும் உண்மை யானவர். பிரபலம் மட்டும் தனக்கு மட்டும் வர வேண்டும். முதலாளிக்கு வரக் கூடாது. கம் பெனிக்கு வரக் கூடாது என்ற கொள்கை யுடையவர். வியாபார விஷயமாக வெளியூர் போய், கம்பெனிக்கு போனில் பேசினால், ஒருமுறை தவறாது கரண்ட் நின்றுவிடும். கரண்ட் மனத்தின் அபிப்பிராயத்தைத் தவறாது காட்டும்.

கெட்ட செய்தி வருமுன் சில சமயம் கரண்ட் நிற்கும். இதைப் புரிந்து கொண்டவர் பிரார்த் தனை செய்யத் தொடங்கினார். கெட்ட செய்தி வரவில்லை. ஒவ்வொரு முறையும் கரண்ட் நின்றால் பிரார்த்தனையை பக்தர் மேற் கொண்டார். தீவிரமாகவும் மேற்கொண்டார். கெட்ட செய்தி வரவில்லை. நல்ல செய்தி வந்தது. பிரார்த்தனை கெட்ட செய்தியை ரத்து செய்து, நல்ல செய்தியாக்கும் திறனுடையது. அதற்குப் பிரார்த்தனை வலுவானதாக இருக்க வேண்டும்.

பக்தர் வீட்டுச் சிறு குழந்தை. அடிக்கடி ஒரு வீட்டில் போய் விளையாடும். அந்த வீட்டு மனிதருக்கு பக்தர் வீட்டில் தொடர்புண்டு. எதிரில் பவ்யமாக இருப்பார்கள். பின்னால் கேலியாகப் பேசுவார்கள். கேவலமாகவும் பேசுவார்கள். குழந்தை வந்தால் கேலி. போன பின் கேலியான ஆரவாரம். அவர்கள் குழந்தை மீதுள்ள ஒளியையும், அன்னை ஜீவியத்தையும் அறியவில்லை. குழந்தைக்கு சூட்சுமம் புரிய வழியில்லை. புறத்தோற்றத்தால் குழந்தை அங்கு பிரியமாகப் போய்க் கொண்டிருந்தது. கேலி உச்ச கட்டத்தை எட்டியது. விஷயம் தெரிந்தவர்கள் அதுபோல் கேலி செய்வது சரி யில்லை என்று எச்சரித்தனர். கேலி அதிக மாயிற்று. ஒருநாள் அந்த வீட்டிலுள்ள அனை வருக்கும் கரண்ட்டில் உயிருக்கு முடிவான ஆபத்து வந்தது. அப்பொழுதும் அவர்கள் தங்கள் தவற்றை உணரவில்லை. உயிருக்கு ஆபத்து வந்ததால், கேலி தானே குறைந்து மறைந்துவிட்டது. குழந்தை வருவதும் தானே நின்று விட்டது. குழந்தையின் பிரியம் வந்த ஆபத்தைத் தவிர்த்தது.

கரண்ட் இல்லாத நேரத்தில் நல்லெண்ணம் உள்ளவர் வந்தால், அவர் நுழைந்தவுடன் கரண்ட் வருவதைப் பார்க்கலாம். கரண்ட், நிகழ்ச்சிளையும், மனநிலையையும் தவறாமல் பிரதிபலிக்கும். ஆனால் அதுவே முடிவல்ல. நாம் அந்த அறிகுறியை ஏற்றுக்கொண்டால் அது பலிக்கும். ஏற்றுக் கொள்ளாவிட்டால் நம் எண்ணத்திற்கு அறிகுறியைவிட அதிக சக்தியிருப்பதால் அது பலிக்காது. பிரார்த் தனையால் நாம் அதை மாற்றலாம்.

கரண்ட் தவறாமல் உள்ளத்தைக் காட்டும். ஆனால் அது முடிவல்ல. நம் மனமே முடி வானது. பிரார்த்தனை அதை மாற்றவல்லது. அன்னையே முடிவு, அறிகுறியல்ல.

# சங்கப் பலகை

## இரண்டும் ஒன்றே

(ஆசிரியர் - கவிஞர் வி.மு. உலகநாதன். வாசுகி பதிப்பகம், 9, தொட்டிக்கலைக் குமரப்ப முதலித்தெரு, சூளை, சென்னை - 600 112. பக்கங்கள்- 208. விலை - ரூ. 30.00)

"இறைவன் ஒருவனே" என்று தொடங்கி, அவன் "எங்கும் நிறைந்த இறைவனே" என்று முடித்துத் தம் கருத்தை இந்நூல் வழியே வெளிப்படுத்தியுள்ளார் கவிஞர் வி.மு. உலகநாதன்.

இந்நூலைப் படிப்பதன் மூலம், அனைத்து சமயங்களும் கூறும் 'இறைவன் ஒருவனே' என்பதை உணர்ந்து, மக்கள் அனைவரும் வேற்றுமையின்றி வாழ வழி கோலும் என நம்பலாம்.

மத சமயப் பூசல்கள் ஏற்பட்டுள்ள இந்தக் காலத்துக்கு இந்நூல் மிகவும் வரவேற்கத்தக்கதாகும்.

—ப. இராமலிங்கம்

## ஸ்ரீ பாஷ்யஸாரம்

(ஆசிரியர் - டி.எஸ். ராஜகோபாலன். வெளியீடு - ஆழ்வார்கள் அமுத நிலையம், 37, சௌத் கூவம் ரோடு, கோமளேசுவரன் பேட்டை, சென்னை - 20. பக்கங்கள் - 140. விலை - ரூ. 12.00).

நாலாயிர திவ்யப் பிரபந்த உரைகள், பூர்வாசார்ய வரலாறுகள் போன்ற நூல்களை வெளியிட்டுத் தொண்டு புரிந்து வரும் ஆழ்வார்கள் அமுத நிலையத்தார் சற்று கடினமான தத்துவ ஆராய்ச்சி நூல்களையும் வெளியிடத் தொடங்கி உள்ளனர்.

வியாசர் அருளிய பிரம்ம சூத்திரத்துக்கு விளக்கம் கண்ட ஆசாரியர்களான ஸ்ரீ சங்கரர், ஸ்ரீ ராமானுஜர், ஸ்ரீ மத்வர் போன்றவர்களின் கருத்துகளின் அடிப்படையில் எழுந்த தத்துவ தரிசனங்களே அத்வைதம், விசிஷ்டாத்வைதம், துவைதம் என்பவை யாகும்.

உள்ளது ஒரே தத்துவம் என்றார் சங்கரர். மற்றிரண்டையும் தகுதிகளை உடைய ஒன்று என்றார் இராமானுஜர். ஒருமை இல்லை. இருப்பவை என்றும் வேறு வேறானவை என்றார் மத்வாச்சாரியர். இவற்றில் ஸ்ரீ போதாயன விருத்தியைத் தழுவி எழுதிய ஸ்ரீ ராமானுஜரின் விளக்கம் ஸ்ரீ பாஷ்யம் என்று பெயர் பெற்று, அவருக்கு 'ஸ்ரீபாஷ்யகாரர்' என்ற விருதையும் பெற்றுத்தந்தது.

வடமொழி பயிற்சியின்றி பாஷ்யங்களின் பொருளை அறிதல் இயலாது. அதுவும் தக்க ஆசாரியர்களிடம் பலமுறை கேட்டு கேட்டு, உய்த்துணர வேண்டிய நூல் ஸ்ரீ பாஷ்யம்.

எதிராளியின் வாதத்தை மறுத்து, தன் வாதத்தைக் கூறும் முறையில் இந்நூல் அமைந்திருப்பதால், எதிர்த்தரப்பு வாதங்களை அறிவது அவசியம்.

மூலசூத்திரங்களின் மொழி பெயர்ப்பைத் தந்து விளக்கங்களைத் தருவதை ஆசிரியர் ஏனோ தவிர்த்திருக்கிறார். ஸ்ரீ பாஷ்யம் என்ன சொல்கிறது என்பதை ஒருவாறு அறிந்து பின் விரிவான நூல்களைப் படிக்கத் தூண்டும் நூலாக இதைக் கொள்ளலாம். மிகுந்த முயற்சியுடன் ஆசிரியர் உருவாக்கியுள்ள இந்நூல் பாமரர்களுக்குப் புரிவது கஷ்டமே சமய ஆராய்ச்சியாளர்களுக்கு ஓரளவு உதவக்கூடும்.

—பாரதி சுராஜ்

## தியான யோகம்

(ஆசிரியர் - யோகாசார்யா. S. ஜனார்தன். வெளியீடு - அருள்மிகு அம்மன் பதிப்பகம், 8. கங்கையம்மன் கோயில் தெரு, இராயப்பேட்டை, சென்னை - 600 014. விலை - ரூ. 19.00)

உடல்நலமும், மனநலமும் பெற உதவும் யோகங்களில், அஷ்டாங்க யோகத்தின் ஏழாம் நிலையே, தியான யோகமாகும். வேதாந்தத் தொகையையும், தொண்ணூற்றாறு வகைத் தத்துவங்களையும் சுட்டிக்காட்டும் இடங்கள் அருமை. நம்மை நாமே தூய்மைப்படுத்திக் கொண்டு தியானம் செய்வதால் உண்டாகும் நன்மைகளான எண் வகைச் சித்திகளை இந்நூல் எடுத்துரைக்கின்றது.

—தாமரைக் கண்ணன்

## சரித்திரத்தின் கண்ணீர்

(ஆசிரியர் - தங்கவயல் லோகிதாசன். வெளியீடு - கலைவாணன் பதிப்பகம், அன்பு காலனி, சென்னை - 35. பக்கங்கள் - 104. விலை ரூ. 14.00).

வரலாறுகளை வடித்துக் காட்டுகின்ற வான்புகழ்த் தமிழ்ச் சமுதாயம் இன்று ஒன்றையொன்று மோதிச் சண்டையிட்டுச் சாகிறதே! என்று நினைந்து நினைந்து கலங்கிப் போகும் ஆசிரியரின் நினைவுகளில் நின்ற சில கண்ணீர்த்துளிகளை வசன கவிதைகளாக வடித்துள்ளார் இந்நூலில். இதில் மங்கையர்க்கரசி, ஔவை, யசோதரை, கண்ணகி, மாதேவி போன்றோரும் அடங்குவர்.

—பின்னலூர் மு. விவேகானந்தன்

## கோதை தந்த கீதை

## (GODHANJALI)

(ஆசிரியர் - சுபத்ரா கோவிந்தராஜன். வெளியீடு - ஸ்ரீ சரணம் பப்ளிகேஷன்ஸ் 10, திருவேங்கடம் தெரு எக்ஸ்டென்ஷன், ராஜா அண்ணாமலைபுரம், சென்னை - 600 028. பக்கங்கள் - 160. ஆங்கிலம் - 166. விலை - ரூ. 55.00)

கண்ணன் அருளிய கீதை உபதேசத்திற்கு ஒப்ப ஸ்ரீ ஆண்டாள் அருளிய திருப்பாவைப் பாசுரங்களிலும் கருத்துகள் செழிப்புடையவை.

எளிய தமிழிலும், ஆங்கிலத்திலும் திருப்பாவைப் பாசுரத்தின் ஒவ்வொரு வார்த்தையையும் எடுத்துக் கொண்டு அதற்கான உட்கருத்தையும் விளக்கியிருக்கும் முயற்சி சிறப்புடையது.

இதுபற்றி விளக்கவுரையாற்றிய கருத்துகள் அனைத்தும் ஸ்ரீமத் ஆண்டவன் சுவாமிகளுடையது என்றாலும் ஆசிரியர் செம்மையாய் இதைக் கையாண்டு படிக்கும் அளவில் தந்திருப்பது சிறந்த முயற்சி.

—டி.ஆர்.ஜி.

# சங்கப் பலகை

## "எரி நெருப்பில் இடைபாதை இல்லை"

(ஆசிரியர் - எஸ். அகத்தியர். வெளியீடு - நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., 41-பி, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், சென்னை - 98. விலை - ரூ. 35.00)

"எரிநெருப்பில் இடைபாதை இல்லை" ஓர் அற்புதப் படைப்பு. தெள்ளிய அழகு தமிழில், யாழ்ப்பாண மண்ணின் தாழ்த்தப்பட்ட மக்களின் வாழ்க்கையும், அங்கு பேசப்படும் தமிழும் மிக அருமை. 1988இல் ஈழநாடு நடத்திய அகில இலங்கை நாவலில் பரிசு பெற்ற நாவல் இது.

## "ஒரு வழிப் பாதை"

(ஆசிரியர் - பாலகுமாரன். வெளியீடு - விசா பப்ளிகேஷன்ஸ், 55, வெங்கட் நாராயணா சாலை, தி. நகர், சென்னை - 17. விலை - ரூ. 27.00)

பாலகுமாரனின் அற்புத நாவல் இது. வாழ்க்கையின் உண்மையான அர்த்தம் இந்த நாவல் மூலம் புரிகிறது. உண்மையில் "உலகம் அமைதியானது; மனிதனைத் தவிர அனைத்தும் மிகமிக அமைதியானவையே".

## கற்பூரக் காற்று

(ஆசிரியர் - அனுராதா ரமணன். வெளியீடு - திருமகள் நிலையம், 55, வெங்கட் நாராயணா ரோடு, தி. நகர், சென்னை - 17. விலை - ரூ. 20.00).

புத்தகத்தில் உள்ள இருகதைகளும் பெண்களுக்காகப் படைக்கப்பட்டவை.

எவ்வளவுதான் கஷ்டங்கள் வந்தாலும், அதனைப் பொறுமையுடன் எதிர் கொண்டால், நல்லதோர் எதிர்காலம் கிட்டும் என்பதற்கு பேபியின் வாழ்க்கை ஓர் உதாரணம்.

பெண்ணுக்கு அழகு என்றுமே நிரந்தரமன்று. அழகினால் மற்றவர்களின்பால் தாழ்வு மனப்பான்மை ஏற்படுவதுடன், குடும்பமே பிரியும் நிலையும் ஏற்படும். நல்ல இரு நாவல்கள்.

## "ஒரு திருமணம் நள்ளிரவில் நிச்சயிக்கப்படுகிறது"

(ஆசிரியர் - தஞ்சை செல்வன். வெளியீடு - மணிமேகலைப் பிரசுரம், 4, தணிகாசலம் சாலை, தி.நகர், சென்னை - 17. விலை - ரூ. 27.00)

அனைத்துச் சிறுகதைகளும் அருமை. மனதில் ஏற்படும் உணர்வுகளை, கற்பனையும் சேர்த்துக் கதைகளாகப் படைத்துள்ளார்.

—எம். சகுந்தலா தேவி

## மன்னிக்க முடியாத மனிதர்கள்

(ஆசிரியர் - கவிஞர் புவனா. வெளியீடு - மணிமேகலைப் பிரசுரம், சென்னை - 600 017. பக்கங்கள் - 80. விலை - ரூ. 11.00).

"ஆயுள் கைதிகள் இருவரின் அறிமுகப்படலம்" என்று திருமணத்தையும்,

"வேலியல்ல... சுமைகளையெல்லாம் சுமப்பதற்காக கொண்டவன் கொடுத்த கூலி" என்று தாலியையும் பாடும் இக்கவியின் பாடல்களில் பெண்மையின் ஏக்கம், எதிர்பார்ப்பு, ஏமாற்றம், இதயத் துடிப்பு எல்லாம் நாட்டியமாடுகிறது. இக்கவிதைத் தொகுப்பில் கவிதைகளைவிட நிகழ்ச்சிகளே அதிகம் நிழலாடுகின்றன.

## அலங்கா நல்லூர் அப்புசாமி

(ஆசிரியர் - பாக்கியம் ராமசாமி. வெளியீடு - மணிமேகலைப் பிரசுரம், சென்னை - 600 017. பக்கங்கள் - 116. விலை - 16.00).

நகைச்சுவை உணர்வு அருகிவரும் இந்நாளில் நகைச்சுவையாகப் பேசுவதைவிட எழுதுவது மிகவும் சிரமம். அந்த ஆதங்கத்தை ஓரளவு போக்கும் வகையில் பாக்கியம் ராமசாமி எழுதியுள்ள ஆறு சிறுகதைகளும் படித்து மகிழத்தக்கன. கதையம்சத்தோடு சமுதாயக் குற்றங்களையும் எளிமையாகச் சாடுவது ஆசிரியரின் எழுத்துக்குக் கிடைத்த பத்திரிகை அனுபவம் போலும்.

—பின்னலூர் மு. விவேகானந்தன்

## வேதாளம் சொன்ன கதைகள்

(ஆசிரியர் - ஏ.எஸ். வழித்துணை ராமன், சாந்தி நிலையம், 108, உஸ்மான் சாலை, தி.நகர், சென்னை - 17. விலை ரூ. 18.00).

விக்ரமாதித்யனுக்கு வேதாளம் சொன்னதாக சில சுவாரஸ்யமான கதைகளைக் குறிப்பிட்டிருக்கிறார் ஆசிரியர். இந்த வகையில் எத்தனையோ நூல்கள் வந்துவிட்டாலும் இதுவும் சுவையாய்த்தான் இருக்கிறது. இந்தக் கதைகள் இதுவரையில் எதிலுமே வெளி வந்ததில்லை என்று ஆசிரியர் குறிப்பிட்டிருக்கிறார். காதல் கற்பு போன்ற விஷயங்களை விவாதிக்கும்போது இவை பெரியவர்களுக்கான கதைகள் என்று புரிந்தாலும், வேதாளம் கேட்கும் கேள்விகளில் சில குழந்தைகளும் பதில் சொல்லுமாறு அமைந்தவை.

## குழந்தையின் முதல் மூன்று ஆண்டுகள்

(ஆசிரியர் - அருண நடராஜன் எம்.ஏ., எம்.எட்., காமதேனு பதிப்பகம், 67 ஏ, ஒட்டக்கூத்தர் தெரு, மாமல்லன் நகர், காஞ்சிபுரம் - 631502)

புதிய தாய்மார்களுக்கு மிகவும் பயனளிக்கும் புத்தகம். பெரிய பெரிய வளவள கட்டுரைகளாய்க் கொடுத்து சிரமப்படுத்தாமல் சின்னஞ்சிறு குறிப்புகளைத் துணுக்கு துணுக்காகக் கொடுத்திருக்கும் வகை மிகவும் வசதியானது. சில குறிப்புகள் அனைவருக்குமே தெரிந்ததுதான் என்றாலும் பல நல்ல அறிவுரைகள்.

## புத்திசாலிக் கதைகள்

(ஆசிரியர் ஏ.எஸ். வழித்துணை ராமன். வெளியீடு - சாந்தி நிலையம். 108 உஸ்மான் சாலை, தி.நகர், சென்னை - 17. விலை ரூ. 18).

சிறுவர்களுக்கான சின்னச் சின்னக் கதைகள். ஒன்றிரண்டு ஒரு பக்கத்திலேயே முடிகின்றது. ஒரே மாதிரியான வழக்குகளும் ஒரே மாதிரியான தீர்வுகளும் இருந்தாலும் குழந்தைகளின் புத்திசாலித்தனத்தைக் கருத்தில் கொண்டு நல்ல முறையில் எழுதப்பட்ட நூல்.

—பரணி பாலன்

# என் தந்தை

## நவரச நாயகர்
## சுகி சுப்பிரமணியம்



என் தந்தை கலைமாமணி சுகி சுப்பிரமணியம் அவர்கள், சிறந்த நாடகத் தயாரிப்பாளர், புகழ் பெற்ற எழுத்தாளர் என்பது அனைவரும் அறிந்ததுதான். அவர் ஜோதிடக்கலை கற்றவர், ஹோமியோபதி வைத்தியப் படிப்பை முறைப்படி கற்றுத் தேறியவர் என்பது எல்லாருக்கும் தெரிந்திருக்காது. அவருக்குப் புதிது புதிதாகக் கற்க வேண்டும், எதையும் படித்துத் தெரிந்து கொள்ள, வயது ஒரு தடையில்லை என்ற கருத்து கொண்டவர். அத்துடன் என் தந்தையை நவரச நாயகர் என்றே சொல்லலாம்.

### பாசம்

குழந்தைகள் என்றால் அவருக்கு உயிர். அன்பும் அதே சமயம் கண்டிப்பும் கலந்த பாசம் காட்டி எங்களை வளர்த்தார். எங்களுடைய திறமைகளை அவ்வளவு எளிதில் வாய்விட்டுப் பாராட்ட மாட்டார். ஆனால் வேறு யாரிடமாவது சொல்லிப் பாராட்டும் போது அவருடைய பாசம், பலாச்சுளை போன்றது என்பதை நாங்களே புரிந்து கொண்டோம். எங்களைவிட எங்கள் குழந்தைகள் - அதாவது அவருடைய பேரக் குழந்தைகள் மீது சொல்ல முடியாத பாசம். அவர்களுக்கு தமிழ்ப் பற்று வேண்டும் என்பதில் அதிக அக்கறை காட்டுவார். குழந்தைகள் லேசாகத் தும்மினாலும் என்னவோ ஏதோ என்று கவலைப்படுவார். ஆபீஸ் போகும் வரை தொட்டிலில் தூங்கும் பேரக் குழந்தையை வேறுயாரும் தூக்கிக் கொஞ்ச முடியாது. அவர் கண்பார்வையிலே குழந்தைகள் இருக்க வேண்டும். அடுத்தடுத்து மகள் - மருமகள் என்று பிரசவங்கள் தொடர, நிச்சயம் ஒன்றோ இரண்டோ தொட்டில் தூளி ஆடிக் கொண்டிருக்கும்! ஆகாரம், மருந்து, தூக்கம், விளையாட்டு என்று, பிறந்த குழந்தைகளுக்கும் அட்டவணைப்படி நடக்க வேண்டும் என்று விரும்புவார். அடிக்கடி குழந்தைகளைத் தூக்கி வைத்துக் கொள்வது, வரும் விருந்தினர் குழந்தைகளை முத்தமிடுவது இதெல்லாம் குழந்தையின் உடல்நலத்தைப் பாதிக்கும் என்பது அவர் கருத்து.

### கருணை

பசியால் யாராவது வாடுவதைக் கண்டால் என் தந்தைக்கு மனம் பொறுக்காது. ஒரு விறகு வெட்டி, ரிக்ஷாக்காரர், நாடகக் கலைஞர், எழுத்தாளர்கள் என்று எத்தனையோ பேருக்குப் பசி போக்க உதவி செய்திருக்கிறார். விளம்பரமில்லாத, பிரதிபலன் எதிர்பார்க்காத உதவி என்பது சம்பந்தப்பட்டவர்கள் மட்டுமே அறிந்து கொள்ளக் கூடியவை.

### மகிழ்ச்சி

குழந்தைகளைக் கொஞ்சும் போது தானும் குழந்தையாக மாறி முகமெல்லாம் மலர்ந்திருக்க மகிழ்ச்சியடைவார். அதைப்போல மற்ற எழுத்தாளர்கள், எங்கள் வீட்டுக்கு வரும்போதெல்லாம் ஒரே மகிழ்ச்சி ஆரவாரம்தான்!

இவருடைய நகைச்சுவை உணர்ச்சிகளைப் பிரதிபலிக்கும் துபாஷ் வீடு, காப்புக்கட்டிச் சத்திரம் போன்ற தொடர் நாடகங்கள், மற்ற கட்டுரைகள் எவரையும் புண்படுத்தாத நகைச் சுவை நிரம்பியவையாக இருக்கும்.

### கோபம்

நாணயம் தவறுவது, நேர்மையின்மை, நேரம் தவறுவது, சோம்பேறித்தனம் இவை என் தந்தைக்குக் கோபமூட்டக் கூடியவை.

### வீரம்

அநியாயத்தைத் தட்டிக் கேட்கும் தைரியம் எங்கள் தந்தையிடம் உண்டு. எதற்கும் அஞ்சமாட்டார். மேலதிகாரியாக இருந்தாலும் சரி, சமூகத்தில் பொய் அந்தஸ்துடையவராக இருந்தாலும் சரி, அவர்கள் செய்வது தவறு எனத் தெரிந்து விட்டால் முகத்துக்கெதிரே சுட்டிக் காட்டத் தயங்கமாட்டார். மற்ற கலைஞர்களுக்காக வாதாடி, தனக்கு நஷ்டம் வந்தாலும் கவலைப்படாமல், அவர்களுக்கு நியாயம் கிடைக்க வழி செய்யும் வீரம் அவருக்கு உண்டு.



திருமதி. ராஜலட்சுமி சுப்பிரமணி

### வெறுப்பு

நியாயம், நேர்மை இவற்றிற்குப் புறம்பான கொள்கையுடையவர்கள், ஆடம்பரப்பிரியர்கள், கோழைகள், வீண்முகஸ்துதி செய்பவர்கள் இவர்களைக் கண்டால் வெறுத்து ஒதுங்குவார்.

### சாந்தம்

என்னுடைய பாட்டிகள் இருவரிடமும் சாந்தமாகப் பேசுவார். தன் மருமகன்கள், மருமகள்கள் இவர்களுடன் பேசும்போதும் சாந்தமாகப் பேசுவது தந்தையின் வழக்கம்.

### காதல்

என் தந்தைக்கு எழுத்துதான் காதலி. வயதாகியும்கூட அளவில்லாத காதல், என்றும் மாறாத இளமைக் காதல் எழுத்தின் மீதுதான்.

பயம்

அவர் பயப்படக்கூடிய விஷயம், ஆரோக்கியம் சீர்குலைந்து விடக் கூடாது. லேசாகத் தலை வலி என்றாலும், சின்னக் கொப்புளம் வந்தாலும் என்னவோ ஏதோ என்று பயப்படுவார். அதைப் போல வெளியே சென்றிருக்கும் என் சகோதரர்கள் வீடு திரும்ப வழக்கத்தைவிட தாமதமானாலும், அவருடைய கவலை பயமாக உருவெடுக்கும்.

இவ்வாறாக என் தந்தை நவரசங்களையும் தன்னுள் நிறைத்து, எங்கள்மீது பாசத்தைப் பொழிந்து, கண்டிப்பு காட்டி வளர்த்தவர். அவருக்கு மகளாகப் பிறந்ததற்கு நான் மிகவும் பெருமைப் படுகிறேன். குழந்தை இலக்கியத்தில் நான் புகழ் பெற வேண்டும் என்பது அவருடைய விருப்பம். ஆபாசமில்லாமல் எழுதுவது, நகைச்சுவை தொனிக்க எழுதுவது அவர் வரவேற்கும் இலக்கியம் என்பதால், நானும் ஓரளவு அவருடைய விருப்பத்தை நிறைவேற்றி எழுதி வருகிறேன்.

தந்தையின் பிறந்த நாள் வருகின்ற வேளையில் அவரைப் பற்றிய நினைவுகளை அமுதசுரபி வாசகர்களுடன் பகிர்ந்து கொண்டதில் மிக மகிழ்ச்சியடைகிறேன். ⁂

---

## மருத்துவச் செய்திகள்

### குழந்தை மண், சாம்பல் போன்றவற்றைத் தின்றால்...

ஒரு புதுக்காசு எடை பெருங்காயத்தை எடுத்து நெருப்பில் போட்டுச் சுட்டு எடுத்து அதைத் தூள் செய்து கொள்ள வேண்டும். வெள்ளை முள்ளங்கியைக் கொண்டு வந்து அதைத் தட்டிச் சாறு எடுத்து, பெருங்காயத்தை அதில் போட்டு நன்றாகக் கலக்கிவிட்டு காலையில் மட்டும் மூன்று நாள் கொடுக்க வேண்டும்.

### உடலில் தேமல் படர்ந்தால்

1) பூவரசு மரத்தின் மொட்டைக் கொண்டு வந்து இரண்டாக நறுக்கி, நறுக்கிய பாகத்தைத் தேமலின் மேல் தேய்த்தால் குணமாகும்.

2) வெள்ளைப் பூண்டை இரண்டாக நறுக்கி மூன்று மணி நேரத்திற்கு ஒரு முறை தேமலின் மேல் தேய்த்துக் காலை, மாலை சுத்தமான சோப்பைக் கொண்டு கழுவி வரக் குணமாகும்.

3) பூவரசு மரத்தின் விதையைக் கொண்டு வந்து, அத்துடன் சிறிது மஞ்சள் சேர்த்து எலுமிச்சம் பழத்தின் சாற்றை விட்டு, மைபோல் அரைத்துப் பூசிவரக் குணமாகும்.

பிள்ளை வைத்தியம் என்னும் நூலிலிருந்து

### வைத்திய நூல்களில் வைரம்

ஆயுள் வளர்ச்சி, தேககசுகம், வலிமை, அழகு ஆகியவற்றை வைரபஸ்பம் உண்டாக்கும். நோய்கள் அகலும். அகால மரணத்தைத் தவிர்க்கும்.

### வைத்திய நூல்களில் முத்து

முத்துப் பஸ்பம் மதுரமாயும், சீதளமாயும், வீரியக் குறைவுள்ளவர்களுக்கு வலிமை அளிப்பதாயும், ஆயுளை வளர்ப்பதாயும் இருக்கும். இது கண்நோய் முதலியவற்றை நீக்குவதோடு க்ஷயம், கபபித்த க்ஷயம், காச ரோகம், சுவாசரோகம், அக்னி மாந்தம், தாகம் முதலிய நோய்களையும் போக்கும்.

### வைத்திய நூல்களில் மரகதம்

மரகதபஸ்பம் பரிசுத்தமாயும், மனோகரமாயும், இலகுவாயும், திரிதோஷங்களை நிவர்த்திப்பதாயும் இருக்கும்.

### வைத்திய நூல்களில் மாணிக்கம்

மாணிக்க பஸ்பம் சீதளமாயும், சிறிக்தமாயும், மதுரமாயும், காந்திகரமாயும், இலகுவாயும், அக்னி தீபனமுடையதாயும், வீரியவிருத்தி செய்வதாயும், ஆயுள் விருத்தி தருவதாயும், மனோக்கியமாயும், கிரக தோஷங்களைப் போக்கக் கூடியதாயுமுள்ளது. மேகரோகம், கண்ணோய் முதலியனவும் இதனால் நீங்கும்.

ஆதாரம் : நவமணிகள் எனும் நூலிலிருந்து

### வைத்திய நூல்களில் நீலம்

நீல பஸ்பம் சீதளம், ஜடம், சிறிக்தம், மதுரம், பித்தம் ஆகிய காரியங்களுக்கு நாசகாரியாக உதவுகிறது. பித்தம், பாண்டு, மதிமயக்கம் ஆகியன எல்லாம் மருண்டு ஓடிவிடும்; நல்லறிவு தலைப்படும்; இன்பம் உண்டாகும்.

### வைத்திய நூல்களில் புட்பராகம்

புட்பராக பஸ்பம் உடல் வளத்தை உண்டாக்கும்; கபத்தைப் போக்கும்; ஜடமாகவும், சீதளமாகவும் இருக்கும்.

### வைத்திய நூல்களில் வைடூரியம்.

வைடூரிய பஸ்பம், வஜ்ஜிர துல்லியமாயும், சர்வ ரோகங்களையும் நாசம் செய்வதாயும் இருக்கிறது.

### வைத்திய நூல்களில் கோமேதகம்

கோமேதக பஸ்பம் கபத்தைப் போக்கும்; சீரண சக்தியை உண்டாக்கும்; வலிமையைக் கொடுக்கும்.

### வைத்திய நூல்களில் பவளம்

பவள பஸ்பம் சுரத்தினால் ஏற்படும் தோஷம், கபம், சந்நிபாத சுரம், காசம், அரோசகம், தாது நஷ்டம், நா வறட்சி ஆகியவற்றை நீக்கும். உடல் நல்ல ஒளியோடு விளங்கும்.

தொகுப்பு: இரா. சந்திரிகா

# விஞ்ஞான மயம்

புஷ்பா தங்கதுரை



**1950**இல் போயிங் கம்பெனியார் முதன் முதலாக 707 விமானத்தைத் தயாரித்தார்கள். 'ரொம்பப் பெரியவை, விமானக் கம்பெனிகளுக்கு லாயக்கல்ல' என்று நிபுணர்கள் கூறினார்கள்.

ஆனால் அதே விமானம் பின்னர் விமானக் கம்பெனிகளுக்குப் பயன்பட்டது.

இதே போயிங் விமானக் கம்பெனி 1969இல் அதை விடப் பெரிய '747' விமானத்தைத் தயாரித்தது. அதுவரை விமானங்களில் 180 இருக்கைகள்தான் உண்டு.

ஆனால் போயிங் '747' ஒரே தாவலில் 500 இருக்கைகளுடன் வந்து சேர்ந்தது! உலகம் வியந்தது. ஆயிரக்கணக்கான பிரயாணிகள் ஒரே நேரத்தில் பறக்கும் புது யுகம் பிறந்து விட்டது.

இந்த ராட்சத விமானத்திற்கு 'ஜம்போ ஜெட்' என்று பெயர் சூட்டினார்கள்.

ஜெட் தத்துவத்தில் பின்னர் "ஏர் பஸ்" தோன்றியது. படிப் படியாக அதன் இருக்கைகள் கூடிக் கொண்டே வந்து 500-யும் தாண்டிவிட்டது. இந்த ஜம்போ விமானங்கள் வந்ததால் மீனம் பாக்கம் விமானநிலையம்கூட சென்ட்ரல் ரயில் நிலையம் போலக் கச கச என்று ஆகிவிட்டது. அவ்வளவு பிரயாணிகள் அங்கே வருகிறார்கள், போகிறார்கள்.

ஏர் பஸ்ஸில் நம்பர் '400' விமானத்தை சமீபத்தில் ஏர்இந்தியா வாங்கி உள்ளது.

இதற்கு ஏகமான விளம்பரங்கள் வந்தன. உண்மையில் இதே விமான வசதியை சிங்கப்பூர் செல்பவர்கள் இரண்டு ஆண்டுகளாகவே அனுபவித்து வருகிறார்கள். ஏர் பஸ்ஸின் உள்ளே பெரிய திரையில் ஸி.என்.என். செய்தி, சினிமாப்படம், இவை வருகின்றன. அவ்வப்போது விமானம் எங்கே பறக்கிறது, எவ்வளவு வேகத்தில் போகிறது, பறக்கும் உயரம் என்ன, வெளிப்புறத்தின் வெப்பநிலை என்ன என்பதை எல்லாம் குறித்துக் காட்டுகிறார்கள்.

சிங்கப்பூர் விமானம் 30000 அடிக்கு மேல் உயரத்தில் பறக்கின்றது. (எவரெஸ்ட்டைவிட உயரம்) வெளியே மைனஸ் 40 டிகிரி ஸெல்ஸியஸ்! தலையை நீட்டினால் பனிக்கட்டி ஆகிவிடும்.

சமீபத்தில் இந்த விமானத் தயாரிப்பாளர்கள் இன்னும் ஒரு படி மேலே போய்விட்டார்கள்.

விமானத்தில் உள்ள திரையில் படங்கள் காட்டினார்கள் அல்லவா?

அந்தப் பொதுத் திரைக்குப் பதிலாகப் பிரயாணிகளின் முன்னால் தனித்தனி சின்ன டி.வி.கள் வைக்க ஏற்பாடு ஆகியிருக்கிறது. அவரவர் முன் ஸீட்டின் பின்புறத்தில் இது பொருத்தப்பட்டிருக்கும்.

உங்களுக்கு விருப்பப்பட்ட சினிமாப்படத்தை நீங்களே போட்டுப் பார்த்துக் கொள்ளலாம்!

அல்லது அந்த டி.வி.களில் 'ஆட்டங்கள்' கேசட் போட்டு நீங்கள் விளையாடிக் கொண்டே போகலாம்.

இன்னொரு செய்தி, சிங்கப்பூர் விமானத்தார் விமானத்தில் நேரடி ஃபோன் தொடர்பு வைக்கப் போகிறார்கள்.

## சூரியன் புள்ளி விவரம்



பூமியிலிருந்து அதிக பட்ச துரம் : 15,21,00,000 கிலோ மீட்டர். குறைந்த பட்ச துரம் : 14,71,00,000 கிலோ மீட்டர். பிரபஞ்சத்தின் மையத்திலிருந்து துரம் : 32000 ஒளி வருடம். பிரபஞ்ச மையத்தைச் சுற்றி வருவதற்கு சூரியன் எடுக்கும் நேரம் 22,50,00,000 வருடங்கள். அப்போது அதன் வேகம் விநாடிக்கு 2150 கிலோ மீட்டர். சூரியனின் குறுக்களவு : 13,92,000 கிலோ மீட்டர். அதன் அடர்த்தி (Density) : 1.409 (தண்ணீர்-1.00) எடை : 20000000000000000000000000000 டன்கள். ஈர்ப்பு சக்தி : பூமி ஒன்று ஆனால் சூரியன் 27.90 மடங்கு அதிகம். மேற்பரப்பு வெப்பம் : 6000 டிகிரி ஸெல்ஸியஸ். நடுமைய வெப்பம் : 1,40,00,000 டிகிரி ஸெல்ஸியஸ். சூரிய ஒளி பூமிக்கு வந்து சேரும் நேரம் : 8.3 நிமிடம். சூரியனை எடுத்த முதல் ஃபோட்டோ : 1842. சூரிய கிரகணம் முதல் முதல் குறித்தது : 2136 பி.ஸி. (22 அக்டோபர்) வரப்போகிற பெரிய சூரிய கிரகணங்கள் : 24 அக்டோபர் 1995, 11 ஆகஸ்ட் 1999.

# தீப்பெட்டிகள் உற்பத்தியானது எப்படி?

பழைய காலங்களில் கற்களைத் தட்டித்தான் மனிதன் பொறி உண்டாக்கிக் கொண்டிருந்தான்.

சிக்கி முக்கிக் கற்களை நம் நாட்டில் உபயோகித்தார்கள். வன்னிய மரத்தைக் கடைவதாலும் பொறி ஏற்படுவதை நம்மவர்கள் அறிந்து பிடித்தார்கள். இப்போதுகூட யாகங்களுக்கு வேண்டிய புனிதத் தீயை உண்டாக்குவதற்கு வன்னிக்கட்டையத்தான் பெரும்பாலும் உபயோகிப்பார்கள்.

நமது முன்னோர்கள் தமது வீடுகளில் எப்போதும் வரட்டிகளில் நெருப்பு வைத்திருப்பார்கள். அணைய விட மாட்டார்கள்! அணைந்தால் பக்கத்து வீட்டில் போய் வறட்டியில் நெருப்பு வாங்கி வருவார்கள்.

நெருப்பை வெவ்வேறு இடங்களுக்கு எடுத்துச் செல்ல பிற்காலத்தில் குச்சிகள் உபயோகப் பட்டன. குச்சிகளின் முனையைத் தீயில் காட்டி கங்குகளாக்கி அந்தக் குச்சிகளைத்தான் எடுத்துச் சென்றார்கள். ஆனால் குச்சி முனைகளைக் கங்குகளாக்குவதற்கு நேரம் அதிகம் எடுத்தது. இதைத் தவிர்ப்பதற்காக இந்தக் குச்சிகளின தலையில் கந்தகத்தைத் தடவி வைத்தார்கள். இதனால் குச்சியில் சீக்கிரம் நெருப்பைப் பற்ற வைக்க முடிந்தது.

இந்தக் கந்தகத் தீக்குச்சிகள் தான் ஆரம்பத்தில் வெகுநாள்கள் வரை தீயை ஓர் இடத்திலிருந்து இன்னோர் இடத்திற்கு எடுத்துச் செல்ல உபயோகப்பட்டன.

1827இல் ஜான்வாக்கர் என்ற ரசாயன விஞ்ஞானி, ரசாயன மருந்துகள் தடவிய தீக்குச்சிகளைத் தயாரித்தார். தீயை உண்டாக்குவதற்கு உரிய எல்லா ரசாயனங்களும் அந்தத் தீக்குச்சி மருந்தில் இருந்தது. இவற்றை உரசினால் போதும் தீ உடனே பிடித்துக் கொள்ளும்.

இந்தத் தீக்குச்சிகள் உலகெங்கும் கோடிக்கணக்கில் தயாரிக்கப்பட்டன.

ஆனால் இவற்றில் ஓர் அபாயம் இருந்தது. எதேச்சையாக உரசினாலும் இந்தக் குச்சிகள் பற்றிக் கொண்டுவிடும். இதனால் பல விபத்துகள் நடந்தன.

ஸ்வீடிஷ் விஞ்ஞானி ஒருவர் இதற்கு ஒரு யுக்தி செய்தார்! தீக்குச்சி ரசாயனங்களில் சில வற்றை மட்டும் குச்சி தலையில் பூசிவிட்டு, மீதியைத் தீப்பெட்டியின் பக்கவாட்டில் பூசி வைத்தார். இரண்டு ரசாயனங்களும் ஒருசேர்ந்து உரசினால்தான் தீ ஏற்படும். இது நடந்தது 1845ல்! இந்தத் தீக்குச்சிகளுக்குத்தான் சேஃப்டி மேச்சஸ் (safety matches) என்று பெயர் ஏற்பட்டது. ஏனெனில் இவை தாமே உரசி எரியாமல் மனிதனுக்குப் பாதுகாப்பைத் தந்தன.

இவைதான் பின்னர் உலகெங்கும் பரவி உள்ளன.

# பூகம்பம்

பூகம்பத்தை முன்னதாகத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பது மனிதனின் ஆவல்!

இதற்காக உலக நாடுகள் ஆராய்ச்சிகளில் நிறையச் செலவழிக்கின்றன. குறிப்பாக ஜப்பான் இதில் முன்னிலையில் நிற்கிறது.

இதுவரை பூகம்பத்தை ஊகிக்கக்கூடிய எந்தவித நிச்சய வழியும் கண்டுபிடிக்கப்படவில்லை.

ஆனால் மிருகங்களுக்கு பூகம்பம் வருவது முன்கூட்டியே தெரிகிறது என்பதை இப்போது திட்டவட்டமாக அறிந்திருக்கிறார்கள்.

ஸ்டான்போர்ட் "பால் ஊட்டு மிருகங்கள் ஆராய்ச்சி நிலைய"த்தில் டாக்டர் ஹெலினா கிராமர் மனிதக் குரங்குகளின் நடவடிக்கைகளைக் கவனித்து வந்தார்.

அந்தக் குரங்குகளும், மற்ற சில மிருகங்களும் சில நேரங்களில் விசித்திரமாக நடந்து கொண்டன. வழக்கமாக மரக்கிளைகளில் ஏறித் தங்காமல் கீழே தரைமீது வந்து



உட்கார்ந்து கொண்டன. அப்போதெல்லாம் அவை பதட்ட நிலையில் இருப்பதை டாக்டர் ஹெலினா அறிந்தார்.

மிருகங்கள் எந்தந்த தேதிகளில் விசித்திரமாக நடந்து கொண்டனவோ அந்தத் தேதிகளில் அந்த ஆழ் பூகம்பங்கள் ஏற்பட்டிருக்கின்றன என்பதை அறிந்து கொண்டார் ஹெலினா.

பூமி அதிர்ச்சிகள் எவ்வப்போது தோன்றின என்ற தேதிக் குறிப்பு அடங்கிய ஓர் அறிக்கை அவர் கைக்கு வந்தது!

மிருகங்கள் எப்படி முன்கூட்டியே பூகம்பங்களை உணர்கின்றன. வானிலையில் எதாவது மாறுதல் நடக்கிறதா, அல்லது பூமியின் காந்த சக்தியில் தடங்கல் எதாவது ஏற்படுகிறதா, என்பதை எல்லாம் ஆய்வு செய்து வருகிறார்கள்.

பூகம்பம் வருவதற்கு ஏதுவான இடங்களில் இந்த மிருகங்களைக் கூண்டில் அடைத்து வைத்திருக்கிறார்கள். மிருகங்களைத் தொடர்ச்சியாக டி.வி. காமிராக்கள் படம் எடுத்த வண்ணம் இருக்கின்றன. அந்தப் படங்களை கம்ப்யூட்டர்கள் கவனித்த வண்ணம் இருக்கின்றன. பூகம்பங்கள் ஏற்படுவதை இந்த வழியிலேயே சீக்கிரம் முன்கூட்டிக் கண்டு பிடித்துச் சொல்லிவிட முடியும் என்று விஞ்ஞானிகள் நம்புகிறார்கள்.

இதுவரை ஒரு திட்டவட்டமான தீர்வை அவர்களால் கொடுக்க முடியவில்லை.

# கோபம் வந்தால் உடம்பில் என்ன நடக்கிறது?

கோபம் வந்தால் இருதயம் வேகமாக அடிக்கிறது. நாடித் துடிப்பு அதிகமாகிறது. இரத்த அழுத்தமும் அதிகமாகிறது. காரணம், அதிக அளவு ரத்தம் உடல் பூராவும் போக வேண்டியிருக்கிறது.

கோபம் அடைந்த மனிதன் அதிகம் நினைக்க வேண்டி இருக்கிறது. சீக்கிரம் நடவடிக்கை எடுக்க வேண்டி இருக்கிறது. இந்தச் செயல்களுக்காக அதிக அளவு ரத்தம் மூளைக்கும் தசைகளுக்கும் போக வேண்டி இருக்கிறது.

அவனது முகம் இதனால் சிவக்கிறது. சுவாசம் அதிகமாகிறது. கல்லீரல், தசைகள் இவை அதிக சர்க்கரைப் பொருளை ரத்தத்தில் சுரந்து விடுகின்றன.

இந்த எல்லா மாற்றங்களும் 'அட்ரெனலின்' ஹார்மோனால் நேர்பவை!

இந்த ஹார்மோன்களை உற்பத்தி செய்கிறவை அட்ரெனில் கிளாண்ட்!

உணர்வுகளை எடுத்துச் செல்லும் நமது நரம்பு அமைப்புதான் இந்த அட்ரெனல் கிளாண்டுகளைத் தூண்டி விடுகின்றன.

இந்த நரம்பு அமைப்பு முதுகுத் தண்டு வழியே மூளையோடு சேர்க்கப் பட்டிருக்கிறது. மூளையோ ஐம்புலன்கள் வழியே செய்திகளைக் கிரகித்துக்கொண்டு கோபம், தாபம், பாசம் போன்ற பலவித உணர்ச்சிகளை அடைகிறது. இதில் கோபம்தான் உடலில் மிக அதிக பாதிப்புகளை உண்டுபண்ணி விடுகிறது.

கோபம் ஓர் உணர்வு! அதை வராமல் தடுப்பது நமக்கு லாபம். கோபம் தவிர மற்ற உணர்ச்சிகளில்கூட மிதமாக இருந்து விடுவதுதான் நல்லது.

கீதையே இதை உபதேசிக்கிறது. •



## குடல் வால்

நமது குடலின் ஒரு முனையில் விரல் போல் நீண்டிருக்கும் பகுதிதான் குடல் வால்! இது திடீரென்று நோயுற்றுப் பருத்து விடுகிறது.

அதனால் உண்டாகும் வலியோ பயங்கரம்!

உடன் தீர்வு காண ஆபரேஷன் செய்து இந்த விரல் பகுதியை நீக்கி மீதிப் பகுதியை முடிந்துவிட வேண்டும்.

இது செய்யாவிடில் குடல் வால் பருத்து வெடித்து, குடலில் உள்ள உணவுக் குழம்பு வயிற்றுள் சிதறி சீக்கிரமே மரணம் நிகழ்ந்துவிடும்.

எனவே வயிற்றில் கடும் வலி தோன்றிவிட்டால் உடனே டாக்டரிடம் ஓடுவது நல்லது.

இந்தக் குடல் வால் திடீரென்று நோயிற்றுப் பருக்கக் காரணம் என்ன?

டாக்டர் ஷார்ட் 1920இல் ஆராய்ந்தார்.

சாப்பாட்டில் போதிய நார்ச்சத்து (FIBRE) இல்லாததே காரணம் என்று தீர்மானித்தார்.

நீண்ட காலமாக மருத்துவ உலகம் அவர் சொன்னதைத்தான் நம்பி வந்தது.

ஆனால் சமீபக் காலங்களில் உணவுக்கும், குடல் வாலுக்கும் சம்பந்தம் இல்லை என்று பல டாக்டர்கள் உணர்ந்து வருகிறார்கள்.

இங்கிலாந்தில் 100 ஆண்டுகளாக மக்களின் உணவு வகை கிட்டத்தட்ட ஒரே போல இருந்து வந்திருக்கிறது. எனினும் ஆண்டுக் கணக்காக வராமல் இருந்த குடல் வால் நோய் சில ஆண்டுகளாக திடீரென்று தோன்றி வருகின்றது.

இதனால் இந்த நோய் ஒரு தொற்று நோய் என்று சமீப காலங்களில் சில டாக்டர்கள் கருதத் தொடங்கி விட்டார்கள்.

உணவு மட்டும் இந்த நோய்க்குக் காரணம் அல்ல, என்று நிச்சயமாகி விட்டது. •

வால்யூ-ஆடட்-ப்ராடக்ட் என்ற பேச்சு தற்போது அதிகமாக அடிபடுகிறது.

பலருக்கு இது புதுமையாகத் தோன்றலாம்.

இந்த வார்த்தை எதைக் குறிக்கிறது?

பெரிய கம்ப சூத்திரம் அல்ல!

ஒரு நீண்ட சதுரத் துணியை எடுத்துக் கொள்ளுங்கள். இதன் விலை ரொம்ப மலிவாக இருக்கும்.

ஒரு தூரிகையை எடுத்துக் கொள்ளுங்கள். வர்ணங்கள் வாங்கிக் கொள்ளுங்கள்! வர்ணங்களைத் துணியில் தீட்டி ஒரு படம் வரையுங்கள்!

இதை விற்கப் பாருங்கள்.

நல்ல படமாக இருந்தால் சாதாரணத் துணிவிலையை விட அதிக விலை கிடைக்கும்.

ஒரு நல்ல ஓவியரே ஒரு நல்ல ஓவியத்தை அதில் வரைந்திருந்தால் அந்த ஓவியம் ஆயிரக் கணக்கில் விலை போகும்.

சாதாரணத் துணி விலை 5 ரூபாய் என்று வைத்துக் கொள்ளுங்கள். ஓவியம் வரைதலால் அதன் விலை 5000 (ஆயிரம்) ஆகிறது என்று வைத்துக் கொள்ளுங்கள்.

அது ஒரு மதிப்பு ஏற்றப்பட்ட அல்லது கூட்டப்பட்ட பொருள் ஆகும்.

# தனிமரத் தோப்பு

## ராஜேந்திரகுமார்

## 3



சில விநாடிகள் அந்த ஹாலில் நீடித்த அமைதியில் ஒருவித சங்கடமிருந்தது. காப்பி யுடன் ராஜாத்தி வரவே –

"ராஜாத்தி! அவங்களுக்குக் காப்பியைக் கொடுத்துட்டு பதினாறாவது நம்பர் காட்டேஜைக் காட்டு. நல்ல கடல் வியூ. பிரமாத மாயிருக்கும்" என்ற அனாமிகா, அறைக்குத் திரும்பும்போது நினைத்துக் கொண்டாள்:

"ஏன் அவ்வளவு அக்கறையாகப் பேசினேன்? அந்தப் பெண் அவர் மகளா? கேட்டிருக்கலாம்."

குழப்பமாகவே_ கட்டிலில் அமர்ந்தாள். "என்ன ராஜாத்தி?"

"அட்வான்ஸ் பணம் எவ்வளவு தரணும்னு கேட்கிறாங்க?"

"அதெல்லாம் மானேஜர் இன்னைக்கு வந்து பேசி ரசீதும் தருவார். இப்போதைக்கு போய் தங்கிக்கச் சொல்லி காட்டேஜைத் திறந்து விடு."

அவள் வெளியேறிப் போனதும் நினைத்துப் பார்க்கத் தொடங்கினாள். என்னதான் முயன்றும் காட்சித் திரையில் நெகடிவ் வைத்துப் படம் ஒட்டுவது போலத் தெரிந்தது.

கல்லூரி நாள்களில் - மேக மூட்டத்துக்குள் வருவதுபோல அந்த சஞ்சீவி தெரிந்து தெரிந்து மறைந்தான். 'இப்போதைக்கு வருவோமா கொஞ்ச நாள் பொறுத்து வளரலாமா?' என்று யோசிப்பதைப் போன்ற சற்று உற்றுப் பார்த்தால் மட்டுமே தெரியும் பூனை மீசை. எம்.காம். படிப்பு அவன் வயதைக் காட்டிக் கொடுத்தது.

ஒருநாள் சொன்னாள், "மீசை, வழிச்சிடு."

"நெவர்" என்றான்,கோபமாக.

"காரணமாகத்தான் சொல்றேன். ப்ளேடு பட்டால்தான் மீசை கருகருன்னு வளரும். சொல்லக் கேட்டிருக்கேன்."

தயக்கமாகவே போனாலும் மறுநாள் மீசையை முழுவதுமாக வழித்துக்கொண்டு வந்தவன் -

சிநேகிதர்களின் கேலிக்கு மிகுந்த சிரமத்துடன் நடமாடி வந்தவன் -

இவள், "இப்பதான் ஹிந்திப்பட ஹீரோ மாதிரி பளிச்சுன்னு இருக்கே" என்றதும் பூரித்தான்.

சில நாள்களில் அதே மீசையுடன் அவன் வந்து நின்றபோது கேட்டாள், "ஏன் மீசையை ஷேவ் பண்ணலை?"

"இல்லே. ப்ரெண்ட்ஸுங்க கேலி பண்றாங்க."

"என்னன்னு?"

"ஓம்போது மாதிரி இருக்கேனாம்!"

"சில்லி. சல்மான்கான் மாதிரி தெரியறே. இதை நான் சொன்னேன்னு உங்க சிநேகிதர்கள்கிட்டே சொல்லு."

இப்படி இவள் வளர்த்து விட்ட மீசை - சற்று முன் கண்ட சஞ்சீவியின் முகத்தை நினைவில் கொணர்ந்து அசை போட்டாள்.

நல்ல அடர்த்தியாகத்தான் வளர்ந்திருந்தது. ஆனால் என்ன... ஆங்காங்கே நரை மயிர்கள் நீட்டிக் கொண்டிருந்தன.

அவனுக்கும் வயதாகி விட்டது - என்னைப் போல!

கட்டிலில் சாய்ந்து படுத்து தனது தலை முடியை ஆராய்ந்தாள். ஒரேயொரு வெள்ளை மயிர் நீட்டிக் கொண்டிருக்கவே மற்றவற்றில் இருந்து பிரித்து தனியாக எடுத்து வெடுக்கென பிடுங்கி எறிந்தாள்... அந்த நாளில்

அன்று மாலையே அவனைச் சந்தித்துச் சொன்னாள் -

"ஐ லவ் யூ சஞ்சீவி."

வெளியே அந்தச் சின்னப் பெண்ணின் குரல் கேட்டது. "ஏம்மா! அவங்க யாரு?"

"எங்க எஜமானி."

"பேரு?"

"அதெதுக்கும்மா, உங்களுக்கு? வாங்க, காட்டேஜைக் காட்டறேன்."

மெல்லக் கதவைக் கொஞ்சமாகத் திறந்து பார்த்தபோது ராஜாத்தி சாவியுடன் முன்னால் நடக்க... அவர்கள் பின் தொடர்ந்து போவது தெரிந்தது.

திரும்பியபோது அந்த அனாமிகாவின் கண்கள் காரணமின்றிக் கலங்கி இருந்தன.



அமெரிக்காவில் இருட்டி நீண்ட நேரமாகி விட்டது. டின்னர் சாப்பிட்ட பிறகு டி.வி. பார்த்துக் கொண்டிருந்த மகேஷ் போன் ஒலிக்கவே - ரிமோட்டை அமுத்தி டி.வி.யை மௌனப் படமாக்கிவிட்டு ஒலி வாங்கியை எடுத்தான். குரலைக் கேட்டதும் முகம் சுளித்தான்.

சற்றுத் தள்ளி சோபாவில் அமர்ந்திருந்த லீனாவின் பார்வைக் கேள்விக்கு - "தங்கை... மாட்டிக் கொண்டு விட்டேன்" என்றான்.

அவள் சிரித்தாள், "பேசு!பாவம்!"

போன் வாயைத் திறந்தான், "ஹலோ!"



"ஒரு நிமிஷம் அண்ணா! இங்கே ஒரு நாள் எட்டிப் பார்க்கிறது. கெட்லாஸ்ட் மேன். அவசரமாகப் பேசறேன். அவுட் அவுட்."

"யாரும்மா?"

"என் அக்கவுண்டண்ட் கிழம். அதை விடு. என்ன உன்னை ஃபோனில் பிடிக்கிறதே பெரிய பாடாக இருக்கிறது."

"ஏகமாய் பிஸி. ஒரு நாளைக்கு இரண்டு மூன்று - சில சமயம் அஞ்சு ஆபரேஷன்கூடச் செய்ய வேண்டி வருகிறது. ஃபோன் பண்ணினாயா என்ன? இப்பக் கூட ஒரு ருமாடிக் ஹார்ட் பேஷண்ட்டை அட்டெண்ட் பண்ண ஓடிட்டே இருக்கிறேன். சொல்றதை சீக்கிரம் சொல்லு".

"அண்ணா... எனக்குக் கொஞ்சம் பணம் வேணும்."

"வாட்? பணமா?"

"என் அருமை பணம் காய்ச்சி அண்ணனே! இனிமேல் உன்கிட்ட பணம் கேட்பதாக இல்லை. சில மருந்துகள் அனுப்பச் சொன்னேன்."

"அனுப்பியாச்சே! ஆனாலும் வினிதா, அடிக்கடி இப்படி மருந்து அனுப்பச் சொல்லி எனக்குத் தொல்லை தராதே. எல்லாம் அங்கே இந்தியாவில் கிடைக்கிற மருந்துகள்தானே?"

"ஆனாலும் என்ன செய்ய? அமெரிக்காவில் இருந்து தருவிச்ச மருந்துன்னா அதற்கு தனி விலை இருக்கிறது."

"ஒண்ணு செய். கல்யாணம் பண்ணிக்க. அதுவும் ஏதாவது அமெரிக்க டாக்டராகப் பார்த்து..!"

"ஸாரி. கல்யாண ஆசை எனக்கில்லை. பணம் வேணும். நிறையப் பணம் வேணும். அதற்கு நீதான் உதவணும்."

"மை டியர் யங் லேடி. ஒரு விஷயத்தை அடிக்கடி மறந்து போகிறாய் நீ."

"என்ன?"

"நான் கல்யாணமானவன். என்னை நம்பி ஒரு குடும்பம் இருக்கிறது."

"தெரியும்."

"மகன் படிப்புக்கு, மகள் கல்யாணத்திற்கு என்று தொடரும் செலவுகளுக்கு என் சம்பாத்தியமே போதாது."

"கேட்டேனா? உன்னைப் பணம் கேட்டேனா?

"கொஞ்சம் சீக்கிரம் சொல்கிறாயா? நான் அவசரத்தில் இருக்கிறேன்."

"உன்னை விட அவசரத்தில் நான் இருக்கிறேன். ஃபோன் பில் எகிறும். கொஞ்ச நாளாகவே எனக்கோர் எண்ணம். ஐ மே பீ ராங் ஆல்ஸோ. ஆனாலும் வழி தோணலை."

"சொல்லு."

"ஃபோனில் சொல்லிப் புரிய வைக்கிற சங்கதியில்லே. நீ ஒரு நடை இங்கே வந்து போயேன்."

"அது அவ்வளவு சுலபமில்லை. என் பிஸினஸ் - என் பேஷண்ட்ஸுங்களை விட்டு வர முடியாத சூழ்நிலை. தவிர, வெயில் தாங்காத என் மனைவி. எல்லாத்துக்கும் மேலாக பிள்ளைகள் படிப்பு. இது எல்லாம் அனுமதிக்காதுன்னுதான் நினைக்கிறேன்."

"அப்படிச் சொல்லாதே, மகேஷ்! அவசரம் மட்டுமில்லே. அவசியம் கூட. எனக்குப் பணத் தட்டுப்பாடு."

"அது எப்பவும் பாடுகிற பாட்டு. ஒண்ணும் புதிசில்லே."

"அதற்கு இங்கேயே ஏற்பாடுகள் செய்தாகணும்."

"செய்யேன்."

"அதுக்கு நீயும் வந்து கையெழுத்துப் போட வேண்டியது அவசியம்."

"சுருக்கமாகச் சொல்லு. என் கையெழுத்து உனக்கெதற்கு?"

"நம்ம அப்பாவின் சொத்துகளை நல்ல விலைக்கு விற்றாகணும். வாரிசு முறையில் நீயும் கையெழுத்துப் போடணும்னு என் வக்கீல் சொல்கிறார்."

"உளறாதே. அது அத்தனையையும் அம்மாவின் பெயருக்கு உயில் எழுதிட்டுதான் அப்பா போயிருக்கிறார். மைண்ட் யூ."

"அதனால்தான் உன்னை வரச் சொல்றேன். உயிலைப் பற்றிக் கவலைப்படாதே. அதை என் வக்கீல் பார்த்துப்பார்!"

"அவரை விடு. பலனிருக்கும் என்கிற நம்பிக்கை உனக்கே இருக்கிறதா?"

"நிச்சயமாய். சட்டத்தில் உள்ள ஓட்டைகளை என் வக்கீல் பூதக் கண்ணாடி வைத்துக் கண்டு பிடிப்பார். அந்த நம்பிக்கை எனக்கு இருக்கிறது."

"அம்மா உயிரோட இருக்கிறவரை இது நடக்காது என்கிறதுதான் என் நிச்சயமான கணிப்பு."

"பேசிப் பார்க்கிறதில என்ன தப்பு?"

"அதுக்கேன் என்னை எதிர்பார்க்கிறே? எனக்கு அதில் பங்கு கேட்கிற ஆசையில்லை. ஆதரைஸ் பண்ணி நோ-அப்ஜெக்ஷன் லெட்டர் அனுப்பறேன். நீயே பார்த்துக்க! அவ்வளவு தானே?"

"ஏன் இப்படிப் பறக்கிறே?"

"ஆல் ரெடி டென் மினிட்ஸ் லேட். தவிர, இதுக்கும் மேலே ஃபோன் பேசினால் ஃபோன் பில்லே உன்னைப் பிச்சைக்காரி ஆக்கி விடும். வைச்சிடு."

"வைக்கிறேன். கடைசியா ஒரு வார்த்தை சொல்லிட்டு வைச்சிடறேன். என்ன சொன்னே? அம்மா உயிரோட இருக்கிற வரைதான்னு சொன்னாயா?"

போன் வைக்கப்பட்டு விட்டது.

அவள் கடைசி வார்த்தையில் இருந்த தீவிரம் - அந்தக் குரலில் இருந்த பயங்கரத்துக்கு நீண்ட நேரம் அசையாமல் அமர்ந்திருந்தான், மகேஷ்.

எழுந்து வந்து அவன் பக்கத்தில் அமர்ந்தாள், லீனா.

"என்ன டார்லிங்?"

"உம்...நத்திங்!"

"டி.வி.போடலாமா?"

"உம்" என்றதும் ரிமோட் கண்ட்ரோலை அமுத்தியதும் வண்ண விளக்குகள் ஒளியை வாரி இறைக்க திடும் திடுமென்று டிரம்ஸ் அதிர - கிடார்கள் ஓயாமல் துள்ள - வயிற்று வலியுள்ளவள் போல ஒரு பெண் அடி வயிற்றிலிருந்து பாட்டு என்கிற பெயரில் கத்தினாள்.

அதில் மனம் ஒன்றாமல் தொலைவில் இருந்த ஃபோனையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான், மகேஷ்.

பீச் ரிஸோர்ட்டில் காட்டேஜ்களின் வெளித் தோற்றம் குடிசை மாதிரி ஓலை வேய்ந்து காணப்பட்டாலும் ஓர் ஐந்து நட்சத்திர ஹோட்டலின் வசதி இருந்தது. குளிர்பதன அறைகள். குளிர்சாதனப் பெட்டி. இன்டர்காம் டெலிஃபோன். அட்டகாசமாக பர்னிச்சர்கள். நுரைப் பஞ்சு மெத்தையுடன் கட்டில்கள். சுவரில் ஆளுயர வண்ணப்படக் கவர்ச்சி.

நைட் கவுனுடன் வராண்டாவின் சுவரில் தெற்றினாற்போல அமர்ந்திருந்த பைப்பைக் கடித்தவாறு தொலைவில் அறையும் அலைகளைப் பார்த்துக் கொண்டிருந்தவர் - மகளின் 'அப்பா' என்ற குரலுக்குத் திரும்பிப் பார்த்தார்.

பைப்பை உயர்த்தி "ஹாய் டியர்" என்றார்.

"அப்பா..! அந்தம்மாவை உங்களுக்குத் தெரியும்னு சொன்னீங்க. அவங்களும் உங்களைப் பார்த்ததும் பெயர் சொல்லி ஆச்சரியப்பட்டாங்க. ஆனா..?"

பார்த்தார்.

"யாரோ அந்நியர்களைப் போல வேலைக்காரியை விட்டு காட்டேஜைத் திறந்து விடணும்னு நாம எதிர்பார்க்கிறதும் தப்பு. சரி... நீ ஏன் இன்னும் நைட்டிக்கு மாறாமல் இருக்கே? பயணக் களைப்பு இருக்கும். குளிச்சிட்டுக் கொஞ்சம் ஓய்வெடு."

"என்னமோ தெரியலை. இந்தத் தனிமைச் சூழல் என்னை ரொம்பவும் பயமுறுத்துதுப்பா. தூங்க நினைச்சாலும் முடியலை."

"ஸில்லி. நானிருக்கேன். செக்யூரிட்டி கார்டுங்க வேற இருக்காங்க. சுத்திக்கிட்டே இருப்பாங்க. ஃபோன் எடுத்தா ஏன்னு கேட்க ஆளிருக்கு. அப்புறமென்ன பயம்? போ. போய் டிரஸ் மாத்திட்டு படுத்துக்கோ."

"நீங்க...?"

"எனக்கு வயசாச்சும்மா. ராத்திரியிலேயே தூக்கம் வராது. பகல்லேயா வரப் போகுது? போம்மா. மதியச் சாப்பாடு வந்ததும் வந்து எழுப்பறேன்."

"என்னை ஏம்ப்பா விரட்டறீங்க?" கேட்டாள், "தனியாக உட்கார்ந்து அப்படி என்ன பண்ணப் போறீங்களாம்?"

"ப்ளீஸ் டியர்! எனக்குக் கொஞ்சம் தனிமை தேவைப்படுது. ஐ பெக் யூ. ப்ளீஸ் லீவ் மீ அலோன்."

"ஓ.கே. டாட்! பொய் சொல்றீங்கன்னு தெரியுது. ஆனா ஏன்னுதான் புரியலை. பரவாயில்லே. நான் போய்த் தூங்கறேன்."

### கால் ஆணி குணமாக



* மஞ்சள் தூள் 2 கரண்டி, டேபிள் சால்ட் 1 கரண்டி இரண்டும் எடுத்துத் தண்ணீர் விட்டுக் கெட்டியாகக் குழைத்துக் கொண்டு படுக்கப்போகும்போது கால் ஆணி உள்ள இடத்தில் நன்கு பூசிக் கொள்ள வேண்டும். காலையில் எழுந்து காலை நன்கு கழுவி விட வேண்டும். இப்படியே 2 அல்லது 3 நாள்கள் தொடர்ந்து செய்து வந்தால் கால் ஆணி இருக்கும் இடம் தெரியாமல் உதிர்ந்து போய் விடும். பிறகு கால் ஆணி தோன்றவே தோன்றாது.

திருமதி. கார்த்திகை

சரிந்து இறங்கி மகளை அணைத்தாற் போல உள்ளே அழைத்துப் போனார்: "ரூமுக்குள்ளே போய் தூங்கு."

அவள் உள்ளே போய் விட்டதை உறுதிப் படுத்திக் கொண்டதும் - குனிந்தார். குட்டை மேஜை மேலிருந்த சாம்பல் கிண்ணத்தில் பைப் சாம்பலைக் கொட்டி விட்டு வைத்தார்.

அவசரமில்லாமல் நடந்து சூட்கேஸை நெருக்கி,திறந்தார். திறந்து அதிலிருந்த தங்கத் தாலான சிகரெட் கேஸையும், லைட்டரையும் எடுத்துக் கொண்டு கண்ணாடிக் கதவைத் திறந்து மீண்டும் வராண்டாவுக்கு வந்தார்.

சற்றுத் தொலைவில் அலை வந்து வந்து கடற்கரை மணலைக் குசலம் விசாரிப்பதும் போவதுமாகத் தெரிய வெயில் பட்டு கடலின் நீண்ட தொலைவுக்கு ஒளிச் சாலை அமைத்திருந்தது. சங்கிலியில் தொங்கும் பிரம்புக் கூடை. நாற்காலியில் தெற்றினாற்போல அமர்ந்து கொண்டார். கப்பல் ஒன்று கொஞ்சமாக இரைந்து விட்டு அமைதி காத்தது.

மெல்ல மெல்லத் திரும்பிப் பார்த்தது அவர் முகம் மட்டுமல்ல; நினைவுகளும்தான்.

முதல் முதலில் அவளைச்சந்தித்த நாளை நினைவில் நிறுத்தினார்.

அந்தக் கல்லூரி வளாகத்தில் அவள் ஒரு பிரகாசமாக இருந்தாள். காலையில் காரை விட்டிறங்கும்போதே கையில் ஒரு பூச்செண்டுடன் இறங்கி தேவதையைப் போல நடந்து வருவாள்.

வழியில் கும்பலாக நிற்கும் மாணவர்கள் - மாணவிகள் அவளை உணர்ந்ததும் விலகி வழி விடுவார்கள்.

கல்லூரிக்கு அவள் வந்த முதல் நாள் கூட - மற்றவர்களை ராக்கிங் என்கிற பெயரில் தன்னைக் கன்னா பின்னாவென்று கலாட்டா செய்த கும்பல் கூட இவளைக் கண்டதும் - மௌனமாகி விலகி வழி விட்டார்கள்.

பிரின்ஸிபால் அறைக்குள் சகஜமாக, பியூனின் சல்யூட்டுடன் நினைத்த நேரத்தில் நுழைந்தாள். பிரின்ஸிபாலே கூட வந்து அறை வாசலில் வழி அனுப்பினார்.

கல்லூரி லெக்சரர்கள் - புரபசர்கள்கூட அவளிடம் கேள்வி கேட்கத் தயங்கினார்கள்.

மார்போடணைத்த பூச்செண்டுடன் நடந்து எங்கேதான் போகிறாள்?

அவளறியாமல் ஒருநாள் பின் தொடர்ந்து போனார்.

கல்லூரிக்குப் பின்னால் உள்ள கதவைத் திறந்து போனாள். நந்தவனம் போல சின்ன இடத்தின் நடுவேயிருந்த மண்டபத்தில் ஒரு சமாதியில் விளக்கேற்றி வைக்கப்பட்டிருந்தது.

மண்டியிட்டு அமர்ந்தவள் பூச்செண்டை இரண்டு கைகளாலும் அர்ப்பணித்து விட்டு, கொஞ்சம் நேரம் கண்களை மூடி மௌனம் காட்டி விட்டு எழுந்து நின்று திரும்பியவள் இவர் மீது மோதலை சில அங்குலங்களில் தவிர்த்தாள்.

"யார் சமாதி, இது? தனி மரம்னு எழுதி இருக்கு?"

"என் அம்மாவின் சமாதி! வாழ்நாள் பூராவும் எல்லாமிருந்தும் எதுவுமில்லாமல் தனிமரமாகவே வாழ்ந்து செத்தாங்க. சாவுக்குப் பிறகாவது அவங்க தனிமை போகட்டும்னு சுற்றிலும் தோட்டம் வளர்த்து மண்டபம் கட்டி இருக்கேன். நீங்க எகனாமிக்ஸ் ஸ்டூடண்ட்தானே?"

"ஆமாம். உங்களை ஒண்ணு கேட்கலாமா?"

"உம்..."

"ஏன், எல்லாரும் உங்களைப் பார்த்து பயப்படறாங்க?"

"இங்கே காலேஜ் கட்டியவர், எங்க தாத்தா. அது மட்டும் இல்லே. ஒர் எக்ஸ் மிலிடெரி மேஜர் பெண்கிட்ட வாலாட்டற தைரியம் இதுவரை யாருக்கும் வரலை."

சட்டென்று சொன்னார், "என்னை அந்தப் பட்டியல்லே சேர்க்க வேணாம். நான் பேசுவேன். நிறையப் பேசுவேன்."

நடந்து முன்னால் போனவள், நின்று திரும்பினாள்.

—தொடரும்

# அஞ்சலி

## இந்திரா ஆராவமுதன்

ஒரு கெட்ட சொப்பனம் கண்டு பதறி எழுந்து மணியைப் பார்க்கிறேன். சரியாக நான்கு.

'அதிகாலையில் கண்ட சொப்பனம் பலிக்கும் என்பார்களே பகவானே காப்பாத்து' என்று மனதுக்குள் வேண்டியபடியே வலுக்கட்டாயமாகத் தூக்கத்தை வரவழைக்கிறேன். புரண்டு புரண்டு என்னையும் அறியாமல் தூங்கியவளை இசை எழுப்பும் கடிகாரம் ஆறு ஆகிவிட்டதைத் தெரிவித்தது.

அவசர அவசரமாகப் பல்லைத் தேய்த்து, வாசல் தெளித்துப் பெருக்கி, பில்டரில் வெந்நீரை ஊற்றியபடியே இருந்தபோது, போன் மணி "டிரிங் டிரிங்" என்று ஒலித்தது.

"இந்தக் காலை வேளையில் யாராக இருக்கும்?" மனம் பதை பதைத்தது.

அந்த அழைப்புக்குப் பதில் சொன்ன என் கணவர், "எப் போது?" என்று பதற்றத்துடன் கேட்டார்.

"மதராஸிலிருந்து டிரங்க்கால். உன் அம்மா நேற்று இரவு தூக்கத்தில் போய்விட்டாராம்".

செய்தி கேட்டு அழுவதற்குப் பதிலாக அப்படியே உட்கார்ந் தேன். தெளித்துப் பெருக்கிய உட னேயே கோலததைப் போடுபவள் இன்று எப்படி மறந்தேன்?

ஏதோ தெரியாத ஒரு சக்தி நம்மை இயக்குகிறது என்று சொல்வதற்கு இணங்க, "அம்மா போய் விட்டாள்" என்கிற தந்தியை இவர் படிப்பதுபோல நான் கண்ட விடியற்காலை சொப்பனம் சூட்சுமமாகத் தெரிவித்ததோ?"

"இறைவா! என் அருமை அம்மாவை இந்தக் கொடிய வியாதியில் இருந்து சீக்கிரம் விடுதலையளித்துத் திருவடி சேர்த்துக் கொள்ளப்பா. அவளை அநாதையாக மட்டும் சாகவிடாமல், அவள் பெற்ற குழந்தைகளில் யாரையாவது ஒருவரை அவர் பக்கத்தில் இருக்குமாறு கருணை புரி" என்கிற என் வேண்டு கோளுக்கு இறைவன் செவி சாய்த்து விட்டான் என்று ஒரு பக்கம் எனக்கு நிம்மதி பிறந்தது.

எண்பது வயது வாழ்ந்த ஆலமரம் சரிந்து விழுந்துவிட்டது. அம்மாவின் சகாப்தம் முடிந்து விட்டது என்ற எண்ணம் தீ மாதிரி சுட்டவுடன், "அம்மா! நிஜமாகவே நீ போய்விட்டாயாம்மா? இனி உன்னைப் பார்க்கவே முடியா தேம்மா. நீ அணு அணுவாய்த் துடித்த கஷ்டத்தைப் பார்க்கச் சகிக்காமல்தான் இறைவனிடம் அப்படி வேண்டியபடி இருந் தேன். உலகத்திலேயே எந்த ஒரு பெண்ணும் இந்த மாதிரியான பிரார்த்தனையைச் செய்திருக்க மாட்டாள். அதற்காக என்னை மன்னித்துக்கொள் அம்மா" என்று மானசீகமாக அம்மாவிடம் மன் னிப்புக் கேட்டவுடன் ஊற்றில் இருந்து பீறிட்டு வரும் நீர்போல துக்கம் பொத்துக் கொண்டு வந்தது.

"இப்படி அழுதால் என்ன லாபம் சொல்லு? உனக்குப் போகவேண்டுமானால் இப்பவே உன்னை விமானத்தில் ஏற்றி அனுப்புகிறேன். சாயங்காலத் துக்குள் போய்ச் சேர்ந்து விடலாம். ஆனால் அதுவரை அவர்கள் சடலத்தை வைத்திருப்பார்களா என்ன என்று தெரியாது. "பத்து"க்குப் போகணுமானால் சொல்லு, நாம் இருவரும் போய் வர ரெயிலில் ரிசர்வ் செய்கிறேன். எல்லாவற்றுக்கும் யோசனை செய்து வை" என்றார் இவர்.

வயிற்றுப் பிழைப்புக்காக வட நாட்டில் வாழ்கிறோம். ஓர் அவ சரம் ஆபத்து என்றால் உடனே ஓடியா வரமுடிகிறது?

'அம்மாவே போயாச்சு. இனி போய் என்ன பிரயோஜனம்? ஏதோ இந்த முறையும் பிழைத்து விடுவாள் என்றுதான் அசிரத்தை யாக இருந்தேன். இல்லாவிட்டால் பத்து நாள் முன்பே ஒரு நடை போய் வந்திருக்கலாம். அம்மா வுக்கும் குறை தீர்ந்திருக்கும்.

இங்கே பிள்ளை பெற்ற பெண்ணைத் தனியாக விட்டு விட்டுப் போக முடியாதவாறு கடமை என் கால்களைக் கட்டிப் போட்டது. அம்மாவைப் பார்க்கப் போவதைச் சற்றுத் தள்ளிப் போட்டதற்கு, இப்படி காலம் பூரா "அம்மாவுக்கு ஆற்ற வேண்டிய கடமையைச் செய்ய முடிய வில்லையே" என்று அழும்படி யாகச் செய்துவிட்டது. இனி வருந்தி என்ன பயன் என்று உள்ளுக்குள் குமுறியபடியே பாத் ரூமுக்குள் நுழைந்தேன்.

என் அம்மா போய்விட்டாள் என்பதற்காக இவர் ஆபீஸுக்குப் போகாமல் இருக்க முடியுமா? அல்லது பிள்ளை பெற்ற பெண்ணைப் பட்டினி போட முடியுமா?

குளித்து வந்து ஒரு மடக்குக் காப்பியை விழுங்கிவிட்டுச் சமை யலுக்கான வேலைகளைக் கவ னிக்க ஆரம்பித்தேன்.

கைகள் இயந்திரமாக வேலை களைச் செய்த போதிலும் மனம் என்னமோ பெரிய அண்ணனைச் சுற்றிச் சுற்றி அவன் பேரில் கோபத்தை உண்டாக்கியது.

"டேய்! நீ எங்கேயிருந்தாலும் எனக்குக் கொள்ளி போட ஓடி வந்துடடா" என்று எத்தனை தரம் கடிதாசு எழுதியும் நேரிலும் சொல்லியிருக்கிறாள். அம்மாவின் இந்தச் சின்ன ஆசையையாவது நிறைவேற்றியிருக்கக் கூடாதா?

**அமரர் சின்னி கிருஷ்ணன் நினைவுச் சிறுகதைப் போட்டியில் பரிசு பெற்ற சிறுகதை**

பிள்ளைகள் எல்லாருக்குமே, வெளி மாநிலம் அல்லது வெளி நாடு போய் நிறைய சம்பாதிக்க வேண்டும், வசதியாக இருக்க வேண்டும் என்று ஆசை வந்து விடுகிறது இந்தக் காலத்தில். அதனால் கூட்டுக் குடும்பம் கசக்கிறது. அந்த வயதுக்கேற்ற எண்ணம், சரி, தப்பில்லை. ஆனால் வயதானபின் தன் பெற்றோரையும் கூடவே வைத்துக் கொள்ள வேண்டும் என்கிற நல்ல எண்ணம் வரமாட்டேனென்கிறதே ஏன்?

இத்தனைக்கும் ஒரு மாதம் முன்பே அக்கா அவனுக்குத் தெரிவித்திருக்கிறாள், அம்மாவின் உடல்நிலை மிகவும் மோசமாகி விட்டதால், சாமான்களைக் காலி செய்து வீட்டைப் பூட்டிவிட்டு அம்மாவைத் தன் கிராமத்துக்கு அழைத்து வந்துவிட்டதாகவும், அவனைப் பார்க்க ஆசைப்படுவதாகவும் எழுதியிருக்கிறாள்.

அண்ணனோ தனி மரம். சின்ன வயதில் தான் விரும்பிய பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ள முடியவில்லை. அதனால் விரக்தியடைந்து வடநாட்டுக்குப் போய் ஒரு வேலையைத் தேடிக் கொண்டு காலம் பூராவும் பிரம்மச்சாரியாகக் காலம் கழிப்பவர். தான் கல்யாணம் பண்ணிக் கொள்ளாவிட்டாலும், தன் தம்பியைக் கல்யாணம் செய்து கொள்ள அனுமதித்தார். ஆனால் எந்த ஒரு கல்யாணமோ, விசேஷமோ ஒன்றுக்கும் வராமல், ஒதுங்கியே இருக்கும் குணம் படைத்தவர். வருடாந்திர லீவில் ஒவ்வொருவராகப் போய்ப் பார்க்கும் வழக்கம் உடையவர். அந்த சமயத்தில் தாம் தாயாரைப் போய்ப் பார்ப்பது. ஓரிரு நாள்கள் தங்கிவிட்டு, கிளம்பி விடுவார்.

தன் இடத்துக்குத் தாயாரையும் அழைத்துப் போகமாட்டார். தாயாரிடம் தாம் போய்த் தங்கிக் காலத்தை ஓட்டிவிடுவோம் என்ற சேவை எண்ணமும் கிடையாது.

பிள்ளையின் வாழ்க்கை இப்படி ஆகிவிட்டது என்று அம்மா மறுகி மறுகிப் போவதைத் தவிர வேறு வழியில்லாமல் போய் விட்டது.

அக்காவின் கடிதம் அவரின் உள் மனத்தைத் தொட்டதோ என்னமோ, உடனே கிளம்பி வந்தார். வந்து பார்த்தார் அம்மாவை.

அம்மாவிடமே ஓரிரு நாள்களுக்கு மேல் தங்க விரும்பாதவர் அக்கா வீட்டில் தங்கிவிடுவாரா? வந்து இரண்டு நாள்கள் சென்றவுடன்,

"இன்னும் எத்தனை நாள் இப்படியே இழுத்துக்கொண்டு இருக்கப் போகிறாளோ? எனக்கு லீவு இல்லை, நான் கிளம்ப வேண்டும்" என்று கிளம்பிவிட்டார்.

அந்தத் தாயின் மனம் எவ்வளவு சுக்கு நூறாக உடைந்திருக்குமோ!

"பெற்ற மனம் பித்து, பிள்ளை மனம் கல்லு" என்பது இதுதான் போலும்.

"பாட்டி! நீ ஏன் அழுது கொண்டே இருக்கிறாய்? எனக்கு பசிக்கிறதே. சாதம் போடேன்" என் பேரனின் குரல் என்னை இந்த உலகத்துக்கு இழுத்தது.

"இதோ வரேண்டா கண்ணு" என்றபடியே பெண்ணையும் அவனுடன் சாப்பிட வருமாறு அழைத்தேன்.

"ஏம்மா! நீ இப்படி அழுது கொண்டே இருந்தால் பாட்டிக்கு உயிர் வந்துவிடுமா என்ன? ஏதோ கஷ்டப்படாமல் போனாளே என்று மனத்தைத் தேற்றுவதற்கு பதிலாக, என்னம்மா நீ! நீயும் சாப்பிட்டால்தான் நானும் சாப்பிடுவேன்" - பெண் பிடிவாதம் பிடிக்கிறாள்.

"ஏண்டி, என்னைப் பெற்றவள் அங்கே நெருப்பில் எரிந்து கொண்டிருப்பாள். என்னால் போக முடியவில்லையே என்று மனம் வெடித்துவிடும்போல இருக்கு. எனக்குச் சாப்பாடு கொள்ளுமா சொல்லு? நான் காப்பி குடித்ததே அதிகம். என்னோடு நீ போட்டிப் போடாதே. பிள்ளை பெற்ற உடம்பு பட்டினி கிடக்கக்கூடாது. எல்லாக் காரியமும் ஆனபின் ராத்திரிதான் ஒரு வாய் சாப்பிடப் போகிறேன். குழந்தை அழ ஆரம்பிப்பதற்கு முன் நீ சாப்பிட வா" என்று சொல்லியபடி அவர்களுக்குச் சாதம் போட்டுவிட்டு, வேலைகளை ஒழித்துக் கொண்டு பேசாமல் முடங்கிக் கொள்கிறேன்.

அப்பா காலமானபின் சுமார் கால் நூற்றாண்டுவரை தனியாகவே கிராமத்தில் காலத்தைக் கடத்தி வந்தாள் அம்மா. பிறந்த நான்கு குழந்தைகளும் திக்குக்கு ஒன்றாய் இருந்தனர். பெண்களில் நான் மட்டும் தூரதேசத்தில் இருந்தாலும் இரண்டு வருடங்களுக்கு ஒரு தடவை அம்மாவைப் போய்ப் பார்க்காமல் இருக்க மாட்டேன். அக்காவும், அவள் குழந்தைகள் வெளிநாட்டில் வேலை என்று போய்விட்டதால் அவளின் பூர்வீக புக்கக வீட்டில் தனியாகக் குடித்தனம் செய்து வந்தாள். அவளாவது பக்கத்தில் இருப்பதால் நினைத்துக் கொண்டால் அம்மாவைப் போய்ப் பார்த்து வந்து விடலாம். நான்கு அல்லது ஐந்து மணி நேரப் பிரயாணம்தான்.

இப்படியாகக் காலம் போய்க் கொண்டிருந்தது. நாலைந்து வருடங்களுக்கு முன்பு திடுமென்று உடம்பு பூரா கொப்புளங்களாக வாரிக் கொட்டியது. அரிப்பு, கொப்பளங்கள் உடைந்து வடியும் நீரால் ஏற்படும் துர்நாற்றம் இவற்றையே வைத்து டாக்டர் அது தோல்வியாதி என்றும், யாரையும் தொற்றிக் கொள்ளாது, பயப்பட வேண்டாம் என்றும் சொன்னார். இனியும் தனியாக இருக்கக்கூடாது என்பதை அம்மா உணர்ந்து கொண்டாள். மற்றவர்களின் தூண்டுதலும் சேர்ந்தது. தன் சின்னப் பிள்ளையிடம் போய்க் "கட்டை"யைப் போட்டுவிடுவோம் என்று கிளம்பிப் போனாள்.

நல்ல ஆரோக்யத்துடன் ரிடையர்ட் ஆன மாமனார், மாமியார் தங்களிடம் அடைக்கலம் தேடி வந்தாலே முகம் சுளிக்கும் பெண்கள் இருக்கும்போது, என்னதான் டாக்டர் இதைத் தொத்து வியாதி இல்லை என்று சான்றிதழ் கொடுத்த போதிலும், தங்களிடம் வைத்துக் கொள்ள விரும்புவார்களா?

வீட்டில் வைத்துக் கொள்ள முடியாது என்கிற நிலையில்



அம்மாவை மிகப் பெரிய தனியார் நடத்தும் ஆஸ்பத்திரியில் சேர்த்தான் பிள்ளை. நல்ல கவனிப்பும், போஷாக்கும் நிறைந்த உணவும், மருந்தும் கொடுத்து வியாதியைக் கட்டுப்படுத்தினார்கள். ஆனால் ஆயுள் உள்ளவரை இவ்வாறே இருந்தால்தான் நல்லது என்று சொன்னார்கள் மருத்துவர்கள்.

எத்தனை நாள்கள் ஆஸ்பத்திரியில் இருப்பது?

எல்லாருக்கும் பார்வையாளர்கள் ஆசையோடு பார்க்க வரும் போது அம்மாவுக்கு மட்டும் யாருமே பார்க்க வராதது வருத்தத்தைத் தரும்.

அப்படியே பிள்ளை மாதத்தில் ஓரிருமுறை வந்தாலும் 'கடுகடு என்று வேண்டா வெறுப்பாக வந்து போவதைவிட, வராமலே இருக்கலாமே என்று நொந்து கொள்வாளாம் தனக்குள்.

வீட்டுக்கு வந்தால், 'பிழைத்து வந்துவிட்டாளே கிழவி' என்று மாட்டுப் பெண்ணுக்கு எரிச்சல்.

விளைவு :- அக்ஞாதவாசம் போல தனி இடம். 'டொக்'கென்று காபி. இரண்டு வேளைக்கும் சேர்த்து வைக்கப்படும் சாப்பாடு. நாக்கு செத்துவிட்டது என்று மிளகு ரசம், சுக்குக் கஷாயம் என்று கேட்டால் மறுப்பு.

விளையாட்டுப்போல ஒரு வருடம் ஓடியது. அழையாத விருந்தாளியாக வந்துவிட்டோம். இனிப் படமுடியாது துயரம். ஒருநாள் துணிந்து, "பேசாமல் என்னை கிராமத்தில் கொண்டு விட்டுவிடு நான் எப்படியோ பார்த்து கொள்கிறேன்" - அம்மா பிள்ளை யிடம் கெஞ்சுகிறாள்.

"போன அடுத்த நிமிட உடம்பு அதிகம் ஆகிவிட்டது 'உடனே வந்து அழைத்துப்போ என்று தந்தி வரும். நாங் மட்டும்தான் பாத்யதைப் பட் வாளா என்ன?" மாட்டுப் பெ நிஷ்டூரமாகச் சாடுகிறாள்.

தனக்குக் கிடைத்த "வ வேற்பை" மனம் நொந்து அம்ம கூறி வருத்தப்பட்ட பொழுது "அம்மா! பேசாமல் யார் யாருக் எதைத் தரணுமோ அதை எழு வை. அல்லது சொல்லு. அத

## ஞாபகசக்திக்கு வல்லாரை....

படிக்கின்ற சிறார்கள் ஞாபகசக்தியும், ஆரோக்கியமும் கொண்டிட இந்த வல்லாரையை எப்படி சாப்பிடவேண்டும்?

16 வல்லாரை இலைக்கு 1 வசம்பு என்ற வீதம் இவை இரண்டையும் கலந்து - இடித்துத் தூள் தூளாக்கிக் கொள்ள வேண்டும். இதை ஒவ்வொரு நாள் காலையிலும் வெறும் வயிற்றில் தேனுடன் கலந்து சாப்பிட வேண்டும். மாலையில் விளையாடிவிட்டு வந்ததும் வல்லாரைத் தூளைப் பசும்பாலில் கலந்து சாப்பிட வேண்டும். இப்படி காலையிலும், மாலையிலும் தொடர்ந்து 3 மாதங்கள் சாப்பிட்டு வந்தாலே போதும். அந்தச் சிறார்களுக்கு மந்த புத்தி அகன்றுவிடும். மனதில் தைரியமும் - உடலில் சுறுசுறுப்பும் காணப்படும். நரம்புத் தளர்ச்சி அறவே குறைந்து - மறைந்து போய்விடும். பெரியவர்களும் பயன்படுத்தலாம்.

ஞாபகமறதிக்காரர்கள் மூளை வளர்ச்சியின்றிக் காணப்படுபவர்களுக்கு இந்த வல்லாரை உற்சாகத்தைத் தரக்கூடிய பொக்கிஷமாகும்.

—டி. ஆர். ஜி.

---

படி நான் கட்டாயம் செய்து விடுகிறேன். பேசாமல் என்னுடன் வந்துவிடு. உன்னை இவ்வாறு விட்டுவிட்டுப் போக என் மனம் இடம் கொடுக்க மாட்டேன்கிறது. ஏதேனும் ஆச்சுன்னாலும் நான் உன்னைக் கரையேற்றி விடுகிறேன்" என்றேன்.

"நன்னாயிருக்குடி! பொண் வீட்டில் வந்து இருக்கிறதாவது. அதுவும் இந்த மாதிரியான வியாதியுடன்! என் சுயபுத்தி இருக்கும் வரை இது மாதிரி நடக்காது. என் அம்மா கொடுத்த மஞ்சக்காணி சொத்து இருக்கு. அதை வைத்து எப்படியோ காலத்தை ஓட்டிவிடுவேன். எனக்குப் பின் பெண்களான உங்களுக்கு அவை வரும். பெண்களான உங்களால் முடிந்தபோது வந்து பார்த்துவிட்டுப் போங்கோ. உடம்பு ஜாஸ்தியாகிவிட்டால் பெரியவனை வரச்சொல்லிக் காரியத்தை முடியுங்க". நிறையப் பேசிவிட்ட ஆயாசத்துடன் அம்மா மௌனமானாள்.

அம்மாவின் பிடிவாதத்தை என்னால் மாற்ற முடியவில்லை.

கைகளில் பன்னிரண்டு ஜதை வளைகள், காசுமாலை, ஒட்டியாணம் அணிந்து, காதிலும் மூக்கிலும் தாடகம் போன்ற தோடும், மூக்குத்திகளும் "பளீர் பளீர்" என்று ஜொலிக்க ஒரு நடமாடும் நகைப்பெட்டகமாக "சுருள் சுருள்" கேசத்துடன் அம்மா இருந்த அழகு எங்கே போச்சு? எப்படி உருக்குலைந்து போய் விட்டாள்!

இந்தக் கெட்ட வியாதியால் ஆக்ரமிக்கப்பட்டு களையிழந்து, பொலிவு குன்றி, உடம்பு பூரா திட்டுத் திட்டாகக் காய்ந்தும் காயாததுமான புண்கள். சில சமயம் அந்தப் புண்களுடன் ஒட்டிக் கொண்டுவிட்ட துணியைப் பிய்த்து எடுக்கும்போது அம்மாவின் அலறல், அப்பப்பா அனுபவித்தவர்களுக்கும், நேரில் பார்த்தவர்களுக்கும்தான் நரக வேதனையை உணரமுடியும். எப்படித்தான் அந்தக் குத்துவலியையும் எரிச்சலையும் தாங்கிக் கொண்டாளோ!

அப்பா தன் சொத்துகள் பூராவையும் சரிசமமாக தன் இரு பிள்ளைகள் பேரிலும் எழுதிவிட்டு, அவர்கள் தங்கள் தாயாருக்கு உரிய மரியாதை, கௌரவம் கொடுத்துக் காப்பாற்ற வேண்டும் என்று உயில் எழுதி வைத்தார். பதிலாக எல்லாச் சொத்தையும் அம்மா பெயரில் எழுதி வைத்திருந்தால் அம்மாவின் கதி இப்படி ஆகியிருக்குமா?

பிள்ளையும் பெண்ணும் சரிசமம் என்று பேசினால் மட்டும் போதுமா?

பிள்ளை, மாட்டுப் பெண்ணிடம் அவமானப்பட்டாலும்கூட அவர்களுடன்தான் இருக்கணும், பிள்ளைதான் கொள்ளி போட வேண்டும் என்கிற எண்ணம் என்றைக்கு மாறும்?

ஏன், பெண் கொள்ளி போட்டால் அந்த உடல் வேகாதா?

பெண் வீட்டிற்குப் போய்த் தங்கினால் கேவலம் என்கிற பொய்யான மாயை என்றைக்கு அகலப் போகிறது?

"அம்மா என்ன பண்ணுகிறாள்? சாப்பிட்டாளா?" ஆபிஸில் இருந்து திரும்பிய கணவர் பெண்ணிடம் வினவுகிறார்.

குரல் கேட்டு, "அதற்குள் மாலை ஆகிவிட்டதா?" என்று சிந்தனையில் இருந்து விடுபடுகிறேன்.

"சாப்பிடமாட்டேன்னுட்டாப்பா. ராத்திரிதான் சாப்பிடுவாளாம்". பெண் பாடம் ஒப்பிக்கிறாள்.

"ஊருக்குப் போவதைப் பற்றி என்ன தீர்மானம் செய்திருக்கிறாய்?"

"இனிமேல் ஊருக்குப்போய் என்ன பண்ணப் போகிறேன்? அம்மாவையோ பார்க்க முடியாது. அண்ணன்கள்கூட வந்தார்களோ என்னமோ? அக்காதான் கொள்ளி போட்டிருக்க வேண்டும். இங்கேயிருந்து "பத்து"க்குப் போவதற்குப் பதில் "பத்து" ததியாராதனை பெண்களைச் சாரும் என்பார்கள். அதனால் அன்றைய தினம் பக்கத்தில் இருக்கும் முதியோர் இல்லத்தில் உள்ளவர்களுக்கு நல்ல சாப்பாடு போடச் சொல்லலாம் என்று இருக்கிறேன்.

அம்மா, முன்பு சொன்னது போல அம்மாவின் மஞ்சக்காணி சொத்து பெண்களாகிய எங்களுக்கு வரும். அப்போது அதில் இருந்து கொஞ்சம் பணம் எடுத்து நிஜமாகவே அநாதையாக இருக்கும் முதியவர்களுக்கு அம்மாவின் நினைவாக துணிகள் எடுத்துத் தரலாம் என்று நினைக்கிறேன். இதுதான் நான் என் அம்மாவிற்குச் செலுத்தும் சிறந்த அஞ்சலி என்று நினைக்கிறேன். நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" என்றேன்.

"பரிபூரணமாக இதற்கு நான் ஒப்புக் கொள்கிறேன்" என்றார் என் கணவர்.

ஃ

# சுயம்

கோதா பார்த்தசாரதி

**அமரர் சின்னி கிருஷ்ணன் நினைவுச் சிறுகதைப் போட்டியில் பரிசு பெற்ற சிறுகதை**

ஷவரிலிருந்து பூந்தூறலாகப் பீய்ச்சிக் கொண்டிருந்தது தண்ணீர்.

சந்தனச் சோப்பைக் குழைத்துச் சிறுபிள்ளைபோல் இரு கைகளிடையே குவித்து நுரைக் கொப்புளங்களைப் பறக்கவிட்டுக் கொண்டிருந்தான் வருண்.

குளியலறையிலே இணைக்கப் பட்டிருந்த டெலிபோன் சிணுங்கியது. 'சே - நிம்மதியா குளிக்கக் கூட விடமாட்டாங்களே!' செல்லமாய் அலுத்தபடி போனை எடுத்தான். அவன் காரியதரிசி குமார்தான். 'எக்ஸ்கியூஸ்மி, சார்! நீங்க குளிக்கப்போய் அரைமணி ஆச்சு. இன்னும் நீங்க காலை உணவு எடுத்துக்கணும். இன்னிக்கு டைட்டா ஷெட்யூல் இருக்கு. ஒன்பது மணிக்கு ஏவி.எம்.மில் இருக்கணும்.'

கடமை தவறாத, தவறவிடாத செகரட்டரி அவன். குளிக்கும் போது தடங்கல் ஏற்பட்டதால் கோபம் வந்தாலும் அடக்கிக் கொண்டான். ஒரு சமயம் லேட்டாகி விட்டாலும் 'ஞாபகப்படுத்தக் கூடாதா' என்று சத்தம் போடுவதும் அவன்தானே!

"ஒகே குமார் - நான் இன்னும் பத்து நிமிடங்களில் ரெடியாயிடுவேன். உடனே சமையல்காரரிடம் சொல்லிக் காலை உணவைக் கொண்டு வரச்சொல்லு!"

ஷவரை நிறுத்திவிட்டுத் தொட்டியிலிருந்து எழுந்தான். ஸ்டாண்டில் தொங்கிய பெரிய டவலை எடுத்துத் துடைத்துக் கொண்டு அதையே சுற்றியபடி வெளியே வந்தான். குமார் எடுத்து வைத்திருந்த உடைகளைப் போட்டுக் கொண்டபடியே 'குமார்!' என்றான்.

வெளியே காத்திருந்த குமார், "எஸ் ஸார்!" என்று உள்ளே ஓடி வந்தான். "நான் ரெடி குமார்! இப்ப சொல்லு ஷெட்யூல் என்னன்னு!"

சமையல்காரர் டிரேயில் மூடி ஏதோ கொண்டுவந்து வைத்து விட்டுப் போனார்.

9 மணிக்கு 'கீதம் சங்கீதம்' பட ஷூட்டிங். அப்புறம் 'ராஜாவின் ராணி' பட டப்பிங் இருக்கு. லஞ்சுக்கு அப்புறம்...'

"ஹேய் - ஸ்டாப் இட்யா! லஞ்சுக்கு மேலே நாம ஊருக்குப் போறோம். என் தங்கச்சி கல்யாணத்துக்கு - மறந்துட்டிய என்றான் தலை வாரியபடி,

"மறப்பேனா சார்? ஈவின கிளம்பினால்கூட போறுே பக்கம்தானே - அதுக்குள ரஞ்சனி பிலிம்ஸ் கடைசி ஷூட்டி பாக்கி நிக்குது சார்! பண்டிகைச ரிலீஸ் பண்ணணும்னு தவ கிறாங்க. இன் பாக்ட் நாளைக்கு தான் கால்ஷீட். தங்கச்சி கல் ணத்துக்காக இன்னி டேட் கொடு தேன். நீங்க இன்னும் ரெண் நாள் தங்கணும்னீங்களே!'

"ஒகே. ஒகே. டாண்ணு ஏ மணிக்குப் புறப்படணும். ரெண் நாளைக்கு வேண்டிய பொரு களை எடுத்துக்கோ. எ ரெண்டு நாளைக்கு! அங்கே வந் ஷூட்டிங், டப்பிங்னு எதுவு சொல்லாதே".

மேஜையின் முன் உட்கார் தான். மேலே மூடியிருந் துணியை எடுத்ததும் முக சுளித்தான். இரண்டு பிரெ ஸ்லைஸ்கள் நெய் இல்லாம வாட்டினது. கொஞ்சம் சாஸ் கொஞ்சம் ஜாம் - பிளாஸ்கில் காப சர்க்கரை இல்லாமல்.

"ஹேய் என்ன குமார் இது தினம் பிரெட் பிரெட்தானா? ஒ நாளாவது ஒரு சேஞ்சுக்கு எனக்குப் பிடிச்ச டிபன பண்ணக்கூடாதா?" என்று அலுத் படி ரொட்டியைக் கடித்தான்.

"டாக்டர் என்ன அட்வைஸ் பண்ணினார்; ஞாபகம் இல்லையா? தொப்பை போட ஆரம்பிச்சாச்சு. நீங்க இனிமே ஜாக்கிரதையா இருக்கணும்னு சொன்னார். தினம் ஜாகிங் போகணும் - எக்ஸர்சைஸ் பண்ணணும். டயட்டில் ஸ்டிரிக்ட்டா இருக்கணும்னாரே!"

"ஆமாய்யா அவருக்கென்ன - சொல்லுவார் - மனுசன் ஒரு நாளைக்குப் போல இரண்டு மணிக்கும் மூணு மணிக்கும் விளக்கடியிலே வெந்து சாம்பலாயிட்டு வரான். அஞ்சு மணிக்குத்தான் தூக்கமே வரது - அப்ப எங்க ஜாகிங் - எக்சர்ஸைஸ்? உன்னாலே முடிஞ்சது வயத்திலே அடிக்கறதுதான் - நடத்து!"

குமார் அசடு வழியச் சிரித்தான். வருணுக்குப் பிடித்தது

ழைய சாதமும், வெங்காயம், சை மிளகாயும்தான். வாடகை டில் இருந்தபோது சமையலுக் வந்த சமையல்காரரிடம் தைச் சொன்னபோது அவர் டைந்த அதிர்ச்சி! அவர் பித்த முழியை நினைத்தால் பவும் சிரிப்பு வருகிறது.

'என்னடா - பெரிய நடிகன் ன்னு வந்தால், காலையாகாரத் குப் பழஞ்சோறு கேட்கிறானே!' று நினைத்திருப்பார். அம்மா ம்போது கிடைக்கும். இப்ப மாகூட இவங்க கூட்டணிலே ந்துட்டாங்க!

"போகலாமா சார்?" என்ற ரின் குரலைக் கேட்டதும் னவு கலைந்து அவனுடன் கீழே ங்கினான்.

கடமை என்று இறங்கிவிட்டால் றதெல்லாம் கவனத்தில் ாது நடிகர் வருணுக்கு. ஒரு யாக எல்லா வேலைகளையும் த்துக் கொண்டு அங்கிருந்த இருவரும் கிளம்பினார்கள்.

காண்டேசா - இருவரும் ஏறிக் காண்டதும் - சீறிப் பாய்ந்தது. வன் சிந்தனையும் தங்கச்சி யாணத்தைப் பற்றியும், தன் ண்பர்களைப் பற்றியும், தன் ரைப் பற்றியும் அசைபோட ரம்பித்தது.

எத்தனையோ வருஷங்களாகி ட்டன. அவன் ஊர்ப்பக்கமே ாய்.

விழுப்புரம் அருகே உள்ள ராமத்தில் ஒரு விவசாயக் டும்பம் அவனுடையது.

பெரிய படிப்பெல்லாம் க்க வேண்டுமென்று அவனுக்கு ாம்ப ஆசை. நன்றாகப் த்து நல்ல மார்க்குகளும் ங்கி வந்தான்.

பெரிய குடும்பம் அவ டையது. கல்யாணத்துக்கு றும் அக்கா. இவனுக்குப் பின் ரண்டு தங்கைகள், தம்பி. பிக்கும் படிக்க ஆசை. ளைந்து வருவது வாய்க்கும் க்குமே சரியாகி விடும்போது லே படிப்பது எங்கே?

"காலேஜ் படிச்சவனெல்லாம் லை இல்லைனு அலையறான். ஸ்.எஸ்.எல்.சி.க்கு எவண்டா வேலையை வெச்சுண்டு காத்துண் டிருக்கான்? போக்கத்த பயலே - பேசாம என்னோடு சேர்ந்து பூமியிலே பாடுபடு - பூமித்தாய் வஞ்சனை செய்ய மாட்டா. போட்ட முதலை எடுக்கலாம்" என்றான் அப்பன்.

அவருக்கு முதலில் இருந்தே அவன் படிப்பது பிடிக்கவில்லை. அம்மாதான் அவன் ஆசைக்காகப் படிக்கவைத்தாள்.

ஸ்காலர்ஷிப், பழைய புத்த கங்கள் என்று பிளஸ்டு வரை தாண்டிவிட்டான். மேலே படிக்க வசதி இல்லை. படித்தவரைக்கும் ஏதாவது கிடைத்த வேலையில் சேரலாம் என்று வேலை தேடுவ தற்காகப் பட்டணம் புறப்பட்ட போதுதான் அப்பா அப்படிச் சொன்னார்.

அவர் சொன்னபடியே அவ னும் பூமியில் பாடுபட ஆரம் பித்தான். பையனிடம் பொறுப்பை ஒப்படைக்கவே காத் திருந்தது போல் கொஞ்ச நாளில் நோயாய்ப்படுத்த அப்பன் சில வருஷங்களில் இறந்து போனார். வீட்டுப் பொறுப்பு அவன் தலையில் விழ, மேற்படிப்போ வேலையோ பற்றி நினைக்கவும் முடியாதவனானான்.

அன்று அப்படித்தான் வய லில் தன் நண்பர்களுடன் சேர்ந்து அறுவடை செய்துகொண்டிருந் தான். ஊரெங்கும் அறுவடை முடிந்துவிட்டது. அவனுக்கு ஆள் கிடைக்கவில்லை. நண்பர்கள் வெளியாரின் வயலில் முடித்து விட்டு (அப்பொழுதானே காசு கிடைக்கும்!) பிறகு அவனுக்கு உதவ வந்திருக்கிறார்கள்.

> தலைவலி, பல்வலி, இதயப் பாதுகாப்பு போன்றவற்றிற்காக ஆஸ்பிரின் மாத்திரை தற்போது பெரிதும் உபயோகிக்கப்படுகிறது. அதை உபயோகிப்பவர்கள் வெளிக்காற்று புகாதபடி பாது காப்புடன் வைக்க வேண்டும். அப்படி பாதுகாக்கத் தவறினால் ஆஸ்பிரினால் பக்கவிளைவு ஏற்பட லாம். எச்சரிக்கை!
>
> —டி.ஆர்.ஜி.

சாலை ஓரம் போய் போய் வேன்களும், கார்களும் வரிசையாய் அணிவகுத்துப் போயின. "படம் புடிக்க வந்திருக்காங்கடோய்!" என்ற கூச்சலுடன் கிராமத்துச் சிறுவர் பட்டாளம் வண்டிகளின் பின்னே ஓடிவந்தது. வேனில் இருந்தும் காரிலிருந்தும் சிலர் இறங்கி கணேஷை (நம் கதா நாயகனின் பூர்வாசிரமப் பெயர் அதுதான்) நோக்கி வந்தனர்.

அதில் ஒருவர் வந்து இவனிடம் பேசினார்.

அறுவடை ஆகிக்கொண்டிருக் கும் ஒரு வயல் களம் அவர் களுக்குத் தேவை. கூட இன்னும் பத்து துணை நடிகர்கள் கலந்து கொள்வார்கள். அவன் அவர் களுடன் சண்டை போட வேண்டும். அவர்கள் படம் பிடித்துக் கொள் வார்கள் - அவன் தயாரா?

அவன் நடிப்புக்கும் வயலை உபயோகப்படுத்திக் கொண்ட துக்கும் கணிசமான பணம் கிடைக்கும்.

அவன் தயங்கினான். "எனக்கு என்னங்க நடிக்கத் தெரியும்?"

'சும்மா ஒரு பாவ்லாதான். செய்து பாருங்களேன்.'

நண்பர்கள் உற்சாகப்படுத்தி முன்னே தள்ளினார்கள். உடை அணிவிக்கப்பட்டது. சண்டை போடும் முறை துணை நடிகர் களால் நடித்துக் காட்டப்பட்டது. இனி ஒரு சிறிய ஒத்திகை.

பக்கத்தில் ஒருவன் குடை பிடிக்க, நாற்காலியில் பந்தா வாகப் பண்ணையார் - அறு வடையை மேற்பார்வை செய் கிறார். எதிரே கைகட்டி வாய் பொத்தி நிற்கும் கணக்குப்பிள்ளை. சாலையில் ஓடிவந்து நிற்கும் வண்டியிலிருந்து அவனும் அவன் நண்பர்களும் இறங்கி ஓடிவர வேண்டும், பண்ணையாரை நெருங்கி,

"ஐயா... இது அநியாயமுங்க. ஊரிலே நாட்டுலே எல்லாரும் தர்ற கூலியைத்தானே கேட்டோம்? அதுக்காக அதிகப்படி கூலிக்கு அசலூரிலிருந்து ஆட்களை வர வழைச்சுட்டீங்களே. அந்தக் கூலியை எங்களுக்குத் தர ஏன் மனசில்லை? இப்படி எங்க வயத்துலே அடிச்சுட்டீங்களே!"

அழாக்குறையாக அவன் கேட்க, அழுக்கமான சிரிப்புடன் அவர் மறுபக்கம் திரும்பிக் கொள்ள, அவன் அறுவடை ஆட்களிடம் ஓடி வருகிறான்.

"ஏய்யா, நாமெல்லாம் ஒரே சாதி - ஏழை சாதி - நீங்களே இதுக்குத் துணைபோகலாமா?"

"எங்களுக்கு வேண்டியது பணம். அதை அவர் தரேன்னாரு - வந்தோம். அவங்க வயத் துப்பாடு அவங்களுக்கு! போய் அவர் காலிலே விழுடா. புண்ணிய வான் போட்டுத் தருவாரு. என்னை ஏண்டா முறைக்கிறே?" என்று அவர்களில் ஒருவன் தள்ளவும் பண்ணையார் காலடி யில் போய் விழுகிறான்.

காலம் காலமாக வரும் தமிழ் சினிமாக் காட்சிதான் என்றாலும் கணேஷின் நெஞ்சில் ஆவேசத் தீ மூளுகிறது. அவனுக்கென்று இருக்கிற ஒரு துண்டு நிலத்தின் மேல் அந்த ஊர்ப் பண்ணை யாருக்கு ஒரு கண். ஊரிலிருப் பவர் நிலங்களையெல்லாம் கடன் கொடுத்து வட்டிகட்ட முடியாமல் முழுகிப் போய்த் தானே ஸ்வாஹா செய்து விட்டார். இவன் காணி மட்டும் தான் பாக்கி.

அதையும் விலைபேசி வாங்கி விடப் பெருமுயற்சி செய்தார். அப்பன் காலத்திலிருந்து இது வரை நடக்கவில்லை. அதனால் அந்த நிலத்தில் பயிர் செய்ய முடியாமல் எத்தனையோ தொல்லைகள். அத்தனையையும் மீறிப் போராடிக் கொண்டு வருகிறான். அதேபோல் இது ஒரு கதை. நிஜம்தானே நிழலாகிறது?

"எனக்குச் சம்மதம் சார்!"

டைரக்டர் முகத்தில் மகிழ்ச்சி. சண்டைக்குக் கொஞ்சம் பயிற்சி. மீண்டும் ஒத்திகை.

"ரெடி ஃபார் ஷாட்!"

சிறிது நேரப் பயிற்சிக்குப் பின் அனாயாசமாகச் சண்டை போடும் அவனைத் தட்டிக் கொடுத்த டைரக்டர், "இதோ பார் கணேஷ்! இப்பதான் மெய்யாவே படம் பிடிக்கப் போறோம். கவனமா இப்ப செஞ்சமாதிரியே 'ஸ்டார்ட் - ரெடி ஆக்ஷன்!' என்றதும் ஆரம்பி!" என்று அனுப்பினார்.

"ஸ்டார்ட் - ரெடி - ஆக்ஷன்!"



'ஒரு 'கட்!' சொல்லக்கூட இடம் இல்லாமல் - பண்ணையார் காலடியில் விழுந்த இவனை, நண்பர்களை நோக்கி கை அசைக்க, துணை நடிகர்கள் இறங்கிவர, நெல் களம் போர்க் களமாகிறது. உண்மையான பண்ணையார் மேல் உள்ள ஆவேசத்தில் அவன் நடிக்கவே இல்லை. அந்த விவசாயி ஆகவே மாறிப் போகிறான்.

"கட்!" எல்லாரும் பின் வாங்கு கிறார்கள். போர்க்களமாகிப் போன தன் வயலைப் பார்த்து ஓடுகிறான்.

"ஸ்பிலென்டிட் - மார்வலஸ்" என்று கை கொடுக்கப் போன டைரக்டரைக் கண் அசைவில் தடுத்து நிறுத்துகிறார் காமிரா மேன். காமிரா நிற்கவில்ல ஓடுகிறது.

தன் ரத்தத்தையும் வியர் யையும் உரமாக்கி அவன் ப பட்டதன் பலன் எல்லாம் ப காலடியில் மிதிபட்டுப் பாழா போயிருக்கிறது. ஐந்து வயிறு அரை குறைச் சாப்பாடாகவா கைகொடுக்கும் பொன்மணி சேற்றில்! சேற்றிலிருந்து சிதை நாற்றுக்கற்றையைச் சின் குழந்தையைத் தூக்குவது போ உணர்வில் மென்மைய மார்போடு தழுவி விம்முகிறா

இது நடிப்பில்லை - சினி கதையும் இல்லை. ஓர் உண் யான கண்ணீர்க் காவியம் அ அரங்கேறிக் கொண்டிருக்கி அதை முழுமையாய்த் தன்

யடக்கிக் கொண்ட திருப்தியுடன் ாமிரா தன் சுழற்சியை நிறுத்திக் காண்டது.

சேற்றில் மண்டியிட்டு விம்மிய னை இரு கரங்கள் தூக்கி றுத்தின. அவனை வற்புறுத்தித் ங்களுடன் நகரத்து ஹோட்டலுக்கு அழைத்துச் சென்றனர். குளிக்கச் சொல்லி, நல்ல உடை கொடுத்து, யிறு நிறைய சாப்பாடு வாங்கித் ந்து, கை நிறையப் பணமும் கொடுத்து அனுப்பினார்கள்.

இரண்டு நாள்கள் கழித்து மீண்டும் அவனைத் தேடி ந்தார்கள்.

அந்தப் படத்தின் ஹீரோ டிக்க மறுத்துவிட்டான். முதல் ஷூக்கே நடிக்க வராமல் ஒரு ாசம் இழுத்தடித்து, அதனால் வெறுப்படைந்து போன டைரக்டர் புரொடியூசரும் அவரே) நல்ல ாளில் மற்ற காட்சிகளில் ஏதாவது ஒன்றையாவது எடுக்கலாம் என்று ிராமத்துக்கு வர, கணேஷ் ண்ணில் பட்டான்.

உழைத்து உரமேறிப் போன கைகளும், உருண்டு திரண்ட ால்களும், சுருண்ட முடியும், கன்ற தோள்களும், பலகை போன்ற மார்பும், ஒட்டிய யிறும்... சொல்லிக் கொடுத் தை நிமிஷத்தில் புரிந்து கொண்ட ாமர்த்தியமும்!...

"வாவ்! இதோ இருக்கான்யா ம்ம ஹீரோ!"

வீடியோவில் கிராமத்துக் ாட்சிகளைப் போட்டுப் பார்த்துக் கொண்டிருந்த டைரக்டர் உற்சா த்துடன் கூவினார்.

பெருமையுடன் தலையை அசைத்த காமிராமேன் (அவரும் ார்ட்னர்).

"அதை நான் அப்பவே புரிஞ்சு ட்டேன் சார்! சண்டை முடிஞ் தும் அங்க நிஜமா நடந்தது. நம் தாநாயகன் குளோசப்பில் நடிக்க வண்டிய காட்சி. அவன் ண்மையான மனவருத்தத்துடன் டியதும் அவன் ரீஆக்ஷன் ப்படி இருக்குங்கிறதைப் பார்க் த்தான் காமிராவை ஓடவிட்டேன்" ன்றார்.

"அதான் பாத்துட்டமே ரவி. நல்லு எங்கே காக்கிறதுன்னு கேட்கிறவனுக்கு விவசாயியின் வருத்தம் புரியாது. ஒரு விவ சாயியின் வாழ்க்கையை அருமையான காவியமாக்கி இருக் கிறார் நம்ம சூர்யகுமார். நாம ரெண்டு பேரும் இத்தனை நாள் சம்பாதிச்சதை இந்தப் படத்தில் போட்டிருக்கோம். பரதன் பாபுலர் ஹீரோன்னு அவனைப் போட்டோம் - ஆனா ஒரே தடங்கலா..."

"அதைத்தாண்டி வரதுதான் நம்ம வெற்றி. நாம டூப் போட்டு அவனைக் கேளாமல் கிராமத்துக் காட்சிகளை எடுத்துட்டதாலே, அவன் நம்ம படத்துலே நடிக்க வராமலே நம்மை இழுத்தடிச்சு அழவைக்கப் போவதாக எல்லா ரிடமும் சொல்லிட்டுத் திரிய றானாம்".

"அப்படியா ரவி? அவன் மூஞ்சிலே அடிக்கிற மாதிரி, கணேஷை ஹீரோ ஆக்கிடுவோம். இதையே ஒரு சவாலா எடுத்துக் கொண்டு இதை ஒரு வெற்றிப் படமா ஓட்டிக் காட்டுவோம்".

'சேலஞ்ச்!'

'சேலஞ்ச்!'

இருவரும் செய்து கொண்ட சபதத்தை அவனிடம் சொல்லி, அவர்கள் உயிரே அந்தப் படத்தில்தான் இருக்கிறது என்றும் அவன் நடித்து ஒத்துழைத்தால் அவர்கள் தன்மானம் காப்பாற் றப்படும் என்றும் கெஞ்சினார்கள்.

"சினிமாவுக்கா - நானா?" வியப்பு - திகைப்பு. அடி மனத்தில் ஒரு பயம். எதுவோ அவனைத் தடுத்தது.

அம்மா தைரியம் தந்தாள். தம்பி தங்கைகள் கெஞ்சினார்கள். அக்காவின் கல்யாணம் சுலபமாக முடியும். ஏற்கெனவே கொடுத்த பணத்தில் கொஞ்சம் நகைகள் வாங்கியிருந்தான். இதுவும் ஒரு வேலைதானே? சம்மதித்தான்.

கணேஷ் வருண் ஆனது இப்படித்தான்.

பிரபல ஹோட்டலில் தங்க வைத்து புதுமுகக் கதாநாயகியுடன் நடித்த 'மண்ணின் மைந்தர்கள்' பரதன் கொடுத்த எல்லாத் தொல்லைகளையும் மீறிக் குறிப் பிட்ட பண்டிகை நாளன்றே ரிலீசாகி நூறு நாள்களுக்கு மேலும் ஓடியது. எல்லாரும் புது முகங்கள். டெக்னிகல் தயாரிப் பாளர்கள் இளையவர்கள். பிரபல இசையமைப்பாளர் நட்புக்காக இசையமைத்துக் கொடுக்க - நல்ல படம் நடிப்பு, டைரக்ஷன், காமிரா, இசை என்று எல்லாவற்றுக்கும் பரிசு வாங்கியது.

பட ரிலீசுக்குப் பிறகு அக்கா வின் கல்யாணம். அப்பொழுதே அவன் கையில் பத்துப் படங்கள் இருந்தன.

பெரிய பங்களாவுக்குக் குடி போனான். கார் வந்தது. ஆள் படைகள், ஊரில் அம்மா வீடு கட்டப் பணம் அனுப்பினான். தம்பி தங்கைகள் டவுனில் நல்ல ஸ்கூலில் சேர்க்கப்பட்டனர். மறு படி ஊருக்குப் போக முடியாத படி பிஸி. அம்மா அடிக்கடி வந்து போனாள். தங்கச்சி கல்யா ணத்தைப் பற்றிப் பேசினான்.

இத்தனை நாளும் தொல்லை தந்து வந்த பண்ணையார்,

## மிளகின் பயன்கள்

புளிய மரத்தின் துளிர் இலை யுடன் மிளகை அரைத்துப் பூச, படர் தாமரை எனும் தோல் நோய் குணமாகும்.

மிளகும் திராட்சையும் அரைத்துச் சாப்பிட சிறுநீரகக் கல் கோளாறு நீங்கும்.

மிளகு, பெருஞ்சீரகம், தேன் ஆகியவற்றைச் சேர்த்து லேகியம் செய்து சாப்பிட மூலநோய் குண மாகும்.

வால்மிளகைப் பன்னீர் விட்டு அரைத்துப் பற்றுப் போட தலை வலி நீங்கும்.

மிளகுத் தூளுடன் வெங்கா யத்தையும் சேர்த்துத் தலையில் ஏற்படும் பூச்சி வெட்டு, புழு வெட்டு விழுந்த இடத்தில் தேய்த் தால் குணமாகும்.

வெற்றிலையில் பத்து மிளகை வைத்து மென்று விழுங்கினால் தேள்கடி விஷம் நீங்கும். கடு கடுப்பும் நீங்கும்.

—டி. ஆர். ஜி.

தூரத்து உறவில் மாமன் முறையாக வேண்டும். இப்போது ரொம்ப நெருங்கிச் சொந்தம் கொண்டாடுகிறாராம். தங்கச்சியைத் தன் பையனுக்குக் கேட்கிறாராம். முறைப் பையன் உறவு முறை விட்டுப் போகக்கூடாது என்கிறார்.

அவனுக்குச் சிரிப்பும் வெறுப்பும் சேர்ந்தே வந்தது.

'அந்த உறவு முறையெல்லாம் அக்கா கல்யாணத்தின்போது எங்கே ஒளிந்து கொண்டது. அப்போது நான் பணக்காரனில்லை. திடீர்ப்பணம். குழியில் விழுந்தவனை எழவிடாமல் மிதிச்சிட்டே இருந்தார். யாரோ கை கொடுத்து எழுந்துட்டேன்.'

"உன் தங்கச்சியும் பண்ணையார் மகனையே காதலிச்சுட்டா! காதல்! பகையாளி குடும்பத்தில் காதல்! இரண்டு குடும்பத்தையும் அது இணைக்கப் போகிறது. கெடுத்துடாதே தம்பி!" என்றாள் அவன் அன்னை.

சிரித்தபடி, "இதை முன்பே சொல்லியிருந்தால் நான் ஏன் மறுப்புச் சொல்லப் போறேன் ஆத்தா? முன்னாடி நீங்க சொன்ன பொருத்தங்களை விட, மனப்பொருத்தம்தான் முக்கியம். அவனுக்கு நாம்ப ஒண்ணும் சளைச்சவங்க இல்லைன்னு நிருபிக்கிற மாதிரி ஜமாய்ச்சுடுவோம்" என்றான் நடிகன் வருண்.

அண்ணா நகரில் அவன் கட்டிக்கொண்டிருந்த வீடு முடிந்து கிருகப்பிரவேசம் தடபுடலாக நடந்தது. வருங்கால சம்பந்தி பண்ணையார் திறந்த வாயை மூடவே இல்லை. மாலை வரவேற்புக்கு வந்திருந்த சினிமா பிரமுகர்களையும் அவர்கள் இவனிடம் வைத்திருந்த மதிப்பையும் பார்த்து அசந்துவிட்டார்.

"எனக்குக்கூட படம் எடுக்கணும்னு ஆசையாயிருக்கு தம்பி. நீங்க சொன்னால் அவங்க தட்டமாட்டாங்க. இந்த 'மண்ணின் மைந்தர்கள்' குரூப்பை வெச்சு எனக்கு ஒரு படம் பண்ணித் தரச் சொல்லுங்க, தம்பி!"

அவனுக்குச் சிரிப்பு வந்தது! அடக்கிக்கொண்டு, "பார்க்கலாம்" என்றான். போகும்போது கல்யாணத்துக்கு வேண்டிய சாமான்களை மூட்டை கட்டிக்கொண்டு போனாள் அம்மா. குமாரைத் தவிர வேறு யாரையும் அழைக்க வேயில்லை அவன்.

நடிகன் வருணுக்கு ஒரு விபரீத ஆசை! கிராமத்துக்குப் போக வேண்டும். ஒருமுறை தன் வயலைப் பார்க்க வேண்டும். பெருகி வரும் ஆற்று வெள்ளத்தில் நண்பர்களுடன் பாலத்திலிருந்து குதித்து இந்தக் கரையிலிருந்து மறுகரைக்கு நீந்த வேண்டும். நண்பர்களுடன் கைகோத்து ஊரைச் சுற்ற வேண்டும்.

இந்த ஆசைகளெல்லாம் அவர்கள் வந்தால் நிறைவேறுமா?

விழுப்புரத்தை அவர்கள் நெருங்கியதுமே, கிராமத்துக்குத் திரும்பும் வழியில் பண்ணையாரின் கார் காத்திருந்தது. பண்ணையாரே வரவேற்க நேரில் வந்திருந்தார். நகரத்தில் பெரிய ஹோட்டலில் ஏசி ரூம் ரிசர்வ் செய்திருப்பதாகவும் அங்கு தங்கி கொஞ்ச நேரம் ஓய்வு எடுத்துக் கொண்டு வரலாமென்றும் சொன்னார்.

அவன் மறுத்துவிட்டுக் கிளம்பி விட்டான். அம்மா பதறினாள். ஏசி இல்லையே என்று தவித்தாள். அவன் சிரித்தான்.

"நான் இங்கேயே பிறந்து வளர்ந்த பயல்தானே – ஏசியில தான் பிறந்தேனா?' நம்ம குடிசை எங்கே ஆத்தா? அந்த மண் தரையிலே உருண்டு புரளணும். உன் கையாலே கேழ்வரகுக் கூழு சாப்பிடணும்னுட்டுத்தான் ஓடி வந்தேன்!"

"அட என் ராசா! கல்யாணச் சந்தடியிலே இவனுக்கு வந்த ஆசையைப் பாருங்க. கேவுரு கூழு வேணுமாம். யாராவது கேட்டா சிரிக்கப் போறாங்க. உனக்கு தனி ரூம் இருக்கு. மேலே போ. ஸ்வீட் – டிபன் அனுப்பறேன். கீழே படுத்து உருள்றானாமே. யார் கண்ணும் படப் போறது" என்று மாடிக்குத் துரத்திவிட்டாள்.

குடிசையை இடிக்க வேண்டாம்னு அம்மாவிடம் சொல்லத் தேவையில்லை என்று நினைத்தான். நல்ல விலைக்கு வந்த ஒரு வீட்டை வாங்கிப் புதுப்பித்து இந்த வீட்டைத் தங்கைக்குச் சீதனமாக எழுதிவிட்டாளாம்.

"நம்ம குடிசை இருந்த இடத்துலே வீடு கட்டிக்கிறேன்னு முதலியார் கேட்டார். நமக்கு இனி இங்கே எதுக்கு வீடு? அவங்களுக்குச் சமதையா நாமளும் செய்யறமில்ல? அதான் இந்த வூட்டை எழுதிப் போட்டேன். கடலாட்டம் பங்களா பட்டணத்துலே இருக்கச்சே இங்கே இந்தக் குடிசை எதுக்கு?" என்றாள் அம்மா. அவனுக்குள் எதுவோ உடைந்தது போலிருந்தது. மாடி மேலிருந்து தன் குடிசை இருந்த திக்கைப் பார்த்தான். குடிசை இடிக்கப்பட்டு பெரியதாக அஸ்திவாரத்துக்காகத் தோண்டப்பட்டிருந்தது. அவன் கண்ணில் நீர் புரண்டது.

"இது வெறும் குடிசைதானா அம்மா?"

அடிவயிற்றில் எதுவோ வேதனை செய்தது. அது அவன் அப்பன் ஆத்தா வாழ்ந்த இடம். அவர்கள் பிறந்து வளர்ந்த இடம். விளையாடிய இடம். புயலில் கூரை விழுந்தபோது அவனும் அப்பனுமாகச் சேர்ந்து மாற்றி இருக்கிறார்கள். மழையில் சுவர் கரைந்த போது அவன் கையினால் சேறு பூசி இருக்கிறான்.

## வெல்லம்

பனைவெல்லம், ஓமம், நாய்க்கடுகு ஆகிய மூன்றையும் அரைத்து நெல்லிக்காய் அளவு காலை, மாலை சாப்பிட்டால் பசி உண்டாகும்.

வெல்லம், மிளகு, பசுநெய் சேர்த்து லேகியமாகச் சாப்பிட தொண்டைப்புண் சரியாகும். வெல்லம், எள், சுக்கு, மிளகு, அதிமதுரம் ஆகியவற்றைப் பயன்படுத்தி கஷாயம் செய்து சாப்பிட சூட்டு இருமல் நிற்கும்.

சுக்கையும், பனை வெல்லத்தையும் சேர்த்து சுக்குக் காப்பி சாப்பிட பித்தம் நீங்கும்.

தேன், வெல்லம், நெய், எள், கசகசா, அஸ்வ கந்தி, கிச்சலிக் கிழங்கு, நிலப் பனைக் கிழங்கு ஆகியவற்றைச் சேர்த்து லேகியம் செய்து சாப்பிட நரம்புகளுக்குப் பலமும் வீரியமும் ஏற்படும்.

—டி. ஆர். ஜி.

இதெல்லாம் அம்மாவுக்குத் தெரியாதா? தெரிந்தும் ஏன் இப்படிச் செய்தாள்? பணத்துக்காகவா? இதை விற்றதில் எவ்வளவு பணம் வந்துவிடப் போகிறது? அருகில் நின்ற அம்மாவைப் பார்த்தான். முழு அகலம் கரை போட்ட புடைவை. சரிகைக் கரை வைத்த ரவிக்கை. கழுத்தில் இனி இடமில்லை என்னும்படி பிடி சங்கிலிகளும் நெக்லசும், கை கொள்ளாமல் வளையல்கள், காதிலும் மூக்கிலும் சுடர்விடும் வைரங்கள்.

இப்போது புரிந்துவிட்டது அவனுக்கு.

பண்ணையாருக்கு மேம்பட்ட அந்தஸ்தில் வாழணும் என்று ஆசைப்பட்டது நியாயமாக இருக்கலாம். ஆனால் அம்மா பழைமையின் அவமானச் சின்னமாக அந்தக் குடிசையைக் கருதி, அதைத் தலைமுழுக நினைத்துவிட்டாளே!

"என்னடா - ராசா - தூக்கம் வருதா - கண்ணும் மூஞ்சியும், கலங்கி இருக்கு?" சித்தே படுத்து உறங்கு. நான் வாரேன்" என்று நைசாக நழுவிவிட்டாள். வேதனையோடு அவன் படுத்திருக்கும் போது அக்கா வந்தாள்.

"தூங்கறியா தம்பி!"

"இல்லேக்கா வா. அத்தான் வரல்லையா?" என்றான்.

"வந்திருக்காரு. அவருக்குக் கொஞ்சம் மனச்சங்கடம். ஒண்ணும் இல்ல தம்பி. இப்பக் கொஞ்சம் வசதியா இருக்கிறதாலே தங்கச்சிக்கு எல்லாம் நல்லா செய்றியாம். எங்க கல்யாணத்துலே எதுவும் அப்படி செய்யலைன்னு அவருக்குக் குறை. அம்மாகிட்ட சொன்னா காதிலே போட்டுக்கல்லை".

அம்மாவின் கழுத்து நகைகள் - கை வளைகள் ஏனோ கண் முன் வந்து போயின.

"கவலைப்படாதே அக்கா! இப்ப இதைக்கொடு. அப்பாலே என்ன வேணுமோ வாங்கித் தரேன்" என்று கூறித் தன் கழுத்தில் போட்டிருந்த பத்து பவுன் செயின், கையில் இருந்த வைர மோதிரம். போன்றவை எல்லாவற்றையும் கழற்றிக் கொடுத்தான். பேச்சுக்குக்கூட "ஏன் தம்பி - போட்டிருக்கிறதைக் கழற்றித் தாரே?"ன்னு அவள் கேட்கவில்லை.

அவள் கவலை அவளுக்கு. அத்தான் என்ன பிடுங்கினாரோ, பாவம்!

தங்கை வந்தாள். கல்யாணப் பெண். நமஸ்காரம் செய்தாள்.

"அண்ணா! இந்தப் பட்டிக்காடே பிடிக்கவில்லை. நானும் மெட்ராசுக்கே வந்துடறேன். அவருக்கும் சினிமாவுல சான்ஸ் வாங்கித் தாங்கண்ணே!"

*அவனுக்குச் சிரிப்பு வரவில்லை - மாறாகக் கவலை வந்தது.*

*"பெண்ணே! உனக்கு இது பட்டிக்காடாய்த் தோன்றுகிறதா? நீ பிறந்து வளர்ந்தது இங்கே! உன்னை இப்படி மாற்றியது எது? சினிமாப்பணம் - சுலபப்பணம்!"*

தம்பி தங்கை வந்து தயங்கிய படி மேலே படிக்கும் நியாயமான ஆசையை வெளிப்படுத்தினார்கள். அவன் நண்பர்கள் வந்திருப்பதாகவும், அம்மா அவன் தூங்குவதாகச் சொல்லி நிறுத்திவிட்டதாகவும் தம்பி சொன்னான். அதற்கு மேல் அவனுக்கு இருப்புக் கொள்ளவில்லை. கீழே இறங்கிவிட்டான்.

ஓடி அணைத்துக் கொள்ளப் போனால், நண்பர்கள் தயங்கி ஒதுங்கினார்கள். பழைய கதைகளைப் பேசி குஷியாகப் பொழுதைப் போக்க நினைத்தவனுக்கு ஏமாற்றம். "அண்ணே! 'வாடாத ரோஜா'வில உங்க ஃபைட் பிரமாதம்ணே!"

'தேன் மலர்' படத்துலே மாடியிலிருந்து கீழே விழுந்தீங்களே. எப்படிண்ணே! அடிபடாதா?'

> ஆஸ்துமா தொந்தரவு உள்ளவர்கள் காலையிலும் மாலையிலும் படுக்கப் போகும்போதும் துளசி இலைப் பானம் சாப்பிடலாம். துளசி இலையைக் காய வைத்து இடித்துத் தூள் செய்து வெந்நீரில் போட்டு சுவைக்குப் பனை வெல்லம் சேர்த்துக் குடிக்கலாம். ஆஸ்துமா தொந்தரவு குறையும்.
>
> —டி. ஆர். ஜி.

"உங்களைத் துப்பாக்கியால் சுடறானே வில்லன் - அம்மாடியோவ் எவ்ளோ ரத்தம்?"

வருணுக்குத் தாங்கவில்லை. கத்தினான்.

"டேய் நிறுத்துங்கடா? எப்பவும் போல என்னை டேய் கணேசுன்னு கூப்பிடப் போறீங்களா இல்லையா?'

"அது எப்படிண்ணே? நீங்க இப்ப எம்மாம்பெரிய ஆளு? பட்டணத்துலே உங்களைப் பார்க்கணும்னா முடியவே முடியாதாமே!"

"இப்ப உங்களைப் பார்த்ததாலே ரொம்ப சந்தோசம்ணே. பட்டணத்துக்கே ஒரு தடவை வாரோம்! ஒரேயொரு ஷூட்டிங் பார்க்க ஏற்பாடு செய்யுங்கண்ணே!"

"பாவம் - இவர்கள் கபடமற்றவர்கள். இவர்களை மாற்ற முடியாது. அவரவர்களுக்காக வாங்கி வந்திருந்த சின்னச் சின்ன பரிசுகளுடன் தன் கையெழுத்திட்ட போட்டோவையும் கொடுத்தான். மாடியில் வந்து பரிமாறுகிறேன் என்றாள் அம்மா - மறுத்துவிட்டு எல்லாருடனும் ஒன்றாய்ப் பந்தியில் உட்கார்ந்து சாப்பிட்டான்.

சம்பந்தி வீட்டில் என்ன? அவன் அம்மாவே அவனைச் சம்பந்தி மாதிரி உபசரித்தாள். இரவு முழுதும் தூக்கம் இல்லை. காலையில் கோயிலில் கல்யாணம் நடந்து முடிந்தது. அதற்குள் அம்மா நூறு முறை "நீ எப்பக் கிளம்பணும் ராசா?" என்று கேட்டுவிட்டாள். பண்ணையாரோ "தம்பிக்கு ஒவ்வொரு நிமிசமும் ஒராயிரம். இவ்வளவு தங்கினதே பெரிது!" என்று அசடு வழிந்தார். சிவப்புக்கரை போட்ட பட்டும் மேல் வேட்டியும் சில்க் ஷர்ட்டும் வாங்கி இருந்தார் பண்ணையார்.

"குமார்! சாப்பிட்டதும் கிளம்பறோம்" என்றான்.

"ஏன் சார் - ரெண்டு நாள் இருக்கணும்னீங்க?" என்று ஆச்சர்யத்துடன் கேட்டான் குமார்.

"இல்ல குமார்! இங்கே தங்கினா எல்லாரும் நம்மையே சுத்தி வராங்க. அங்கேயும் அவங்

களுக்குக் கஷ்டம்" என்றான் சுருக்கமாக. குமாருக்கு ஆச்சரியம் என்றாலும் நிம்மதி. தயாரிப்பாளர்களுக்கு பதில் சொல்ல வேண்டியது அவனல்லவா?

கிளம்புமுன் "இதுலே கையெழுத்துப் போடுப்பா" என்று ஏதோ பத்திரங்களை நீட்டினாள் அம்மா. புதுவீட்டுப் பத்திரத்துடன், அவர்கள் காணிப் பத்திரமும் இருந்தது.

"அம்மா - என்னம்மா இது?" என்று அலறிவிட்டான் வருண்.

"ஆமாடா ராசா - எந்தக் காணியை நம்மைக் கடனாளியாக்கி வாயிலே போட்டுக்கணும்னு நெனைச்சாரோ, அதே காணியை நான் அவருக்கு மேலே ஒசந்து என் மகளுக்குச் சீதனமாத் தாரேண்டா! இப்பதான் என் நெஞ்சு நிரம்பி இருக்கு. இனிமே நமக்கு இங்கே என்ன வேலை? என் ராசா! நானும் புள்ளைங்களைக் கூட்டிட்டு ஒரு மாசத்துலே வந்துடுவேன்" என்றாள் அம்மா. நீட்டிய இடத்தில் கையெழுத்துப் போட்டான். கண்ணில் திரண்ட நீரை மறைத்துக் கொண்டான். அவன் சிறந்த நடிகனாயிற்றே!

ஊரே திரண்டு வழி அனுப்பியது.

"ஏன் சார் - ரெண்டு நாள் தங்கணும்னு" இழுத்தான் குமார்.

"குமார் - நான் நடிகன்கிறதை மறந்துட்டு ரெண்டு நாள் நிம்மதியா குடும்பத்தோட, சொந்த ஊரிலே, என் பழைய நினைவுகளில் வாழணும்னு வந்தேன். இங்கேயும் என்னை எல்லாரும் ஒரு நடிகனாத்தான் பார்க்கிறாங்க. அம்மாகூட ஆற்றிலே போய்க் குளிச்சா ஜலதோஷம் பிடிச்சுக்கும்னு பயப்படறா. என் ஒவ்வொரு நிமிஷமும் எத்தனை ஆயிரம் மதிப்புன்னு கணக்குப் போடறாங்க. எந்தப் பந்தாவை விட்டுட்டு சாதாரண கணேஷா என் ஊருக்கு வரணும்னு ஆசைப்பட்டேனோ? அந்த ஆசை நிராசையாப் போச்சு.

மேடை நடிகன் பாடு தேவலைப்பா. ஏஜீஸ் ஆபீஸ் கிளார்க்கோ, பாங்க் மானேஜரோ, கவர்ன்மெண்ட் அக்கவுண்ட்டன்டோ பவுடர் பூசி மேடையில் ஏறினால்தான் நடிகன். நாடகம் முடிஞ்சு வீட்டுக்குப் போனால் கணவன், பிள்ளை, அப்பா. ஆபிசுக்குப் போனால் மானேஜர், அக்கௌண்டண்ட், குமாஸ்தா தான். இந்த சினிமா நடிகனை மட்டும் எங்கேயும் எப்பவும் நடிகனாகத்தான் பார்க்கறாங்க[illegible] ஒரு நிமிஷம் நிறுத்[illegible] டிரைவர்!"

தன்வயலை நோக்கி நடந்[illegible] கணேசன்.

"இதுதான் 'மண்[illegible] மைந்தர்கள்' படத்தில் என்னு[illegible] நடித்த பூமி, குமார்! தன் எ[illegible] கஷ்டத்திலும் விற்கவோ, [illegible] வைக்கவோ செய்ததில்லை [illegible] அப்பா. இதுலே என் பாட்[illegible] எங்கப்பன் நான் மூணு [illegible] எங்கள் ரத்தம் சிந்தப் [illegible] பட்டிருக்கோம். எங்கம்மா, [illegible] பந்தியைவிடத் தன் கை [illegible] யிருக்கணும்கிற கௌரவ[illegible] காக, வைராக்கியத்துக்காக [illegible] விட்டுக் கொடுக்கத் து[illegible] சிட்டாங்க. நான் இழந்தது [illegible] பூமியை மட்டுமல்ல, குமார்! [illegible] சுயம் - என் அடையாளம் எல்[illegible] தையும்கூட!"

அந்தப் பூமியின் ஒ[illegible] மண்ணை நெஞ்சோடு அ[illegible] படி, கடைசி பந்தமான தொ[illegible] கொடி அறுபட்டதும் வீறிட்[illegible] குழந்தைபோல் வாய்விட்[illegible] அந்த 'மண்ணின் மைந்[illegible] வியப்புடன் பார்த்தபடி நின்[illegible] குமார்! ●●●

## முதலில் அறிந்த முனிவர்

இந்திய வைத்திய முறையில் மூலிகை முறை சிறப்பாகக் குறிப்பிடத் தக்கதாகும். மூலிகைகளின் மருத்துவக் குணங்களைப் பற்றி முதன் முதலில் அறிந்த முனிவர் பரத்வாஜ முனிவராவார்.

## ஆஸ்துமா

ஒவ்வாமையினால் வருவது ஆஸ்துமா. இந்நோயின் அறிகுறிகள் : மூச்சுத் திணறல், சளியுடன் கூடிய இருமல், வொய், வொய் என்ற சப்தம் நெஞ்சிலிருந்து அடிக்கடி வெளிப்படுவது ஆகியனவாகும்.

## முடி உதிர்கிறதா?

தலையில் சோப்பு போட்டுக் குளிப்பதால் முடி உதிரும் என்று சொல்ல முடியாது. வைட்டமின் குறைவினாலும் முடி உதிர்வதில்லை. முடி உதிர்வதற்குக் காரணம் தோல் சம்பந்தமான நோய்கள்தான். வைட்டமின் ஏ அதிகமாக உட்கொண்டால் முடி உதிர்வதைக் குறைக்கலா —சரளா

## நவமணிகளின் மருத்துவக் குணம்

### முத்து

மணிகளில் தாதுப்பொருள்கள் உள்ளன. முத்துகள் பெண்களின் மலட்டுத் தன்மையைப் போக்கக் கூடியவை என்று கருதப்படுகிறது.

### வைரம்

அணிந்து கொண்டால் பைத்தியம் தெளியும் என்று நம்பப் படுகிறது.

### மாணிக்கம்

மாணிக்கம் முக்கியமாக வீரம் தரக்கூடியது. தீய எண்ணங்களை அகற்றும். நச்சுப் பிராணிகளைக் கொல்லும் தன்மையும் மாணிக்கத்துக்கு உண்டு.

### மரகதம்

மரகதப் பச்சைக்கு ந[illegible] தன்மைகளை முறிக்கக்கூ[illegible] சக்தி உண்டு.

### நீலம்

கண்பார்வைக்கு நல்லது.

### புட்பராகம்

இது ஆண்மையைப் பெரு[illegible] கூடியது.

### வைடூரியம்

விஷக் காய்ச்சலைக் கு[illegible] படுத்தக்கூடியது. கடிவ[illegible] வைத்தால் நஞ்சுகளை முறி[illegible] தன்மை கொண்டது.

### கோமேதகம்

தோல் சம்பந்தமான வ[illegible] களைக் குணப்படுத்தக் கூடிய[illegible]

### பவளம்

கக்குவான் இருமல், மன[illegible] போன்றவற்றுக்குப் பவ[illegible] விருந்து மருந்துகள் தயாரி[illegible] படுகின்றன. தொகுப்பு : [illegible]

ஆதாரம் : 'நவமணிகள்' [illegible]



சிறுகதை



**அமரர் சின்னி கிருஷ்ணன் நினைவுச் சிறுகதைப் போட்டியில் பரிசு பெற்ற சிறுகதை**

"பொண்ணு பெரியவளா ஆனா அதுக்கொரு விருந்தா...? கூத்தான்னா இருக்கு... எங்க நாள்லே ருதுவானா, வீட்டில் இருக்கிற ஆம்பளைகளுக்கும் கூடச் சொன்னாத்தான் தெரியும்... பொண்டுகள் வந்து மணையிலே ஒக்காத்தி அவாளே முடிச்சுடுவா... ஆம்பளைகளா... மூச். பேசப்படாது. அது சரி கோபாலா, ஒன் மனைவி வரலையா?" பெரியம்மா மூக்குக் கண்ணாடியை மேலே தள்ளிவிட்டு, முக்காட்டைச் சரிபண்ணிக்கொண்டாள்.

"இல்லே பாட்டி... அவ ஏதோ செமினார்னு திருச்சினாப்பள்ளி போயிருக்கா. எல்லாத்தையும் நான் அரேஞ்ச் பண்ணிட்டேன். அவளுக்கு இதவிட்டா அப்புறம் செமினார் வேற எங்கேயாவது போட்டுடுவான்... அப்போ, மணி! எல்லாரையும் அழைச்சிண்டு வந்துடு... நான் போய் வீடியோக் கடையில் சொல்லணும்...."

"வீடியோ வேறா... பேஷ்... பொம்மனாட்டிக் கொழந்தை தினமுமா ருதுவாகப் போறா? செமினார் எங்கே போயிடும்? ஆம்பளைகள் எதுக்குத்தான் ஒடறதுன்னு இல்லையா..."

கோபாலன் எச்சில் விழுங்கினான். விடைபெற்றுக் கொண்டும் நகர முடியாத நிலைமை... பெரியம்மா பேசும்போது இறங்கிப் போனால் அது அவமரியாதையாகிவிடும்... தவித்தான்...

மணி ஒத்தாசைக்கு வந்தான். பெரியம்மாவை அவள் அறியாமல் முறைத்து விட்டுக் கோபாலன் பக்கம் திரும்பினான்.

"ஓ.கே. கோபால், நீ கிளம்பு... நான் பார்த்துக்கறேன்..."

"பாட்டி நான் வரட்டுமா?"

"வாடாப்பா... கொழந்தைக்கு நல்லபடியா எல்லாம் அமையும்... இந்தா... இந்தப் பணத்தை என் ஆசீர்வாதப் பணமா வச்சுக்கோ" என்று சுருட்டப்பட்ட ஐந்து ரூபாய்த் தாளை அவன் கைகளில் போட்டாள்...

"நீங்க வரணும் பாட்டி..."

"அய்யய்யே, அங்கெல்லாம் நான் வந்து நிக்க முடியுமோ? நீங்க எல்லாம் அமரிக்கையா வந்திருப்பேள், நான் வந்தா யார் இந்த அச்சுபிச்சும்பேள்... நான் பழைய பாத்திரம்னா..."

"சரி, நீ வா கோபாலா..." மணி துரிதப்படுத்தினான். "பெரியம்மா எப்போதும் இப்படித்[...] நேரம் காலம் தெரியாது. எ[...] நிற்போர் மனம் புரியாது".

"என்ன பெரியம்மா [...] திரும்பத் திரும்பச் சொல்லிய[...] ஒங்கிட்ட.... அடுத்தவா வி[...] துல தலையிடறது ரொம்பத்[...] பான சமாசாரம். யாரோ எது[...] பண்ணிட்டுப் போறா..." பொரிந்தான்.

"அது எப்பிடி...? தெரு[...] போறவன், வர்றவனுக்கா [...] பேசினேன்? கோபாலன், [...] ரெண்டு பேரும் ராம லட்சும[...] மாதிரி. நீ வேறே அவன் வே[...] எனக்கு... என் மனசுல பட்ட[...] சொன்னேன்".

"ஒன் மனசுல பட்டா அ[...] ஒன்னோட வச்சுக்கோ[...] கோபாலனுக்கு என்னவோ ம[...] ஆச்சு..."

"என்ன மாதிரி ஆகும்? எ[...] தான் தம்பட்டம் அடிக்கணு[...] ஒரு கணக்கு இல்லே... ந[...] வந்தது வீடியோவும், ஒண்ணு[...] கிரகசாரம்..."

பெரியம்மா விழும் மூக்[...] கண்ணாடியைத் தள்ளிக் கொ[...] தொடர்ந்து பேசினாள். [...] கைந்து வாக்கியங்களுக்கு [...] முறை கண்ணாடி சறுக்கி[...] அவளும் அனிச்சையாக [...] டைரட்டரில் ஸ்பேஸ்பா[...] தள்ளுவது போல் தள்[...] கொண்டாள். பேச்சு பாட்டு[...] பேச்சு...

மணியின் மனைவி சா[...] அழைத்தாள். மணிக்கும் அ[...]

ணன் சுனந்தாவிற்கும் தட்டு
ாடப்பட்டிருந்தது. சுனந்தா
யக் காணோம். அவள் அறையி
ருப்பாள்...

"எப்போ பாத்தாலும்
சவிட்டுக் கிழவி மாதிரி காதில்
ளையம் மாட்டிண்டு இடுப்புல
ரு டப்பாவோட அலையறது.
டக்கத்தி பைராகி மாதிரி.
ரையப் பெருக்குகிற மாதிரி ஓர்
ங்கி... போய்க் கூப்பிட்டா
ாதுல வாங்கினாத்தானே...."

"ஒன்ன யார் அவளைப் போய்க்
ப்பிடச் சொன்னது? அவ
ன்னக் குழந்தையா..? பசிச்சா
ந்து போட்டுக்கப் போறா..."

எல்லாத்திலேயும் தலையீடு.
ல்ல வேளை. ஸ்தலத்தில்
னந்தா இல்லை. இருந்தால்
ாய்க்கு வாய் அவளும் வார்த்தை
ாடுவாள் பெரியம்மாவுடன்.

பெரியம்மா பேசாமல்
இருக்கலாம் நிம்மதியாய்... கேட்க
ாட்டாள். அது ஏன் அப்படி.
இது ஏன் இங்கு என்று தொள்ளா
ிரம் கேள்விகள். அவள் ஒருத்
திக்குப் பதில் சொல்வதால்
ஏனைய வேலைகள் கெட்டுப்
போகின்றன.

அந்தக் காலத்து மனுஷி என்ப
தால் எவ்வளவுதான் பொறுத்துப்
போக முடியும்? ஒரு சமயம்
இல்லாவிட்டால் ஒரு சமயம்
கோபம் ரத்தத்தில் இருந்து புறப்
படுகிறது. காலத்திற்கேற்றவாறு
கொஞ்சம் அனுசரித்தால் என்ன?

வீட்டுக்கு யாராவது வருவ
தென்றால் நாலா பக்கமும் கண்
களைச் சுழற்றியபடிதான் பேசு
கிறார்கள். 'நாய் ஜாக்கிரதை
போர்டைப் பார்த்து விட்டு
வீட்டுக்குள் நுழையும் அந்நியனைப்
போல...

புத்தகங்கள், அவளுக்கென்று
தனியாய் ஒரு சின்ன ரேடியோ
எல்லாம் வாங்கிக் கொடுத்திருக்
கிறது. இருந்தும் குறுக்கு விசா
ரணை செய்வதையும், அபிப்
ராயம் சொல்வதையும் பிரதான
மாக வைத்திருக்கிறாள்.

சுனந்தா தோழிகளுடன் வாசல்
திண்ணையில் பேசிக் கொண்
டிருந்தாள். பெண்கள் கூடினால்
அமைதியான சூழ்நிலை மாறத்
தான் செய்யும்.

## மல்லியின் மருத்துவ குணம்

மல்லி, நெல்லி வற்றல், சந்தனம் ஆகிய மூன்றையும் இரவு முழுவதும் தண்ணீரில் ஊற வைத்து இதன் வடிநீரை தினசரி ஒரு டம்ளர் குடித்து வந்தால் இரத்தக் கொதிப்பு குறையும்.

மல்லிக் கஷாயம் செய்து பால் சேர்த்துச் சாப்பிட இரத்த மூலம் கட்டுப்படும்.

அதிகாலையில் சிறிதளவு மல்லியை வாயில் போட்டு மென்று சாற்றைக் குடிக்க பற்கள் பலமாகும். கண் பார்வை தெளிவுறும்.

மல்லியை ஒரு டம்ளர் தண்ணீரில் ஊறவைத்து அந்தத் தண்ணீர் பாதியும் எலுமிச்சைப் பழச்சாறு பாதியும் கலந்து தினசரி சாப்பிட இடுப்பு வலி, முதுகு வலி நீங்கி விடும்.

பாதி டம்ளர் கேரட் சாறும் பாதி டம்ளர் தேனும் கலந்து தினம் சாப்பிட இரத்த சோகை நீங்கி உடல் ஆரோக்கியமாகும்.

சிறுநீர் கழிக்கச் சிரமப்படும் சிறு குழந்தைகளுக்கு வெள்ளரி விதையில் தண்ணீர் விட்டு அரைத்து அந்தக் களிம்பை, தொப்புளைச் சுற்றி பற்றுப் போட்டால் தொந்தரவுகள் குறையும்.

—டி. ஆர். ஜி.

ஏதோ ஒரு தமாஷுக்காகப் பெரிய சிரிப்பலை எழுந்தது. நிமிடத்துக்கு நிமிடம் சிரிப்பலை பெரியதாகித் தொடராக ஆனது.

பெரியம்மா வாசலுக்கு விரைந்தாள்.

"மெதுவாடி, குட்டிகளா, வீடே ரெண்டாயிரும் போல இருக்கே... அஸ்தமிச்சு ரெண்டு நாழியாச்சு... வாசல்ல நின்னு கக்காபுக்கான்னு சிரிச்சுண்டிருந்தா என்ன அர்த்தம்...? ஒங்க வீட்டில் யாரும் தேட மாட்டாளா...? பொண்களா லட்சணமா இருக்க வேண்டாமா?"

சட்டென்று அத்தனை சப்தமும் அடங்கியது... பெண்கள் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டனர்... பின்பு விடைகூடப் பெறாமல் ஒவ்வொருவராகப் பிரிந்து சென்றனர்.

"ஏன் பாட்டி, ஒன் வேலையைப் பார்த்துண்டு போகப்படாதோ... வீட்டுக்கு வந்தவாளை இப்பிடி வெரட்டிட்டியே... திருப்திதானா இப்போ?"

"வீட்டுக்கு வந்தவாளை யாராவது வெரட்டுவாளா... இது ஒரு பேச்சா? பொம்மனாட்டிக் கொழந்தைகள் அஸ்தமிச்சும் வரலேன்னா பெத்தவா தவிச்சுப் போயிடமாட்டாளா...? பகல் பூராவும் சும்மாதானே இருக்கு... ஆசை தீரப் பேசுங்கோளேன்".

"நாங்க எப்பிடிப் போனா ஒங்களுக்கென்ன...? சிவனேன்னு இருக்க வேண்டியதுதானே".

பெரியம்மாவின் கண்களில் கரகரவென்று கண்ணீர் வந்தது.

"இருக்க முடியலியேடியம்மா. மணியோடப் பொண்ணுக்கு ஒரு நல்ல எடம் வந்து கரை சேர்ற வரைக்கும் எனக்கு ரொம்ப அஞ்ஞானமாத்தான் இருக்கு..."

பெரியம்மா பேசப் பேசச் சுனந்தா தன் அறைக்குள் முணு முணுப்புடன் சென்று தாளிட்டுக் கொண்டாள்.

அன்று வீட்டிற்கு டெக் கொண்டு வந்தான் மணி. நகரில் ஹிட்டாகிக் கலக்கிய படம்... இன்னும் ஓடிக் கொண்டிருக்கும் படம்...

பெரியம்மா 'வியாசர் விருந்து' படித்துக் கொண்டிருந்தாள். பேசாமல் அவளை அப்படியே விட்டிருக்கலாம். கூப்பிடாமல் இருக்கக்கூடாது என்பதற்காகவும், அவளும் பார்க்கட்டுமே என்பதற்காகவும் மணி அவளை அழைத்தான்.

முதலில் மறுத்தவள் பின்பு தானே வந்தாள்.

பாதிப் படத்தில் எழுந்தாள்.

"மணி! நிறுத்துடா இந்தக் கண்றாவியை. இந்த மாதிரி. லட்சணத்துலதான் வர்றதாக்கும். கலிகாலம்... கட்டிப் புரண்டுண்டு யுத்தம் பண்றாப்பல... சே... அதை ரசிச்சு வேறே பாக்கறேனே... பிராரப்தம்..."

"ஏன் இந்தப் படத்துக்கென்ன?" விருட்டென்று எழுந்த சுனந்தாவை மணி அமர வைத்தான்.

"என்னவாவா. சினிமான்னா இப்படியா இருக்கணும்? தேசிகர் நந்தனார் படத்துல வருவார்... பாட்டெல்லாம் காதை உறுத்தாம குளுகுளுன்னு இருக்கும். இந்த மாதிரி டப்பாவைத் தட்டிக் காது ஜவ்வைக் கிழிக்க மாட்டா. ஹாஸ்யம்னு என்னவோ பண்றா. வாந்தி வர்றது..." அவள் அகன்றாள்.

மீதிப் படத்தைப் பார்த்தனர் நிம்மதியாய்... ஆனால் விறுவிறுப்பு குறைந்தது.

**கோ**பாலனும், மணியும் அலுவலக இடைவேளையில் பேசிக் கொண்டிருந்தனர். பேச்சு பொத்தாம் பொதுவான விஷயங்களைத் தொட்டுவிட்டு அவரவர் குடும்பத்திற்குத் திரும்பியது.

"ஆமாம் மணி. பெரியம்மாப் பாட்டி எப்படி இருக்காங்க?" என்று கோபாலன் ஆர்வமாக விசாரித்தான்.

"அவங்களுக்கென்ன... ஆனா என்ன ஒண்ணு, நாங்கதான் ஒண்ணொண்ணுக்கும் பதில் சொல்ல வேண்டியிருக்கு. எப்பப் பார்த்தாலும் டென்ஷன்..."

"ஏன் என்னாச்சு...?"

"எல்லாத்துலேயும் தலையிடறாங்க. என் மனைவிக்கும் பெண்ணுக்கும் சுத்தமாப் புடிக்கல்லே. அவங்க நாள்ல அப்பிடி, இப்போ ஒண்ணுமே சரியில்லேன்னு புலம்பல். எனக்கும் ரொம்ப சங்கடமா இருக்கு. ஒடம்பு முடியலேங்கறதக்கூடப் பாக்காம அங்கயும், இங்கயும் ஒடி ஏதாவது பண்ணிக்கிட்டு இருக்காங்க. சொன்னா அழ ஆரம்பிச்சுடறாங்க. அன்னிக்கு நீ வந்தியே. வந்ததும் வராததுமா அவங்க ஒங்கிட்டே என்னென்னமோ பேசறதப் பார்த்ததும் எனக்கே என்னவோ மாதிரி ஆயிடுச்சு... பிறந்தியார் விஷயங்கற இங்கிதமே இருக்க மாட்டேங்கறது..."

கோபாலன் ஒரு நிமிடம் பேசாமல் இருந்தான்.

"நீன்னு இல்லே... அன்னிக்கு என் மனைவி சிநேகிதி ஒருத்தி தலைவலிக்கு மாத்திரை கேட்டு வந்தா... 'மாத்திரையும், யாத்திரையும் எதுக்கு, ரெண்டு சுக்கைத் தட்டிப் போடு... அவங்க காலத்து வைத்திய... மனைவி தலையில் அடிச்சு... நல்ல வேளையா அவ ஃபீ... பேசாமப் போயிட்டா, ...னொருத்தரா இருந்தா ... கோபம் வந்திருக்கும். இது... கொண்டு போய் விடும்னு... யலே".

"மணி! அன்னிக்கு எ... அவங்க பேசினப்போ ... சங்கடமாத்தான் இருந்... ஆனா, தேவையில்லாம ... அதில் ஏகப்பட்ட ... யோசிச்சுப் பாத்தா வே... கூடப் படுது... ரொம்ப ம... வும் இருக்க முடியலே. ...யும் விட மனசு வரலே... ... மாதிரி அது பொம்ப... ஃபங்ஷன்தான். என் ... கடைசி நிமிஷத்துல ... வந்தவ, அது ஏன் ப... இதைக்கூட நான் செ... தரணுமான்னு புடிச்சுண்டு... பொண்ணுக்கு வேற ... வருத்தம். எல்லாரும் ப... மாதிரி ஒக்காற சங்கடம்... டத்தைப் பார்த்ததும் கா... ஆயிடுச்சு.

வீட்டுக்குப் பெரியவங்க... கிறது எவ்வளவு பெரிய வி... புரிஞ்சுது. டக்குன்னு ஒங்... யம்மா ஞாபகம்தான் ... அவங்க ஆசையாக் ... ஆசீர்வாதப் பணம் ஒரு ... தெம்பா இருந்தது. சே... வுமன்!"

கோபாலன் நெ... போனான்... கொஞ்ச நேர... வும் சொல்லாமல் நினைவ... ஆழ்ந்தான்.

மணிக்கும் என்ன ... தென்று புரியவில்லை. ... பினும் அவன் பெரியம்மா... இருப்பவன். வீட்டில் பி... யைச் சந்திப்பவன். என்றே... கோபாலனுக்கு என்ன தெ... இது சமாதானப்படுத்து... யுக்தி.

"நீ சொல்றது சரியா ... சில நேரத்துல நியூ... இருக்கு..." மணி சபித்தான்...

"எத்தனை வருஷமா உ... பெரியம்மா இருக்காங்க?"

"பெரியம்மாவுக்கு எட்டு... கல்யாணமாச்சு. ஒன்பது...

## கஸ்தூரி மஞ்சள்

**கி**ழங்கு மஞ்சள் நம் உடம்பில் நோய்க்கிருமிகளைக் கொல்லும் 'ஆன்டிசெப்டிக்'காகப் பயன்படுவது நம் எல்லாருக்கும் தெரியும்.

கஸ்தூரி மஞ்சள் இதைவிட ஒருபடி மேல். பயத்தம் பருப்புடன் கஸ்தூரி மஞ்சளையும் சேர்த்து அரைத்து அதை உடலில் தடவித் தினமும் குளித்தால் சுகமாக இருப்பதோடு சுறுசுறுப்பையும் தரும்.

முன்பெல்லாம் வீட்டிலுள்ள பெரியோர்கள் 'நலுங்கு மாவு' என்று ஒரு பொடியைத் தயாரித்து, பரம்பரை பரம்பரையாக அதைத்தான் குளியலுக்கு உபயோகித்து வந்தனர்.

அந்தக் குளியல் பொடியில் என்ன என்ன கலந்திருக்கும் என்பதை மேலோட்டமாகப் பார்ப்போம்.

வெட்டிவேர் - குளிர்ச்சிக்கு.

பயத்தம் பருப்பு - வழவழப்புக்கு

கிச்சிலிக் கிழங்கு - தேமல் வராமல் இருக்க

கஸ்தூரி மஞ்சள் - சரீர சம்பந்தப்பட்ட எந்த நோயையும் எதிர்க்க

சந்தனச் சக்கை - மணத்திற்கு

பூலாங்கொட்டை - கரும்புள்ளி வராமல் இருக்க

ஆவாரம்பூ - தோலில் நாற்றம் வராமல் இருக்க

ரோஜா மொட்டு - தோலில் சுருக்கம் ஏற்படாமல் இருக்க

- இவற்றை நன்றாக உரலில் போட்டு அரைத்து - வாரத்திற்கு ஒரு தடவையோ இரண்டு தடவையோ காலையில் குளிர்ந்த நீரில் குளித்து வரலாம். ஒரே வாரத்தில் தோலில் நல்ல நிறமும் - வழவழப்பும் - மணமும் ஏற்படும். வாழ்நாள் முழுவதும் தேமல், சொறி, சிரங்கு, குட்டம் ஆகிய எந்த நோயும் அணுகாது.

—த.கி.இராமசாமி

ரியப்பா' விஷ ஜுரத்துல
யிட்டார். கிராமத்துல ரொம்ப
இருந்தாங்க. அப்புறம் எங்
ா கல்யாணம். கல்யாணம்னா
மேரேஜ். ரெண்டு குடும்
றப் பெரியவங்களும் கைவிட்ட
. கிட்டத்தட்ட ஊரும்
ச்சுக்கிச்சு... அப்போ பெரி
ாதான் நான் இருக்கேன்னு
கம்மாவோட வந்தாங்க...
கப்பாவுக்கும் ஆயுள் முடிஞ்சு
ச்சு சீக்கிரமாவே... பெரி
ாவோட நிலபுலன் எல்லாம்
படிப்பு என் ரெண்டு அக்கா
யாணம்னு போயாச்சு. எங்கம்
றும் போனாங்க. அப்புறம்
க்குக் கல்யாணம். சுனந்தா
றந்தது எல்லாம் பெரியம்மா
பார்வைலதான்..."

பெரிய விஷயம்னா இது...
வளவு சொத்தையும் விட்டுட்டு
க்கு உங்கூட இருக்கணும்...?
சிச்சுப் பாத்தியா? அதுதான்
புக்கு ஏங்கற விஷயம்... தான்
செடி ஒண்ணு தனக்கு
ணாடியே வளர்ந்து பூத்துக்
ங்கறதைப் பாக்கற சந்
ஷம்... எல்லார் மேலேயும்
க்குப் பாத்தியதை உண்டுங்கற
மை...

ந்த ஒரு சந்தோஷத்தையும்
த் துணையும் இல்லாம
ந்துட்டு இப்போ கெடைச்
கற உறவை. அதோட
துக்காகவே பாடுபடும்
ம்...

ஆதரவில்லாத அநாதை
லை. தனக்கும் மனிதர்கள்
டுங்கற சந்தோஷம்... தன்
தர்களைச் சுற்றியுள்ள நட்
தன்னுடையதாக நினைக்கும்
ந்தன்மை...

பெரியவர்கள் சொல்றது நம்
ஓட்டத்தை நிறுத்தற மாதிரி
இருக்கும். ஆனா காலத்
அப்பாற்பட்ட நியாயம்
உண்டு. இன்னிக்கு
குச் சரியாப் படற எல்லாம்
ம வச்சச் சோறு போடற
ை' தலைமுறைக்கு ரொம்ப
தமாத்தான் தெரியும்.
ந்தும் அநாதைங்கற
ர்ச்சி நம்பளை முடக்கும்.

ம வாழறது ஒரு போலி
க்கை. அவன் என்ன சொல்

## மோர்

மோர் சாப்பிட்டால் தோலின் நிறம்கூட சிவப்பாய் மாறும். அதோடு விஷத்தை முறிக்கும் சக்தியும் உண்டு. வேறு ஏதாவது ஆரோக்கியத்திற்கு ஒவ்வாத விஷத் தன்மையுள்ள பொருளை உண்டாலும் மோர்சாதம் சாப்பிட்டவுடன் அவை முறிந்து போகும். தோல் சம்பந்தமான நோய்களையும் மோர் குணப்படுத்தும். உற்சாகத்தைத் தூண்டிவிடும்.

அஜீரணத்தைத் தடுக்கும் சக்தி மோருக்கு உண்டு. பித்தத்தை அறவே போக்க வல்லதும் கூட. மஞ்சட்காமாலையைக் குணப்படுத்துவது 'மோர்சாதம்' மட்டும் தான் என்பது வெளிப்படையான உண்மை.

வயிற்றுப் போக்கை நிறுத்தவும் மோரைக் குடிக்கலாம்.

—த.கி.இராமசாமி

வானோ, என்ன நினைச்சுப் பானோன்னே அடுத்தவங்க மொகத்தைப் பார்த்து வாழறோம். கேட்டா அதை நாகரிகம், இங்கிதம்னு பிரமாதமான வார்த்தைகள்ல அலங்காரம் பண்ணிடறோம்.

உள்ளே புண்ணும் சீழும் வச்சுக்கிட்டு வெளியே ஜிலு ஜிலுன்னு சட்டை போட்டுக்கிட்டா என்ன அர்த்தம்? உண்மைய மறைச்சு வேஷம் போட்டா கடைசிலே நமக்காக நாமே வேஷம் போட வேண்டியிருக்கும்.

தப்பான ஒண்ணு நடக்கும் போது நாகரிகம்னு பேசாம இருக்கறதுதான் தப்பு. இது தப்புன்னு அதையே நாகரிகமா உணர்த்தலாமே...

ஒங்க பெரியம்மா ஒரு வெகுளி. படார்னு பேசுவாங்க... எடுத்துக்கறதும் எடுத்துக்காததும் எதிராளியோட சௌகரியம். நீ சொல்லவே கூடாதுங்கறது முட்டாள்தனம். அப்படியாவது அவங்களைப் புண்படுத்தி வெளியிலேர்ந்து வர்ற சிநேகம் தேவையா?"

வயதானவர்கள் ஆடிப் பார்த்தவர்கள். ஆட்டத்தின் முடிவில் விழுந்து விடுவோமோ என்னும் பயத்தில் ஏதோ ஒன்றைக் கெட்டியாகப் பிடித்துக்கொள்ள விரும்புகிறார்கள். அந்தப் பிடிப்பு, அன்பு, ஆறுதலான வார்த்தை இதைத்தவிர என்ன இருக்க முடியும்... நமக்குப் பிடிக்கிறதோ இல்லையோ, நம் நண்பர்களை அவர்களுடைய குறைகளுடன் சகித்துக் கொள்வது போல், குறை சொல்ல முடியாத பெரியவர்களை, அதுவும் நம்முடன் கொஞ்ச காலம் மட்டுமே வாழும் பெரியவர்களை அனுசரித்துப் போவதால் நஷ்டம் ஒன்றும் இல்லை... பொறுமையுடன் அணுகினால் அதுகூடக் கஷ்டமாகத் தெரியாது...

"ஆதரவற்ற வயோதிகர்களுக்கு நீ மறுவாழ்வு கொடுப்பதைவிட, உன்னுடன் வாழும் வயோதிகர்களின் உணர்ச்சிகளைப் புரிந்து, அவர்கள் தனித்து விடப்படவில்லை என்பதை உணர்த்துவது மிகப்பெரிய விஷயம்".

"சரி வா. வேலையைப் பார்ப்போம்".

மாலை வீடு திரும்பியவனை வாசலில் வரவேற்றவள் மகள் சுனந்தா.

"டாடி! ஒண்ணு நான் இருக்கணும். இல்லே அந்த ஒல்ட் லேடி இருக்கணும். என் டெம்பர்மெண்டுக்கு இது சரிப்படாது... இன்னிக்கு என்ன ஆச்சு தெரியுமா... என் ஃப்ரெண்ட்..."

"ஷ்... யாரும் இந்த வீட்ட விட்டுப் போக முடியாது. போகவும் கூடாது. எல்லாரும் ஒத்துத்தான் போகணும்" விழிகளை உருட்டிப் பேசியதைக் கண்டு சுனந்தா மிரண்டாள்.

"டேய்... கன்னியாப் பொண்ணை ஏன்டா அஸ்தமிக்கற நேரத்துல கண்ணைக் கசக்க விடறே...? மூளை கீளை கெட்டுப் போச்சா ஒனக்கு. ஏண்டி பொண்ணே ஆபீசுலேர்ந்து ஆய்ஞ்சு ஓய்ஞ்சு வர புருஷா கிட்டேத் தட தடன்னு பேசிண்டிருக்கலாமோ? போடி உள்ளே" என்றவாறு உள்ளிருந்து, கண்ணாடியைத் தள்ளிவிட்டுக் கொண்டு பெரியம்மா வந்தாள்.

மணி பெரியம்மாவைப் பார்த்துச் சிரித்தான்.

# தமிழில் தவறுகளை அறிவோம்

டாக்டர் தி. முத்து கண்ணப்பர்

## தமிழிற் கலந்துள்ள சில பிறமொழிச் சொற்களும் அவற்றுக்குரிய தமிழ்ச் சொற்களும்

தமிழ், உலகில் வழங்கும் மூத்த மொழிகளுள்ளும் முதன்மையான மொழி; வளமான மொழி; பொருளாழம் செறிந்த மொழி; சொற்களஞ்சியமாய்த் திகழும் மொழி. ஐயாயிரம் ஆண்டுகட்கு முன்னரே இலக்கணம் படைத்துப் பெருமை பெற்றுள்ள உயர்தனிச் செம்மொழி.

பண்டைப் பழங்காலத்தில் தமிழ்மொழி வழங்கு நாடு குறிப்பிட்ட எல்லைகட்குட்பட்டே இருந்தது. அவ்வாறே பிறமொழி வழங்கும் நாடுகளும் இருந்தன. தமிழ் நாட்டு எல்லையை அடுத்து வாழ்ந்த பிறமொழியாளர்கள்கூட அருகிலேயே தங்களுக்குள் பழகும் நிலையில் இருந்தனர். காடுகளும், மலைகளும், குன்றுகளும், கரடுமுரடான நிலங்களும் மலிந்திருந்தன. போக்குவரவு வசதிகள் இன்மை, ஒழுங்கான சாலைகள் இன்மை, பிற இயற்கைச் சூழ்நிலைகள் முதலியன ஓரிடமிருந்து மற்றோர் இடம் சென்று வரப் பெருந்தடையாயிருந்தன. அதனால் பிறமொழிக் கலப்பு அவ்வளவாக இல்லாமல் இருந்தது. ஏனைய நாடுகளும் இந் நிலையிலேயே இருந்தன. வசதிகளும், தேவைகளும், காரணங்களும் பெருகப் பெருக மக்கள் தத்தம் பகுதிகளினின்றும் வருதலும் போதலும் பெருகின. அவ்வாறே, திராவிட மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த தெலுங்கு, மலையாளம், கன்னடம் முதலியவற்றிலும் பிறமொழிக் கலப்பு மெல்ல மெல்ல நுழைந்தது. அவற்றுள் தமிழ் மொழி தவிர ஏனைய மொழிகள் பிறமொழிச் சொற்களுடன் மிக நெருங்கிய உறவு பூண்டு விட்டன. தம் சொல்லா, பிறமொழிச் சொல்லா என்றுகூட இனங்காண முடியாத அளவில் சில சொற்கள் அம்மொழிகளில் இரண்டறக் கலந்து விட்டன. இன்றைய நிலையில் அவை அம் மொழிச் சொற்களே என்று உறுதிகூற முடியாமல் உள்ளன. பிறமொழிச் சொற்களைக் களைந்துவிட்டால் உருத்தெரியாமல் மறையும் நிலையிலும் சில மொழிகள் உள்ளன.

சுருங்கக் கூறின் தமிழ்மொழி ஒன்றினைத் தவிர ஏனைய மொழிகள் - இந்திய மொழிகள் மட்டுமின்றி, உலகின் ஏனைய சில மொழிகளுங் கூடத் தம்முள் கலந்துள்ள பிறமொழிச் சொற்களை நீக்கிவிட்டுத் தனித்து நிற்க, இயங்க முடியாத நிலையில் உள்ளன. இதனைக் 'காய்தல் உவத்தல் இன்றிக் காண்போர் பெரும்பாலும் உடன்படுவர்.

தமிழ் நாட்டினை, இந்தியத் துணைக்கண்டத்தின் பிறமொழியாளர் மட்டுமன்றிக் கடல் கடந்த நாட்டினர் பலரும் கைப்பற்றி ஆளும் அவல நிலை ஏற்பட்டது.

தெலுங்கு மன்னர்கள், மராட்டிய மன்னர்கள், வடமொழியாளர்கள், முகம்மதிய மன்னர்கள், பின்னர்க் கடல்கடந்து வந்த ஆங்கிலர், டச்சுக்காரர், பிரஞ்சுக்காரர், போர்ச்சுக்கீசியர் முதலியோரும் நம்மையாண்டனர். அதன் பயனாக, அவர்கள் மொழிச் சொற்கள் பல நம் தமிழ்மொழியில் கலந்தன.

'உருது மொழி (இந்தி)ச் சொற்கள் 411, போர்ச்சுக்கீசு, டச்சு, சிங்களம் ஆகிய மொழிச் சொற்கள் 40, ஆங்கிலச் சொற்கள் 486 தமிழ் மொழியில் கலந்துள்ளன' என்று கூறுகிறார் திவான் பகதூர் பவானந்தம்பிள்ளையவர்கள். இவற்றைத் தவிர தெலுங்கு முதலிய திராவிட இனச்சொற்கள் பல; சம்ஸ்கிருத மொழிச் சொற்கள் எண்ணில; சம்ஸ்கிருத மொழியாளர்கள், தமிழ்க் குறுநில மன்னர்களுக்கும், மன்னர்களுக்கும் துணைபுரியவும் தொண்டு செய்யவும் வந்து, தம் ஆதிக்கம் செலுத்தினர். அதன் விளைவாகச் சம்ஸ்கிருதச் சொற்கள் பெரிதும் தமிழில் கலந்தன. சரிபாதியாக நிலவிய காலமும் இருந்தது. அதனை மணிப்பிரவாளம் என்று புகழ்ந்து புளகாங்கிதம் அடைந்த காலமும் உண்டு.

திராவிட இனச் சொற்களில் (தெலுங்கு, மலையாளம், கன்னடம்) பல தமிழோடு கலந்து தமிழ்ச் சொற்களே என்று கூறுமளவுக்குத் தமிழ் மயமாகிவிட்டன. சில சொற்கள் பிரித்தறிய முடியாத நிலையில் தமிழ் மயமாகி மெருகேறி நிற்கின்றன.

இப்போது உலகம் சுருங்கிவிட்டது. உலகத்தில்; கடல்கடந்து நீண்டநெடுந்தொலைவில் உள்ள எந்தப் பகுதியினரும் சில நிமிடங்களில் இங்கே வந்துவிடும் அதிசய நிலையேற்பட்

உள்ளது. இருந்த இடத்தில் இருந்துகொண்டே பல்லாயிரம் மைலுக்கு அப்பால் உள்ளவர்களோடு உடனுக்குடன் உரையாடவும், காணவும் முடியும். இவையனைத்தும் மனித மூளையின் அற்புதச் சாதனைகள்!

எனவே, பன்னாட்டுறவும், பன்மொழியாளர்கள் உறவும் பெருகிவிட்டமையால் அவர் நம் மொழிச் சொற்களில் சிலபல தங்களுக்குள் கலந்துவிட்டன. இந்நிலை இயல்பானது; தடைப்படுத்த முடியாத ஒன்று என்பதை மறுத்தற்கில்லை. இந்நிலையிலும் தமிழ் அன்பர்கள் சிலர் தமிழில் கலந்துள்ள வேற்றுமொழிச் சொற்களை இனங்கண்டு அவற்றை அறவே அகற்றித் தனித்தமிழ் - தூய தமிழ்ச் சொற்களையே பயன்படுத்த வேண்டும் என வாதிட்டனர். அவ்வப்போது சிலர் தோன்றி இக்கொள்கையை நிலைநாட்டப் பெருமுயற்சி செய்கின்றனர். அதில் முழு வெற்றி காண்பது அரிது. உயர் ஆற்றலும் உயிராற்றலும் பெற்று விரைந்து வளர்ந்துவரும் மொழிக்கு இது ஓரளவு தடையாகவும் கூடும். ஆனால், அத்தகைய முயற்சியும் ஓரளவு வேண்டியதே. இல்லையானால் பிறமொழிக் கலப்புக் கட்டுக்கடங்காமல் வந்துவிடும்.

எனினும், ஒன்றை மறத்தல் கூடாது. அதாவது நமது மொழியில் உரிய, பொருத்தமான சொற்கள் இருக்கும்போது அச்சொற்களுக்குப் பதிலாக வேற்றுமொழிச் சொற்கள் நுழைய, நுழைக்க முயன்றால் அதனை நாம் ஏற்கக் கூடாது. ஏற்கப்படுமானால் நம மொழிக் களஞ்சியம் குறைந்து விடும். படிப்படியாக மறைந்து அழிந்துவிடும்.

அயல்மொழிச் சொற்களுக்கு உரிய நேரான, சரியான பொருத்தமான பொருள்தரும் சொற்கள் நம் மொழியில் இல்லையானால், அவற்றை அப்படியே எடுத்தாள்வதில் தவறில்லை என்பதே என் கருத்து. அவ் வேற்றுமொழிச் சொற்களுக்கு உரிய பொருள்தரும் தமிழ்ச் சொல்லைப் படைப்பதில் மிகுந்த அவசரமும் ஆர்வமும் காட்டத் தேவை இல்லை. உரிய சொற்கள் தமிழில் மெல்ல மெல்லத் தோன்றவும் கூடும். அதுவரையிலாவது அவ்வயல் மொழிச் சொற்களை அப்படியேயும், அல்லது தமிழ் மரபுப்படி சீர்படுத்தியேனும் கையாளலாம். அப்படியே கையாள்வதுதான் மேலானது என்பது என்-கருத்து. இக்கருத்துக்கு மாறுபாடான அன்பர்கள், கருத்து வேறுபாட்டைப் பொறுத்துக் கொள்வதுதான் கண்ணியம்.

ஆனால், வழக்கிலே நெடுங்காலமாக இருந்துவரும் நல்ல தமிழ்ச் சொற்களை விடுத்து, வேற்றுமொழிச் சொற்களைப் புகுத்துவதை எந்த உண்மைப் பற்றுள்ள தமிழரும் விரும்பமாட்டார்.

அத்தகைய வேற்றுமொழிச் சொற்கள் சிலவற்றை இப்போது காண்போம் :

1. அமுல், அமல் :

'இந்தச் சட்டம் நாளையிலிருந்து அமுலுக்கு வருகிறது' என்று கூறப்படுகிறது.

'இனிமேல் சாலைப் போக்குவரத்து விதிகள் கண்டிப்பாக அமல் செய்யப்படும்' என்கிறார்கள்.

'அமல்' - இது உருதுமொழிச் சொல். எண்ணற்ற உருது/அரபுச் சொற்கள் தமிழில் கலந்துள்ளன. மகம்மதியர் (நவாபுகள்) நம் தமிழ் நாட்டை ஆண்டபோது இவை சரளமாகக் கலந்து விட்டன.

தமிழிலும் 'அமல்' என்னும் சொல் உள்ளது. ஆனால், அதன்பொருள் 'நிறைவு' என்பதாகும்.

'அமல்' படுத்தப்படுகிறது என்று வரும் உருதுமொழிச் சொல் தமிழில் நுழைந்ததால் 'செயல்படுதல்', 'செயல்பாடு' என்னும் நல்ல தமிழ்ச் சொற்கள் மறைந்துவிட்டன என்றே சொல்லவேண்டும்.

'சட்டம் நாளை முதல் செயல்படுத்தப்படும்'

'விதிகள் கண்டிப்பாகச் செயல்படுத்தப்படும்'

'செயல்பாட்டுக்கு வரும்' 'நடைமுறைக்கு வரும்'

'செயல்படும்' 'செயலாக்கம்பெறும்' முதலியவற்றுள் ஏதேனும் உரியதைப் பயன்படுத்தலாமே.

'கறார்' : இதுவும் உருதுச் சொல்லே. வணிகத்துறையில் இச் சொல் நீண்டநெடுநாள்களாக வழங்கப்பட்டுத் தமிழ்ச் சொல்லே என்னும் நிலைக்கு வந்து விட்டது. 'விலை கேட்காதீர்கள்; சொன்னது சொன்னதுதான்; கறார் விலை' என்கிறார்கள். வாங்குவோரும், 'இவ்வளவு கறாராக இருக்கிறீர்களே' என்று கூறுவது உண்டு. கறார்' என்பதன் நேர் தமிழ்ச் சொல் 'உறுதி'.

'உறுதியானது; முடிவு செய்யப்பட்டது; ; மாற்ற முடியாதது' எனவெல்லாம் பொருள் படும்.

இப்போது, கடைக்காரர் 'இது உறுதியான விலை' என்று சொன்னால், அதைக் கேட்பவர்கள் நகையாடும் நிலை உள்ளது அன்றோ?

⟶



# என்ன காரணம்?

☐ மற்றவர்கள் ஆங்கிலத்தில் பேசுவதை ஓரளவு புரிந்து கொள்ள முடிந்தும், அவர்களது கேள்விகளுக்கு ஆங்கிலத் திலேயே பதிலளிக்க முடியவில்லையே ஏன்?

☐ ஆங்கிலத்தில் பேச முயற்சிக்கும்போது, ஒருவிதத் தயக் கமும், தடுமாற்றமும் ஏற்படுகிறதே என்ன காரணம்?

*தவறாகப் பேசி விடுவோமோ என்ற பயமும், போதிய பயிற்சி யின்மையும்தான் இத் தயக்கத்திற்கான மூல காரணங்கள்.*

முறையாகப் பயிற்சி பெற்றால், தேவையற்ற இத் தயக்கம் தானாக விலகிவிடும்.

*ஆம்... விவேகானந்தா கல்வி நிலையம் உளவியல் அடிப் படையில் அளித்துவரும் உரையாடற் பயிற்சியை* (Spoken English Practice) *நீங்கள் மேற்கொண்டால் போதும்!*

*உங்களிடமுள்ள தயக்கம் நீங்கி, சரளமாக ஆங்கிலத்தில்* பேசத் தொடங்கிவிடுவீர்கள்.

*இதுவரை மூன்று லட்சத்திற்கும் மேற்பட்டவர்கள் இப்பயிற்சி யின் மூலம் பயனடைந்துள்ளனர்.*

வீட்டிலிருந்தபடியே, ஓய்வு நேரத்தில் தபால் மூலம் பயிற்சி பெறலாம். பயிற்சிக்காக தினசரி அரைமணி நேரம் மட்டும் செலவிட்டால் போதும்!

*இன்றே ஒரு போஸ்ட்கார்டில் உங்களது முகவரியைத் தெளிவாக எழுதி அனுப்புங்கள். பயிற்சி பற்றிய விபரங்களை உடனே அனுப்புகிறோம்.*

*நீங்கள் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி*

**விவேகானந்தா கல்வி நிலையம்**

*9, நடேசன் தெரு, தி.நகர், சென்னை 600 017*

*நேர்முகப் பயிற்சி வகுப்புகளும் நடைபெறுகின்றன*
*(பெண்களுக்கு தனி வகுப்புகள்)*

சப்ளை : இந்த ஆங்கிலச் சொல் இப்போது சிறிது சிறிதாக எட்டிப் பார்க்கிறது. 'குடி தண்ணீர் சப்ளை செய்யப்படும்', 'வேண்டிய பொருள்கள் வீட்டிலேயே சப்ளை செய்யப்படும்' என்று அறிவிப்புகள் பலவிடங்களில் உள்ளன. வானொலியிலும், பத்திரிகைகளிலும் பரவலாக வழங்கவும் தலைப்பட்டுள்ளது.

'சப்ளை' என்னும் ஆங்கிலச் சொல் 'வழங்கு', 'அளி', 'கொடு' என்னும் தமிழ்ச் சொற்களுக் குரியது.

'வழங்கப்படும்', 'தரப்படும்', 'அளிக்கப் படும்', 'கொடுக்கப்படும்' என்னும் நல்ல தமிழ்ச் சொற்கள் நசுக்கப்படுகின்றனவே! இக் கொடுமை தாங்கிக் கொள்ளத் தக்கதுதானா?

'கம்மி' : இது உருதுச் சொல். இச்சொல்லும் தமிழில் பரவலாக வழங்கப்படுகிறது. பத்திரி கைகளில்தான் இது மிகுதியாகக் காணப் படுகிறது. 'கம்மி' என்பதன் தமிழ்ச் சொல் 'குறைவு' என்பதாம்.

"கரும்பு விளைவு இவ்வாண்டு மிகுதி. ஆனால், சர்க்கரையின் விலை கம்மியாவதற்குப் பதிலாகக் கூடுதலாக ஏறிக்கொண்டே போகி றது" என்று எழுதப்படுகிறது.

"உணவில் உப்பு கம்மியாக உள்ளது" என்று சொல்கிறோம். பேச்சோடு நிற்காமல் எழுத்தி லும் வந்துவிட்டதே. இந்தக் கம்மியை அகற்றி குறைவின்றி நிறைவு செய்வோம்.

### சீதபேதி

கறிவேப்பிலையை அரைத்துத் தயிரில் கலந்து வெறும் வயிற்றில் சாப்பிட்டால் சீதபேதி நின்று விடும்.

### வயிற்றுக் கோளாறு

வயிற்றுக் கோளாறு உள்ள வர்கள் வில்வ இலை, கீழாநெல்லி, குப்பைமேனி, அருகம்புல் ஆகிய வற்றை உலர்த்தி இடித்து சமஅளவு கலந்து வைத்துக் கொண்டு தினசரி காலை ஒரு கரண்டி அளவு எடுத்து ஒரு டம்ளர் வெந்நீரில் கலக்கி சாப்பிடவும்.

### ஏப்பம்

ஏப்பம் வந்தால் பாகற்காய் இலையை உரலில் நசுக்கிச் ஒரு கரண்டி சாறு எடுத்து, மஞ்சள் தூளைக் கலக்கிக் குடிக்க வேண்டும்.

### தலைவலி

நொச்சி இலையை வதக்கி அதனுடன் உப்பு தூவி பொறுக்கு மளவு சூட்டோடு நெற்றியில் பற்றுப் போட்டால் தலைபாரம், தலைவலி நீங்கும்.

### காது வலி

சின்ன வெங்காயத்தில் நான்கை எடுத்துக் கொண்டு நசுக்கினால் கிடைக்கும் சாற்றைச் சிறிது சூடாக்கி காதுகளில் இரண்டு துளி விடவும்.

### காய்ச்சல்

கறிவேப்பிலை, சீரகம், இஞ்சி சேர்த்து அரைத்து நெல்லிக்காய் அளவு உருட்டி வாயில் போட்டு வெந்நீரைக் குடித்தால் காய்ச்சல் குணமாகும்.

### கண்ணில் கட்டி

கறிவேப்பிலைக் கொழுந்தைச் சாறு பிழிந்து அந்தச் சாற்றைக் கட்டியின் மீது தடவினால் கட்டி உடைந்து விடும்.

### இடுப்பு வலி

கால் லிட்டர் நீரில் நான்கு கிராம் சுக்குப் பொடியைப் போட்டுக் கொதிக்க வைத்து, பாலும் சர்க்கரையும் சேர்த்துக் குடித்தால் இடுப்பு வலி நீங்கும்.

முருங்கைக் கீரையும் கொஞ் சம் உப்பும் சேர்த்து இடித்துச் சாறு பிழிந்து வைத்துக்கொண்டு இடுப்பில் வலி உள்ள இடத்தில் தேய்த்துக் கொள்ள குணமாகும்.

### மூட்டுவலி

ஆடாதோடை இலையைத் தண்ணீரில் கொதிக்க வைத்து ஒத்தடம் கொடுக்கவும்.

### வாய் நாற்றம்

எலுமிச்சம்பழச் சாற்றைத் தண்ணீரில் கலந்து அந்தத் தண்ணீரால் நன்றாகக் கொப் பளிக்க வேண்டும். வாய் நாற்றம் நீங்கிவிடும்.

### விக்கல்

கொஞ்சம் சூடான வெந்நீரைச் சாப்பிட்டால் விக்கல் நின்றுவிடும்.

### டி.பி. நோய்

வெங்காயத்தை தினசரி சாப் பிட்டு வந்தால் டி.பி.நோய் குறையும்.

### மூல நோய்

50 வயதுக்கு மேற்பட்டவர் களுக்கு மூலநோய்த் தொந்தரவு இருந்தால் சேனைக்கிழங்கு, கருணைக்கிழங்கு, துத்திக்கீரை, சுண்டைக்காய், சின்ன வெங்காயம் ஆகியவற்றை அடிக்கடி சாப்பிட வேண்டும்.

### வண்டுகடி

அருகம்புல்லை அரைத்து மேலுக்குத் தடவிக் குளித்தால் குணமடையும்.

### பூரான்கடி

குப்பைமேனி இலை, மஞ்சள், உப்பு மூன்றையும் சேர்த்து அரைத்துப் பூசி சிறிது நேரம் வைத்திருந்து கழுவிவிடவேண்டும்.

### அதிக இரத்தப் போக்கு

மாங்கொட்டையின் பருப்பை உலர்த்தித் தூள் செய்து தேனில் குழைத்து காலையில் சாப்பிடவும்.

ஒரு வாரம் சாப்பிட வேண்டும்.

### இரத்தம் சுத்தமாக

அடிக்கடி மாதுளம் பழத்தைச் சாப்பிட்டு வந்தால் இரத்தம் சுத்தம் ஆகும்.

### மாதவிலக்கு வயிற்று வலி

திராட்சைப் பழத்தைப் பிழிந்து, விதை, தோலை நீக்கி, தேவையான சர்க்கரை சேர்த்து காலையில் மட்டும் அரை டம்ளர் 21 நாள்கள் சாப்பிட்டு வந்தால் சூதகக் கோளாறு பூரண குண மாகும்.

— ஜிம் சேகர்

# திருமதி கோமளா வரதன்

சூரிய உதயம் - அஸ்தமனம் - ஒளியின் மாறுபாடுகள் மேடையின் பின்புற வெள்ளைத் திரையில் வண்ண ஸ்லைடுகள் மூலம் பிரதி பலிக்க யர்க்ஞ வல்கியரின் 'சூர்யார்யா' ஸ்தோத்திரத்தி லிருந்து நடன நிகழ்ச்சி தொடங்கு கிறது.



சிராவண மாதத்தின் மகிமை யைப் பற்றி மராட்டியில், பாலகவி என்பவர் எழுதிய கவிதையில் வானவில் தோரணம் போலத் தோன்றுவதும், மழையில் நனைந்த பறவைகள் தங்கள் சிறகுகளை உதறி உலர்த்துவதும், கொக்குகள் வரிசையாகப் பறப் பதும், மான்கள் புல் மேய்ந்து விளையாடுவதும், பெண்கள் மலர் பறிப்பதும், பெண்டிர் இறைவழி பாடு செய்வதும் வர்ணிக்கப் பட்டுக் கொண்டே வர - நடனத் தில் இவற்றையெல்லாம் அபி நயித்துக் காட்டியவர் திருமதி கோமளா வரதன்.

பாரதியாரின் கவிதை திக்குக ளெட்டும் சிதறி வெகுவான பாராட்டைப் பெறுகிறது. இயற் கையின் ஊழிக்கூத்தை ஆடும் முன்பு மேகம், புரண்டோடி வரும் நதி, வெள்ள நீர் ஆகிய வண்ணப் படங்கள், ஸ்லைடுகளாக திரையில் ஜொலிக்க - அந்த வண்ணப்படங் களையும் எடுத்தவர் திருமதி கோமளா வரதன்தான்.

கணவர் திரு. வரதன் இயற்றித் தயாரித்த கௌட மல்ஹார் ராக தில்லானாவோடு யஜுர் வேதத்திலிருந்து சாந்தி ஸ்லோகத்தின் வரிகளை இணைத்து ஆட நிகழ்ச்சி முடி கிறது.

மத்திய அமைச்சர் மாண்புமிகு அர்ஜுன்சிங் சிறப்பு விருந்தின ராக இந்நிகழ்ச்சியில் கலந்து கொண்டு திருமதி கோமளா வரதனைப் பாராட்டிப் பேசுகை யில், 'திருமதி கோமளா வரதனின் கலையார்வத்தையும் அது பல துறைகளில் பரிமளிப்பதையும், ஒவ்வொரு துறையிலும் அவர் தேர்ச்சி பெற்று விளங்குவதை யும் பாராட்டுகிறேன். அவருடைய சலியாத உழைப்பும், கலையே மூச்சாக ஈடுபட்டிருப்பதுமே அதற்குக் காரணம்" என்றார்.

சுற்றுலாத் துறை அமைச்சர் ரத்தாவால் தலைமை தாங்கிய இந்நிகழ்ச்சி தலைநகர் டில்லியில் நடந்தேறியது.

திருமதி கோமளா வரதனின் ஓவிய - புகைப்படக் காட்சி வரும் ஜூலை மாதம் பெங்களூர், பம்பாய் நகரங்களில் நடைபெற உள்ளது.

— நாகு

# பரிசளிப்பு விழா

லில்லி தேவசிகாமணி நினைவு இலக்கியப் பரிசுகள் திட்டத்தின் மூன்றாவது ஆண்டு பரிசளிப்பு விழா, சிறந்த சிறுகதை நூல் ஆசிரி யர்களுக்குப் பரிசளிப்பு, மூத்த எழுத்தாளர்களுக்குப் பாராட்டு. நூல் வெளியீட்டு விழா, கோவை 22.5.'94 அன்று அன்னபூர்ணா கலையரங்கில் நடைபெற்றது.

லில்லி தேவசிகாமணி நினைவு இலக்கியப் பரிசுகள் திட்டச் செய லர் செ. ஞானன் வரவேற்புரை நிகழ்த்த, நிறுவனர், தலைவர் இ.எஸ். தேவசிகாமணி தலைமை உரை ஆற்றினார்.

நிகழ்ச்சிக்கு எழுத்தாளர் வல்லிக்கண்ணன் தலைமை வகித்துச் சிறப்புரை ஆற்ற, பேரா சிரியர் மது.ச. விமலானந்தம், சோலை. இருசன் வாழ்த்துரை வழங்கினர். சிறந்த சிறுகதை நூல் ஆசிரியர்களுக்கான முதல் பரிசு ஆஸ்திரேலியாவைச் சேர்ந்த எஸ். பொன்னுத்துரைக்கும், இரண்டாம் பரிசு தோப்பில் முகமது மீரான், சூர்யகாந்தன் ஆகியோருக்கும், வெளிநாட்டுச் சிறப்புப் பரிசு செங்கை ஆழியான் (யாழ்ப் பாணம்), மா. இராமையா (மலே சியா), மூன்றாம் பரிசு துபாய் பா. அமிழ்தன், டாக்டர் அய்க்கண், அரசு மணிமேகலை, சரயு, சோலை சுந்தரப் பெருமாள், தங்கர் பச்சான், பிரதிபா ராஜ கோபாலன், லீலா ஆகியோருக்கும் வழங்கப்பட்டன.

கலைமாமணி விக்கிரமன், எழுத்தாளர் ஜெயகாந்தன் ஆகி யோர் மூத்த எழுத்தாளர்களுக் கான பாராட்டு பெற்றனர்.

மாலை மூன்று மணிக்கு மூத்த எழுத்தாளர்கள் 37 பேர் எழுதி இ.எஸ். தேவசிகாமணி தொகுத்த 'தலைவர்ழை' சிறு கதைத் தொகுப்பு நூல் வெளியீட்டு விழா நடந்தது.

கவிஞர் மீரா முதல் பிரதியை வெளியிட, பேராசிரியர் எழில் முதல்வன் பெற்றுக்கொண்டு சிறப்புரை ஆற்றினார்.

பேராசிரியர் ஆண்டாள் பாஸ் கரன் நன்றியுரைக்குப் பின் விழா இனிது முடிந்தது.





மு. வெள்ளைச்சாமி நாடார்

## வெள்ளை விழா

'வெள்ளி விழா' பற்றிக்
...ள்விப் பட்டிருக்கிறோம். ...தென்ன 'வெள்ளை விழா'? ...ன்ற நூற்றாண்டில் கும்ப...ோணத்தில் மிகச் சிறப்பாக ...ாழ்ந்து மறைந்த மு. வெள்ளைச் ...மி நாடாரின் 125ஆவது பிறந்த ...ாத்தைத்தான் 'வெள்ளை விழா' ...ன்று கொண்டாடினார்கள்.

கும்பகோணம் ஏ.ஆர்.ஆர். ...ாட்டலின் மீட்டிங் ஹாலில் ...வெள்ளைச்சாமி நாடாரின் வழித் ...ோன்றல்கள் 46 குடும்பத்தைச் ...ர்ந்த 285 பேர் ஒட்டு மொத்த ...க் குழுமியிருக்க விழா தொடங் ...யது.

...குத்து விளக்கேற்றி, இறை ...ணக்கம் பாடி, வெள்ளைச்சாமி ...டாரின் திருவுருவப் படத்திற்கு ...லை அணிவித்து முதல் தலை ...றையைச் சேர்ந்தவர்கள் முதல் ...ாவது தலைமுறையில் வாழ்ந்து ...ண்டிருப்பவர்கள் வரை அறி ...கப்படுத்தியதும் வெள்ளைச் ...மி நாடார் குடும்பத்தில் தற் ...து மூத்தவராக இருக்கும் ... ராஜமாணிக்கத்தையும், ...ைய தலைமுறையில் முதல் ... வாரிசான டாக்டர் முத்து ...ல் ராஜாவையும் கௌரவித் ...கள்.

வி. ராஜமாணிக்கம் பேரரசராகவும், டாக்டர் முத்துவேல் ராஜா இளவரசராகவும் அறிவிக்கப்பட்டனர்.

குடும்பத்தினரின் குல தெய்வம் அருள்மிகு குன்றுமலை சாஸ்தா கோயில் சென்று ஹோம நிகழ்ச்சி நடத்தினர்.

மீண்டும் மண்டபம் வந்தடைந்து 'வெள்ளைச்சாமி நாடாரின் புகழுக்கு மேலும் புகழ் சேர்த்தவர்கள் பிறந்தவர்களா? புகுந்தவர்களா?' என்ற தலைப்பில் பட்டி மன்றம் எல்லாரது மகிழ்ச்சிக்காகவும் நடைபெற - மதிய விருந்து.

விருந்துக்குப் பிறகு மழலைச் செல்வங்களுக்கும், யவனச் செல்வங்களுக்கும், இளைஞர்களுக்கும், முதுமையிலும் இளமையுடன் திகழ்பவர்களுக்கும் வயதுக்குத் தக்க விளையாட்டுப் போட்டிகள், வினாடி-வினா, ஜோடிப் பொருத்தம் போன்ற நிழ்ச்சிகள் நடத்திய பின்னர், தஞ்சை செல்வி பிரதிபாவின் நினைவாற்றல் நிகழ்ச்சி தொடங்கியது.

அதற்குப் பிறகு இசைக் கச்சேரி, கர்நாடக சங்கீதம் என்று இடைவிடாத கொண்டாட்டங்கள்.

கடந்த ஆறு மாதங்களுக்கு முன்பு திருமண நிகழ்ச்சி ஒன்றில் தம் உறவினர்களுடன் பேசிக் கொண்டிருந்த டாக்டர் வி.சி. நெடுஞ்செழியனுக்கு இப்படி ஒரு நிகழ்ச்சி நடத்தி தம் உறவினர்கள் அத்தனை பேரையும் ஒட்டு மொத்தமாகச் சந்திக்கவேண்டும் என்ற ஆவல் ஏற்பட - 45 நாள்களுக்குள் வெள்ளைச்சாமி நாடாரின் வழித் தோன்றல்கள் அனைவரையும் ஒன்று சேர்த்து வெற்றியும் பெற்று விட்டார்.

உலகின் பல பாகங்களில் இருந்து வந்த வெள்ளைச்சாமி நாடாரின் வழித் தோன்றல்கள் அனைவருக்கும் நினைவுப் பரிசுகள் வழங்கி பிரியா விடை கொடுத்த டாக்டர் வி.சி. நெடுஞ்செழியனை மனதார வாழ்த்திப் புறப்பட்ட உறவினர்களுடன், நாமும் நன்றி சொல்லி விட்டுக் கிளம்பினோம்.

## பெரம்பூர் செய்திகள்

'பெரம்பூர் செய்திகள்' மாத இதழின் வெளியீட்டு விழா சமீபத்தில் நடந்தது. நிகழ்ச்சிக்கு அனைத்திந்தியத் தமிழ் எழுத்தாளர்கள் சங்கத் தலைவர் 'கலைமாமணி' விக்கிரமன் அவர்கள் தலைமை தாங்கினார். முதற் பிரதியை மக்கள் சக்தி இயக்கத் தலைவர் டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி வெளியிட, செயின்ட் மேரிஸ் பள்ளிகளின் தாளாளர் டாக்டர் எலிசபெத் தாமஸ் பெற்றுக் கொண்டார். விழாவில் 'கலைமாமணி' ஏர்வாடி இராதாகிருஷ்ணன், 'உதயம்' ராம் ஆகியோரும் கலந்து கொண்டனர்.

முன்னதாக, 'பெரம்பூர் செய்திகள்' மாத இதழின் ஆசிரியர் காவேரி R. ஸ்ரீராமுலு அனைவரையும் வரவேற்றார்.



இந்தியாவின் தலைமைத் தேர்தல் அதிகாரி திரு. டி.என். சேஷன் அவர்கள் தமது துணைவியாருடன் பரமஹம்ஸ ஸ்ரீமத் புவனேஸ்வரி சுவாமிகளிடம் ஆசி பெறுகிறார். அருகில் ஸ்ரீமத் பரத்வாஜ் சுவாமிகள் உடனிருக்கிறார்கள்.



திருமதி கலா ராவ்

• மேடைக்கு என்றே சிலர் இருப்பார்கள். ஆட வேண்டாம். வந்து நின்றாலே களை கட்டி விடும். அந்த வகையில் நடன மேதை ருக்மணி தேவியின் பிரதம சிஷ்யை திருமதி. கலாராவ், இருபது ஆண்டு இடைவெளிக்குப் பின், சமீபத்தில் மீண்டும் தனது அபிநயத்தால் அனைவரையும் அசர வைத்தார்.

இன்னமும் நல்ல சுறுசுறுப்பு. தாள சுத்தம். எடுத்து வைத்த பாதப் பிரயோகங்களும் சுகமாக இருந்தன. தையலே - பதத்துக்கு இந்த நடனமணியின் முகம், கச்சிதமாக அமைந்திருந்தது. குற்றாலக் குறவஞ்சியில் இருந்து எடுத்தாளப்பட்ட பந்தாட்டம் பாடலை வெகு லாவகமாகக் கையாண்டது குறிப்பிடத்தக்கது.

தகவல் : பாண்டியன்

## கவிதை உறவு

கலைமாமணி ஏர்வாடி எஸ். இராதாகிருஷ்ணன் அவர்களின் 48 ஆவது பிறந்த நாள் விழா, சென்னை, கஸ்தூரி சீனிவாசன் அரங்கில் நடந்தது. 'கவிதை உறவு' இதழின் 22ஆவது ஆண்டு விழாவும், 'கவிதை உறவு' மலேசிய சிறப்பிதழ், ஏர்வாடியார் எழுதிய நூல்கள் 'நல்ல மனம் வாழ்க', 'எழுத்தாளர்களுக்கு' வெளியீட்டு விழாவும் அந்த விழாவின் சிறப்பம்சங்கள்.

விழாவிற்குப் புதுவை மத்தியப் பல்கலைக் கழகத்தின் முன்னாள் துணை வேந்தர் டாக்டர் கே. வேங்கடசுப்பிரமணியன் தலைமை வகித்தார்.

சென்னை வட்டார பாரத ஸ்டேட் வங்கி தலைமைப் பொது மேலாளர் என். கோமதி நாயகம், நாவலாசிரியை இந்துமதி, சென்னை, மலேசிய உதவி ஹைகமிஷனர் சபி அவு சமா, டாக்டர் கே. பத்ரி நாராயணன், பாலு ஜுவல்லர்ஸ் எஸ். பாலசுப்பிரமணியன், ஆர்.டி. பாஸ்கர், பாரத ஸ்டேட் வங்கி அதிகாரிகள் சங்கப் பொதுச் செயலாளர் எம். பாலகிருஷ்ணன், கே. மோகன் காந்திராமன், இயக்குநர் எஸ்.பி. முத்துராமன், டாக்டர் ஜே.ஜி. கண்ணப்பன் மற்றும் பலர் வாழ்த்திப் பேசினர்.

கலைமாமணி விக்கிரமன் வளரும் கவிஞர்களுக்கு 'விக்கிரமன் விருது' வழங்கிச் சிறப்புரை ஆற்றினார். ●

# இளைய அமுதம்

தயாரிப்பு : குண்டு மணி



சுற்றுலா

## குதுப்மினார்!

புது டில்லிக்குச் சென்றால் குதுப்மினாரைப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் சரித்திரப் பிரியர்களுக்கு ஏற்படும். நகரத்தின் தெற்குக் கோடியில் உள்ள சரித்திரப் பிரசித்தமான குதுப்மினாருக்கு சுல்தான் குதுப்-உத்-மின் அயிபக் அடிக்கல் நாட்டினார். ஆனால் அந்த நெடிதுயர்ந்த கோபுரம் 1210-1235இல் ஆண்ட சுல்தான் இல்டுமிஷினால் கட்டி முடிக்கப்பட்டது. இவர் குதுப்பின் மருமகன் ஆவார்.

72-5 மீட்டர் உயரமுள்ள குதுப்மினார் சிவப்பு சலவைக் கல்லினால் சமைக்கப்பட்டு, அல்லாவின் 99 நாமங்களும், திருக்குர்ஆன் வாசகங்களும், முகம்மது நபிகளின் போதனைகளும் பொறிக்கப்பட்டுள்ளன. கீழ்ப்பகுதிகளில் சிறிய எழுத்துகளும் உயரப் போகப்போக எழுத்துகள் பெரிதாகி, தரையிலிருந்து எளிதில் வாசிக்கும்படி அமைந்துள்ளன. குதுப்மினார் உயரக் கோபுரத்துக்கு அருகில் உள்ள இரும்புத் தூண் பிரசித்தமானது. நான்காம் நூற்றாண்டில் இந்து உலோக வடிப்பாளர்கள் உருவாக்கிய இந்த இரும்புத் தூண் கடும் மழையிலும் காற்றிலும் துருப்பிடிக்காமலிருப்பது அதிசயம்!

குதுப்மினார் அருகேயுள்ள இரு புராதனக் கட்டடங்கள் சுல்தான் அலாவுதீன் கில்ஜியின் நேர் பார்வையில் தயாரானவை. குதுப்மினாருக்கு அருகிலுள்ள அல்மினார் அரசன் மறைவினால் இன்னும் முடிவுறாமல் காட்சியளிக்கிறது!

## கற்பூரம்

கற்பூரம் என்பது வாசனை
சேர்ந்த வெண்மையான பொ
கற்பூரத்தின் மணம் எல்லா
களிலும் பரவக் கூடியது.
பொருளை எரித்தாலும்
சாம்பலாகவோ, கரியாகவோ
மாறி நிற்கும். உயர்ந்த கற்பூ
உருவில்லாமல் இருக்கு
தெரியாமல் ஜோதியாய் எ
காற்றில் கலந்து விடும். ப
கற்பூரம் ஒரு கிருமி நா
நோய்களை அகற்றும் குண
அதற்கு உண்டு. ஆயுர் (
யூனானி மருந்துகளில் கற்
ெ
லாகும்.



கற்பூர ஆரத்தி
ஜயேந்திர சரஸ்வதி சுவாமிக
"கற்பூர ஆரத்தி முடிந்
முழுமையாகக் கரைந்து
கிறதே. அதைப்போல
செய்த பாவமனைத்தும் கரை
விட வேண்டும். நாம் அறிய
பூஜையில் செய்து விடக் கூ
குற்றங் குறைகளும் கரைந்து
வேண்டும் என்ற அடிப்படை
தான் கற்பூர தீபாராத
செய்யப்படுகிறது".



★துடுப்பைப் போடுங்கள்
அதனால் ஏற்பட்ட
பிற்கு ஓய்வெடுங்கள். போ
துடுப்பினால் விளைந்த வேக
படகைக் கரை சேர்த்துவிடும்
—விவேகானந்தர்

## இளம் விமானி!

பதினான்கு வயதுச் சிறுவன் கிறிஸ்தோபர் லீ மார்ஷுக்கு அட்லாண்டிக் மகா சமுத்திரத்தைக் கடக்க ஆசை பிறந்தது. இந்த இளம் விமானி கிறிஸ்டோபர் 1927ஆம் ஆண்டில் சார்ல்ஸ் லிண்ட்பர் அட்லாண்டிச் சமுத்திரத்தைக் கடந்த சாதனையை முறியடிக்க வேண்டும் என்ற ஆவல் கிறிஸ்டோபருக்கு.

கிறிஸ்டோபர் கலிபோர்னியோவிலுள்ள ஒஸியானோவில் பள்ளி மாணவன். அவன் ஏழு நாள்கள் 2268 கிலோ மீட்டர் தூரத்துக்கு ஒற்றை என்ஜின் விமானத்தில் பறந்து சென்றது அரிய சாதனை. அவனது சக விமானி கன்னிங்காம் விமானத்தில் சூடு ஏற்பட்டும் பார்வை கஷ்டத்திறனாலும் அவனுக்கு உதவி செய்து சிறிய விமானத்தைத் தரையில் இறக்க உதவினார்.



பாரீஸை அடைந்ததும் கன்னிங்காம் அந்த இளம் விமானியின் துணிச்சலைப் பாராட்டினார்.

விமானத்தில் பறப்பதற்கு முன் அவன் அம்மா "என் பிள்ளை கிறிஸ்டோபரைக் கடைக்குச் சாமான்கள் வாங்கக்கூடத் தனியாக அனுப்ப மாட்டேன். அட்லாண்டிக் கடலைத் துணிந்து கடக்கும் அவன் முயற்சி என்னை வியப்பில் ஆழ்த்துகிறது!" என்றார்.

அட்லாண்டிக் சமுத்திரத்தைக் கடக்கும் சாதனையைக் கண்டதும் அவன், "உலகம் முழுதும் விமானத்தில் பவனி வருவதும் நிலாவுக்குச் செல்வதுமே என் அடுத்த திட்டம்!" என்று சிறுவன் கிறிஸ்டோபர் தெரியப்படுத்தினான்! இப்படிப்பட்ட துணிச்சல்மிக்க இளைஞன் அல்லவா நம் நாட்டுக்குத் தேவை.



## கொடியவனும் கருணை வள்ளலும்!

புத்தர்பெருமான் பல இடங்களுக்குச் சென்று அஹிம்சை, சகோதரத்துவம் பற்றி போதனை செய்து கொண்டிருந்தார். புத்தர்பிரான் காட்டு வழியே சென்ற போது அவரது சீடர்களில் ஒருவர் காலில் விழுந்து, "பெருமானே! இனியும் உங்கள் பயணத்தைத் தொடரக் கூடாது! கொடூரமான கொள்ளைக்காரன் அங்குலிமால் உங்களை இம்சிப்பான்!" என்று கூறினார்.

மற்றொரு சீடர், "ஆமாம் குருதேவா! அங்குலிமால் தான் வெட்டிய விரல்களைக் கழுத்தில் மாலையாக அணிந்திருப்பான்!" என்று சொன்னார்!

புத்தபெருமான் கலகலவென்று சிரித்தார். "அவன் என்னிடம் வரட்டும். நான் அவனை வரவேற்கிறேன்!" என்றார்.

கொள்ளைக்காரன் அங்குலிமால் கௌதம புத்தர் வரவைக் கேட்டு அவரைத் தேடி வந்தான்.

"நான்தான் பிரசித்தமான அங்குலிமால். என்னைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்களே!" என்று தற்பெருமையடித்துக் கொண்டான்.

"ஆமாம்! உனது பராக்கிரமமும் பலமும் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன்" என்றார் புத்தர். "சரி! அந்த மாமரத்தில் ஐந்தே இலைகளை மட்டும் பறித்து வா!" என்று கேட்டுக் கொண்டார்.

"ஐந்து இலைகள்தானா? நான் மரத்தையே சாய்த்து விடுவேன்!" என்று கொக்கரித்தான் அங்குலிமால். பிறகு ஐந்து இலைகளைப் பறித்துக் கௌதமரிடம் தந்தான்.

"ஆஹா! நீ நிசமாகவே தைரியசாலி!" என்று பாராட்டினார் கௌதம புத்தர்.

"நான் செய்ய முடியாதது என்று ஒன்றில்லை!" என்றான் அங்குலிமால்.

"அப்படியா? நீ பறித்து வந்த ஐந்து இலைகளையும் மரத்திலேயே சேர்த்து விடு, பார்க்கலாம்!"

"அது முடியாத காரியம்!" என்றான் கொள்ளைக்காரன் அங்குலிமால்.

"அப்படியானால் அந்த மரத்திலுள்ள இலைகளை மட்டும் பறிப்பது நியாயமாகுமா? உனக்கு உயிரை மறுபடியும் கொடுக்க முடியாதபோது பிற உயிர்களைப் பறிப்பது தர்மமாகுமா?" என்று கேட்டார் போதிமரத்து அண்ணல்.

"நான் இனி யாருக்கும் தீங்கு இழைக்கமாட்டேன்!" என்று புத்தர்பிரான் காலடிகளில் வீழ்ந்தான் கொள்ளைக்காரன் அங்குலிமால்.

# கால் பந்தாட்ட உலகக் கோப்பை



**1988**ஆம் வருடம் ஜுலை 4ஆம் தேதி சர்வதேச கால் பந்தாட்டக் கழகம் 1994ஆம் ஆண்டுக்கான கால்பந்தாட்டப் பந்தயங்களை நடத்தும் பொறுப்பை அமெரிக்காவுக்குத் தந்தது.

1970, 1980 ஆண்டுகளில் அமெரிக்காவில் காஸ்மாஸ் தான் பிரசித்தமான கால் பந்தாட்டக் கழகம். இந்தக் காஸ்மாசுக்காக உலகப் புகழ்பெற்ற கால்பந்தாட்டக் காரர்கள் பீலி, பிரான்ச் ஸக்கன்பர், ஜியார்ஜியோ சினக்லியா, ஜோகன் நெஸ்கின்ஸ் ஆடிப் புகழ் சேர்த்திருக்கிறார்கள். அமெரிக்கப் பெண்கள் 1991ஆம் ஆண்டு கால்பந்தாட்டத்தில் பெய்ஜிங்கில் உலக சாம்பியன் விருதைச் சூட்டிக் கொண்டுள்ளனர். 1996 அட்லாண்டா ஒலிம்பிக்கில் பெண்கள் கால்பந்தாட்டப் போட்டியும் இடம் பெறவிருக்கிறது. நாற்பது வருடங்களுக்குப் பிறகு அமெரிக்கக் கால் பந்தாட்டக் குழு உலகக் கோப்பைக்குத் தகுதி பெற்றது!

அமெரிக்காவில் ஆலன் ரோதன் பர்க் 1984 லாஸ் ஏஞ்ஜலஸில் கால்பந்தாட்டப் போட்டியைச் சிறப்பாக நிர்வகித்தார். இப்பொழுது உலகக் கோப்பை 1994 அமெரிக்காவில் ஒன்பது இடங்களில் நடைபெறவிருக்கிறது. பாஸ்டன் (மாஸேசூசெட்ஸ்), சிகாகோ (இல்லினாய்ஸ்), டல்லாஸ் (டெக்சாஸ்), டெட்ராய்ட் (மெக்சிகன்), லாஸ் ஏஞ்சலஸ் (கலிபோர்னியா), நியூயார்க் நகரம் (நியூ ஜெர்ஸி), ஆர்லாண்டோ (பிளாரிடா), சான்பிரான்சிஸ்கோ (கலிபோர்னியா), வாஷிங்டன் டிசி. ஒரு வாரத்துக்கு முன்பே பந்தயத்துக்கான டிக்கெட்டுகள் விற்றுப் போய்விட்டனவாம்!

அமெரிக்காவில் உலகக் கால் பந்தாட்டப் போட்டிகள் 1994 ஜுன் 17ஆம் தேதியிலிருந்து ஒரு மாத காலம் நடைபெறவிருக்கிறது! கால்பந்தாட்ட ரசிகர்களுக்கு ஒரே கொண்டாட்டம்தான்!

## ஒரு புதிர்!

இளவரசி பூனை துப்பறியும் நரிக்குத் தலைசிறந்த நிபுணர் என்ற பட்டத்துக்கான வெள்ளிப் பதக்கத்தை வழங்கியது. அந்தச் சமயத்தில் பொறாமை கொண்ட ஓநாய் தன் கையில் காந்தத்தை வைத்துக் கொண்டு அந்த வெள்ளிப்பதக்கத்தைக் கவர முனைந்தது. புத்திசாலி நரி ஓநாயின் செய்கைக்குக் கொஞ்சமும் கவலைப்படவில்லை. ஏன்?



விடை : காந்தம், இரும்பு, நிக்கல் போன்ற உலோகப் பொருள்களைத்தான் கவர்ந்து இழுக்கும். ஆனால் வெள்ளி, காந்தப் பகுதியினால் துரத்தப்படுவதனால்தான் புத்திசாலி நரி கவலைப்படவில்லை!

# விளையாட்டு குவிஸ்!

1. ஐந்து ஒலிம்பிக் வட்டங்களில் அடங்கிய வண்ணங்கள் யாவை?

2. போலோ ஆட்டத்தில் ஒரு குழுவுக்கு எத்தனை குதிரைகள் இடம்பெறும்?

3. சர்வதேச பாட்மிண்டன் சாம்பியன் போட்டிக்கு வழங்கப்படும் கோப்பையின் பெயர் என்ன?

4. 1936 ஒலிம்பிக் போட்டியின் உலக ஓட்ட வீரர் ஜேஸி ஓவன் சோடு கை குலுக்க மறுத்தவர் யார்?

5. கிராண்ட்ஸ்லாம் வென்ற முதல் டென்னிஸ் பெண்மணி யார்?

6. ஒஹியோ நதியில், தம் ஒலிம்பிக் தங்கப் பதக்கத்தை விட்டெறிந்த கலைஞர் யார்?

7. பிரிட்டிஷ் அரசியிடம் தமக்கு ஆட்டோகிராப் தரும்படி கேட்ட ஆஸ்திரேலியக் கிரிக்கெட் ஆட்டக்காரர் யார்?

8. சோவியத் ஒலிம்பிக் ஹெவி வெயிட் சாம்பியன் 80 உலக ரிகார்டுகளைத் தமது காலத்தில் முறியடித்திருக்கிறார்! அவர் யார்?

9. பிரஞ்சு டென்னிஸ் சாம்பியன் போட்டி நடக்கும் மைதானம் எது?

10. உலக செஸ் போட்டிகளில் இன்று இந்தியாவுக்குப் பெருமை தேடித் தரும் இளைஞர் யார்?

விடை :

1. நீலம், மஞ்சள், கறுப்பு, பச்சை, சிவப்பு.
2. நான்கு குதிரைகள்
3. தாமஸ் கோப்பை
4. ஹிட்லர்
5. மௌரீன் கோனோலி
6. முகம்மது அலி
7. டென்னிஸ் லில்லி
8. வாசிலி அலெக்சிவ்
9. பிரான்சில் ஸ்டேட் ரோலண்ட் கிராஸ்
10. உலக செஸ் போட்டியில் விசுவநாதன் ஆனந்த்

|  | செவ் கேது |  | சூரி புத-வ |
|---|---|---|---|
| சனி | கிரகநிலை |  | சுக் |
|  |  |  |  |
|  |  | குரு-வ ராகு |  |

வித்துவான் வே. லட்சுமணன்

# உங்கள் ராசி பலன்

## 15-6-1994 முதல் 16-7-1994 வரை

### ஆனி மாதம் 1ஆம் தேதி முதல் 32ஆம் தேதி வரை

**15-6-1994 அன்று கிரக பாதசாரம்**

சூரியன் – மிருகசீரிஷம் 3. சந்திரன் – மகம் 3. செவ்வாய் – பரணி 3. புதன் – திருவாதிரை 3 (வக்). குரு – சுவாதி 2 (வக்). சுக்கிரன் – பூசம் 1. சனி – சதயம் 4. ராகு – விசாகம் 3. கேது – கிருத்திகை 1.

**கிரக மாறுதல்**

23-6-1994 முதல் சனி-வக்கிர ஆரம்பம். 25-6-1994 முதல் ரிஷப-செவ்வாய். 2-7-1994 முதல் குரு- வக்கிர நிவர்த்தி. 5-7-1994 முதல் சிம்ம-சுக்கிரன். 6-7-1994 முதல் புதன்-வக்கிர நிவர்த்தி.

**மேஷம்** : (அசுவினி, பரணி, கிருத்திகை 1ஆம் பாதம் முடிய)

பெரும்பாலான கிரகங்கள் அனுகூலமான நிலையில் சஞ்சரிப்பதால் உங்கள் அபிலாஷைகள் இனிது நிறைவேறும். தடைகளும், குறுக்கீடுகளும் விலகி, வாழ்வில் முன்னேற்றம் காண வழிபிறக்கும். கேளிக்கை, உல்லாசங்களில் ஈடுபாடு கூடும். புதிய ஆடை, அணிமணிகள் , அலங்காரப் பொருள்கள், நிலபுலங்கள் ஆகியவற்றின் சேர்க்கையோ அல்லது அவற்றால் ஆதாயமோ பெறுவீர்கள். மனத்தில் துணிச்சல் அதிகரிக்கும். எதிரிகள் விலகிப் போவார்கள். அரசியல் ஈடுபாடு ஆக்கம் தரும். நிறுவன, நிர்வாகத் துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னணிக்கு உயருவார்கள். மருத்துவம், இரசாயனம், விஞ்ஞானம், ஆன்மிகம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்களுக்குச் செழிப்பான பாதை தெரியவரும். மாதர்கள் தங்கள் எண்ணத்தில் நிறைவு பெறுவார்கள்.

கடல் வாணிபம் லாபம் தரும். ஏற்றுமதி, இறக்குமதி துறைகளில் ஈடுபாடு உள்ளவர்கள் சுபிட்சம் காண்பார்கள். சினிமா, சங்கீதம் போன்ற கலைத்துறைகளில் நாட்டம் அதிகரிக்கும். எழுத்தாளர்களும், பத்திரிகையாளர்களும் தங்கள் புகழ் உயரப் பெறுவார்கள். உத்தியோகஸ்தர்களுக்கும், தொழிலாளர்களுக்கும் முன்னேற்றமான போக்கு நிலவி வரும். 25ஆம் தேதி முதல் ராசிநாதன் செவ்வாய் 2ஆமிடம் மாறுவதால் பேச்சிலும், செயலிலும் நிதானம் தேவை. பிறர் மனம் புண்படும் படியான சொற்களை உதிர்க்கலாகாது. ஜூலை மாதம் 2ஆம் தேதி முதல் குரு வக்கிர நிவர்த்தி பெறுவதால் முக்கியமான ஓரிரு எண்ணங்கள் நிறைவேறும். கணவன், மனைவியிடையே களிப்புறவு கூடும். கடுமையாக உழைக்க வேண்டி வரும் என்றாலும் அதற்கான பயனும் கிடைத்துவரும். மக்களால் அனுகூலம் உண்டாகும். ஜூன் 16,19,23,25, 26,27,29,30, ஜூலை 3,5,6,8,10,12,13,15 தேதிகள் சிறப்பானவை. கீழ்த் திசை அனுகூலமானது. மிதுன, கடக, துலா, கும்ப ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,3,6,8 எண்கள் அதிர்ஷ்டமானவை.

**ரிஷபம்** : (கிருத்திகை, 2ஆம் பாதம் முதல், ரோகிணி, மிருகசீரிஷம் 2ஆம் பாதம் முடிய)

6இல் ராகுவும், 10இல் சனியும் உலவுவதால் உங்கள் உழைப்புக்குரிய பயன் கிடைக்கவே செய்யும். சோர்வுக்கு இடம் தரலாகாது. சங்கடங்கள் என்பவை குறையும். எதிரிகள் அடங்கிப் போவார்கள். உடல் ஆரோக்கியம் சீராகவே இருந்து வரும். வேற்று மொழி, மதக்காரர்கள் உங்களுக்கு உதவ முன்வருவார்கள். பேச்சுவன்மை கூடும். குடும்பநலம் சீராக இருந்துவரும். நண்பர்கள், உற்றார், உறவினர்கள் தொடர்பால் நலம் உண்டாகும். கடல் வாணிபம் செய்வோர் முன்னேற்றம் காண்பார்கள். எழுத்தாளர்களுக்கும், பத்திரிகையாளர்களுக்கும் புகழ் கூடும். வியாபாரிகள், கணிதத் துறையாளர்கள், விஞ்ஞானிகள் ஆகியோர் தங்கள் நிலை உயரப் பெறுவார்கள். தொழிலாளர்களுக்கும், விவசாயிகளுக்கும் திறமைக்குரிய வளர்ச்சி இருந்துவரும்.

குரு6இலும், செவ்வாய் 12இலும் உலவுவதால் பொருளாதார நிலையில் விழிப்புணர்வு தேவை. வீண்செலவுகளைத் தவிர்ப்பது நல்லது. ஸ்பெகுலேஷன், கொடுக்கல்-வாங்கல் இனங்களில் எச்சரிக்கையுடன் ஈடுபடுவது அவசியமாகும். அலுவலகப் பணியாளர்கள், இஞ்சினீயர்கள், ரியல் எஸ்டேட் துறைகளைச் சேர்ந்தவர்கள் ஆகியோருக்கெல்லாம் சிறுசிறு சோதனைகள் ஏற்படும். வீண்வம்பு, வழக்குகளில் ஈடுபட வேண்டாம். உடன்பிறந்தவர்களது நலனில் அக்கறை தேவைப்படும். பெரியவர்கள், தனவந்தர்கள் ஆகியோரிடம் பணிவன்போடு பழகிவருவது நல்லது. அதன்மூலம் அவர்களின் அதிருப்திக்கு ஆளாகாமல் தப்பலாம்.

| | | | |
|---|---|---|---|
| | செவ் கேது | | சூரி புத-வ |
| சனி | கிரகநிலை | | சுக் |
| | | | |
| | | குரு-வ ராகு | |

வித்துவான் வே. லட்சுமணன்

# உங்கள் ராசி பலன்

## 15-6-1994 முதல் 16-7-1994 வரை

### ஆனி மாதம் 1ஆம் தேதி முதல் 32ஆம் தேதி வரை

**15-6-1994 அன்று கிரக பாதசாரம்**

சூரியன் – மிருகசீரிஷம் 3. சந்திரன் – மகம் 3. செவ்வாய் – பரணி 3. புதன் – திருவாதிரை 3 (வக்). குரு – சுவாதி 2 (வக்). சுக்கிரன் – பூசம் 1. சனி – சதயம் 4. ராகு – விசாகம் 3. கேது – கிருத்திகை 1.

**கிரக மாறுதல்**

23-6-1994 முதல் சனி-வக்கிர ஆரம்பம். 25-6-1994 முதல் ரிஷப-செவ்வாய். 2-7-1994 முதல் குரு- வக்கிர நிவர்த்தி. 5-7-1994 முதல் சிம்ம-சுக்கிரன். 6-7-1994 முதல் புதன்-வக்கிர நிவர்த்தி.

### மேஷம் : (அசுவினி, பரணி, கிருத்திகை 1ஆம் பாதம் முடிய)

பெரும்பாலான கிரகங்கள் அனுகூலமான நிலையில் சஞ்சரிப்பதால் உங்கள் அபிலாஷைகள் இனிது நிறைவேறும். தடைகளும், குறுக்கீடுகளும் விலகி, வாழ்வில் முன்னேற்றம் காண வழிபிறக்கும். கேளிக்கை, உல்லாசங்களில் ஈடுபாடு கூடும். புதிய ஆடை, அணிமணிகள் , அலங்காரப் பொருள்கள், நிலபுலங்கள் ஆகியவற்றின் சேர்க்கையோ அல்லது அவற்றால் ஆதாயமோ பெறுவீர்கள். மனத்தில் துணிச்சல் அதிகரிக்கும். எதிரிகள் விலகிப் போவார்கள். அரசியல் ஈடுபாடு ஆக்கம் தரும். நிறுவன, நிர்வாகத் துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னணிக்கு உயருவார்கள். மருத்துவம், இரசாயனம், விஞ்ஞானம், ஆன்மிகம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்களுக்குச் செழிப்பான பாதை தெரியவரும். மாதர்கள் தங்கள் எண்ணத்தில் நிறைவு பெறுவார்கள்.

கடல் வாணிபம் லாபம் தரும். ஏற்றுமதி, இறக்குமதி துறைகளில் ஈடுபாடு உள்ளவர்கள் சுபிட்சம் காண்பார்கள். சினிமா, சங்கீதம் போன்ற கலைத்துறைகளில் நாட்டம் அதிகரிக்கும். எழுத்தாளர்களும், பத்திரிகையாளர்களும் தங்கள் புகழ் உயரப் பெறுவார்கள். உத்தியோகஸ்தர்களுக்கும், தொழிலாளர்களுக்கும் முன்னேற்றமான போக்கு நிலவி வரும். 25ஆம் தேதி முதல் ராசிநாதன் செவ்வாய் 2ஆமிடம் மாறுவதால் பேச்சிலும், செயலிலும் நிதானம் தேவை. பிறர் மனம் புண்படும் படியான சொற்களை உதிர்க்கலாகாது. ஜூலை மாதம் 2ஆம் தேதி முதல் குரு வக்கிர நிவர்த்தி பெறுவதால் முக்கியமான ஓரிரு எண்ணங்கள் நிறைவேறும். கணவன், மனைவியிடையே களிப்புறவு கூடும். கடுமையாக உழைக்க வேண்டி வரும் என்றாலும் அதற்கான பயனும் கிடைத்துவரும். மக்களால் அனுகூலம் உண்டாகும். ஜூன் 16,19,23,25, 26,27,29,30, ஜூலை 3,5,6,8,10,12,13,15 தேதிகள் சிறப்பானவை. கீழ்த் திசை அனுகூலமானது. மிதுன, கடக, துலா, கும்ப ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,3,6,8 எண்கள் அதிர்ஷ்டமானவை.

### ரிஷபம் : (கிருத்திகை, 2ஆம் பாதம் முதல், ரோகிணி, மிருகசீரிஷம் 2ஆம் பாதம் முடிய)

6இல் ராகுவும், 10இல் சனியும் உலவுவதால் உங்கள் உழைப்புக்குரிய பயன் கிடைக்கவே செய்யும். சோர்வுக்கு இடம் தரலாகாது. சங்கடங்கள் என்பவை குறையும். எதிரிகள் அடங்கிப் போவார்கள். உடல் ஆரோக்கியம் சீராகவே இருந்து வரும். வேற்று மொழி, மதக்காரர்கள் உங்களுக்கு உதவ முன்வருவார்கள். பேச்சுவன்மை கூடும். குடும்பநலம் சீராக இருந்துவரும். நண்பர்கள், உற்றார், உறவினர்கள் தொடர்பால் நலம் உண்டாகும். கடல் வாணிபம் செய்வோர் முன்னேற்றம் காண்பார்கள். எழுத்தாளர்களுக்கும், பத்திரிகையாளர்களுக்கும் புகழ் கூடும். வியாபாரிகள், கணிதத் துறையாளர்கள், விஞ்ஞானிகள் ஆகியோர் தங்கள் நிலை உயரப் பெறுவார்கள். தொழிலாளர்களுக்கும், விவசாயிகளுக்கும் திறமைக்குரிய வளர்ச்சி இருந்துவரும்.

குரு6இலும், செவ்வாய் 12இலும் உலவுவதால் பொருளாதார நிலையில் விழிப்புணர்வு தேவை. வீண்செலவுகளைத் தவிர்ப்பது நல்லது. ஸ்பெகுலேஷன், கொடுக்கல்-வாங்கல் இனங்களில் எச்சரிக்கையுடன் ஈடுபடுவது அவசியமாகும். அலுவலகப் பணியாளர்கள், இஞ்சினீயர்கள், ரியல் எஸ்டேட் துறைகளைச் சேர்ந்தவர்கள் ஆகியோருக்கெல்லாம் சிறுசிறு சோதனைகள் ஏற்படும். வீண்வம்பு, வழக்குகளில் ஈடுபட வேண்டாம். உடன் பிறந்தவர்களது நலனில் அக்கறை தேவைப்படும். பெரியவர்கள், தனவந்தர்கள் ஆகியோரிடம் பணிவன்போடு பழகிவருவது நல்லது. அதன்மூலம் அவர்களின் அதிருப்திக்கு ஆளாகாமல் தப்பலாம்.

இறைவழிபாட்டில் கவனம் செலுத்துவதன் மூலம் மனக்கிலேசம் அகலும். பயணத்தின்போதும், இயந்திரங்களில் பணியாற்றும்போதும் பாதுகாப்புத் தேவை. ஜுன் 15,16,19,20,21,25,26,27,29,30 ஜுலை 3,5,6,8,10,12,13,15 தேதிகள் சிறப்பானவை. தென்மேற்கு, வடக்குத் திசைகள் அனுகூலமானவை. மிதுன, துலா ராசிக்காரர்கள் உதவுவார்கள். 4,5,6,8 எண்கள் நலம் தரும்.

## மிதுனம் : (மிருகசீரிஷம் 3ஆம் பாதம் முதல், திருவாதிரை, புனர்பூசம் 3ஆம் பாதம் முடிய)

குரு, செவ்வாய் ஆகியோரது பலம் கூடியிருப்பதால் உங்கள் அறிவாற்றலும், செயல் திறமையும் வெளிப்படும். எதிர்ப்புகளை வெற்றி கொள்வீர்கள். போட்டிப் பந்தயங்களிலும், வழக்கு வியாஜ்ஜியங்களிலும் அனுகூலமான போக்கு தெரியவரும். மனத்தில் மகிழ்ச்சி நிறைந்திருக்கும். பணநடமாட்டம் கூடும். ஸ்பெகுலேஷன், கொடுக்கல்-வாங்கல் இனங்கள் லாபம் தரும். பெரியவர்கள், தனவந்தர்கள் ஆகியோர் உங்கள் வளர்ச்சிக்கு உற்ற துணையாக விளங்குவார்கள். நிறுவன, நிர்வாகத் துறையினருக்கு வெற்றி வாய்ப்புகள் கூடும். மருத்துவம், இரசாயனம், விஞ்ஞானம், ஆன்மிகம் போன்ற இனங்களில் தொடர்புள்ளவர்கள் முன்னணிக்கு உயருவார்கள். மகப்பேறு அல்லது மக்களால் பாக்கியம் உண்டாகும். செந்நிறப் பொருள்கள் லாபம் தரும். அயல்நாட்டுத் தொடர்பு ஆக்கம் தரும்.

பொறியியல், சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் செழிப்புப் பெறுவார்கள். ரியல் எஸ்டேட் இனங்கள் ஆதாயம் தரும். புதிய பொருட்களின் சேர்க்கையும் நிகழும். திருமணம் ஆகாதவர்கள் அதற்கான வாய்ப்பைப் பெறுவார்கள். குடும்பத்தில் குதூகலம் கூடும். விருந்து உபசாரங்களில் பங்கேற்பீர்கள். கலைத்துறை ஆக்கம் தரும். மாதர்களது எண்ணம் நிறைவேறும். மாணவர்களும், ஆசிரியர்களும் தங்கள் நிலைமையில் வளர்ச்சி காண்பார்கள். பேச்சில் இனிமை கூடும். முக வசீகரம் அதிகரிக்கும். 25ஆம் தேதி முதல் செவ்வாய் விரயம் புகுவதால் உடல் நலனில் அக்கறை தேவைப்படும். உடன்பிறந்தவர்களால் ஓரிரு தொல்லைகள் சூழும். எக்காரியத்திலும் பதற்றத்திற்கு இடம் தராமல் பொறுமையுடன் ஈடுபடுவது நல்லது. ஜுன் 15,16,19,20,21,23,29,30 ஜுலை 3,5,6,8,10,12,15 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, தென்கிழக்கு, வடமேற்குத் திசைகள் அனுகூலமானவை. கடக, துலா, மேஷ ராசிக்காரர்கள் உதவுவார்கள். 3,5,6,7,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## கடகம் : (புனர்பூசம் 4ஆம் பாதம் முதல், பூசம், ஆயில்யம் முடிய)

செவ்வாய் பலம் கூடியிருப்பதால் மனத்தில் தைரியம் கூடும். எடுத்த காரியத்தை உங்கள் எண்ணம் போல் நிறைவேற்றச் சந்தர்ப்பம் கனிந்து வரும். அரசு விவகாரங்கள் ஆக்கம் தரும். புனிதமான பணிகளில் ஈடுபாடு உண்டாகும். நிலம், மனை, வீடு, வாகனம் போன்ற ஸ்திரச் சொத்துகளின் சேர்க்கை அல்லது அவற்றால் ஆதாயம் பெற வாய்ப்புகள் கூடிவரும். உடன்பிறந்தவர்கள் நலம் புரிவார்கள். பொறியியல் துறை ஆக்கம் தரும். சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் வெற்றி நடை போடுவார்கள். போட்டிப் பந்தயங்களிலும், வழக்கு, வியாஜ்ஜியங்களிலும் அனுகூலமான போக்கு நிலவி வரும். பக்தி மார்க்கத்திலும், ஞான மார்க்கத்திலும் ஈடுபாடு உள்ளவர்கள் மனத்தில் தெளிவு பெறுவார்கள்.

கலைத்துறையினருக்கு மாமூலான வளர்ச்சி பாதிக்கப்படாது. மாதர்களது எண்ணம் நிறைவேறும். திரவப்பொருட்கள் ஆதாயம் கொண்டு வரும். ஏற்றுமதி, இறக்குமதி இனங்களைச் சேர்ந்தவர்கள் வளர்ச்சிக்கான மார்க்கத்தைக் காண்பார்கள். குரு, சனி ஆகியோரது பலம் திருப்திகரமாக இல்லாததால் அலைச்சல் சற்று அதிகமாகும். கடுமையாக உழைக்கவும் நேரும். மறைமுக எதிரிகளால் ஓரிரு தொல்லைகள் சூழ்ந்தாலும் அவற்றைச் சமாளிப்பீர்கள். அரசியல்வாதிகள், உத்தியோகஸ்தர்கள், தொழிலாளர்கள், மருத்துவர்கள், நிர்வாகிகள் ஆகியோர் தங்கள் பொறுப்புணர்ந்து காரியமாற்றுவது நல்லது. நல்லோர் தொடர்பை வலுப்படுத்திக் கொள்வதும் நல்லவர் அல்லாதவரை விட்டு விலகுவதும் அவசியமாகும். அதன்மூலம் நலம் உண்டாகும். ஜுன் 15,16,19,20,21, 23,25,26,30 ஜுலை 3,5,6,8,10,12,15 தேதிகள் ஓரளவு சிறப்பானவை. தென்திசை நலம் தரும். மேஷ ராசிக்காரர்கள் உதவுவார்கள். 6,7,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## சிம்மம் : (மகம், பூரம், உத்திரம் 1ஆம் பாதம் முடிய)

3இல் உள்ள ராகுவும், 11இல் உள்ள சூரியனும், புதனும் உங்களுக்கு நலம் புரியக்கூடிய நிலையில் உலவுவதால் உங்கள் அறிவாற்றல் பிரகாசிக்கும். பேச்சுவன்மையும், செயல்திறமையும் கூடும். எதிர்ப்புகள் அகலும். கணிதம், விஞ்ஞானம், வியாபாரம், எழுத்து போன்ற துறைகளைச் சேர்ந்தவர்களுக்குச் செழிப்பான சூழ்நிலை உதயமாகும். அரசியல்வாதிகள் ஏற்றம் பெறுவார்கள். அரசாங்கத்தாரால் எதிர்பார்த்திருந்த ஓரிரு காரியங்கள் நிறைவேறும். தந்தைவழிச் சொத்துகள் வந்து சேரும். வெளிநாட்டுத் தொடர்பு ஆக்கம் தரும். நூதன நண்பர்கள் உதவ முன்வருவார்கள். குடும்ப நலம் சீராக இருந்துவரும். பொருளாதார நிலை உயரும். ஸ்பெகுலேஷன், கொடுக்கல்-வாங்கல் இனங்கள் அளவோடு லாபம் தரும்.

நிறுவன, நிர்வாகத் துறைகளைச் சேர்ந்தவர்கள் தங்கள் எண்ணம் நிறைவேறப் பெறுவார்கள். எலக்ட்ரானிக், கம்ப்யூட்டர் இனங்கள் லாபம் தரும். வியாபாரிகள் நூதனமான துறைகளில் பிரவேசிக்கவும், அதனால் பயன்பெறவும் சந்தர்ப்பம் கனிந்து வரும். கலைஞர்கள் அளவோடு வளர்ச்சி காண

பார்கள். பயணம் பயன்படும். ஏற்றுமதி, இறக்குமதி துறைகள் ஆக்கம் தரும். பக்தி மார்க்கத்திலும், ஞானமார்க்கத்திலும் ஈடுபாடு உள்ளவர்கள் மனத்தில் தெளிவு பெறுவார்கள். 25ஆம் தேதி முதல் செவ்வாய் 10ஆமிடம் மாறுவதால் புனிதமான பணிகளில் ஈடுபடச் சந்தர்ப்பம் கனிந்துவரும். ரியல் எஸ்டேட் இனங்கள் லாபம் தரும். உடன் பிறந்தவர்களது நிலை உயரும். அவர்களால் உங்களுக்கு அனுகூலம் உண்டாகும். குரு 3இலும், சனி 7லும் உலவுவது அனுகூலமான நிலை ஆகாது. குரு, சனி ஆகியோருக்குப் பிரீதியாக முறையே தட்சிணாமூர்த்தியையும், சனீஸ்வரரையும் வழிபட்டு வருவது நல்லது. ஜூன் 15,16,19,20,21,23,25,26,27 ஜூலை 3,5,6,8,10,12,15 தேதிகள் சிறப்பானவை. துலா, மிதுன ராசிக்காரர்கள் உதவுவார்கள். கிழக்கு, தென்மேற்குத் திசைகள் அனுகூலமானவை. 1,4,5 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## கன்னி: (உத்திரம் 2ஆம் பாதம் முதல், ஹஸ்தம், சித்திரை 2ஆம் பாதம் முடிய)

2இல் ராகுவும், 8இல் செவ்வாய், கேது ஆகியோரும் உலவினாலும்கூட ஏனைய கிரகங்கள் அனுகூலமான நிலையில் சஞ்சரிப்பதால் மோசமான நிலை என்று ஏதும் உண்டாகிவிடாது. தெய்வ பலத்தால் நீங்கள் காக்கப்படுவீர்கள். அந்தஸ்தும், புகழும், வாழ்க்கை வசதிகளும் உயர்வடையும். பண நடமாட்டம் சீராகவே இருந்துவரும். குடும்பநிலை, மக்கள் நிலை, வாழ்க்கைத்துணை நிலை யாவும் கவனிப்பின் பேரில் சீராகவே இருக்கும். எதிர்பாராத ஓரிரு அதிர்ஷ்ட வாய்ப்புகளும் கூடிவரும். கடல் வாணிபம் செய்வோர் கூடுதலான லாபம் கிடைக்கப் பெறுவார்கள். எழுத்தாளர்களுக்கும், பத்திரிகையாளர்களுக்கும் புகழ் கூடும். கற்பனைத் திறமையால் பொருளும், வந்துசேரும். திரவப் பொருட்கள் லாபம் தரும்.

சினிமா, சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னணிக்கு உயருவார்கள். மாதர்களது எண்ணம் நிறைவேறும். நிறுவன, நிர்வாகத் துறைகளைச் சேர்ந்தவர்கள் வெளிச்சம் காண்பார்கள். எலக்ட்ரானிக், கம்ப்யூட்டர் இனங்களால் அனுகூலம் உண்டாகும். எதிரிகள் அடங்கிப் போவார்கள். வியாபாரம் வளர்ச்சி பெறும். கணிதம், விஞ்ஞானம், மருத்துவம், இரசாயனம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் செழிப்பான சூழ்நிலையைக் காண்பார்கள். நூதனமான துறைகளில் ஈடுபடவும், அதன்மூலம் வருவாய் கூடப் பெறவும் சந்தர்ப்பம் கனிந்துவரும். தொழிலாளர்களது கோரிக்கை நிறைவேறும். எண்ணெய் வகையறாக்கள், தாதுப்பொருட்கள் ஆகியவற்றால் ஆதாயம் பெறமுடியும். ஜூலை 2ஆம் தேதி முதல் குரு வக்கிர நிவர்த்தி பெறுவதால் நன்மைகள் அதிகமாகும். செவ்வாய், ராகு, கேது ஆகியோருக்குப் பிரீதியான காரியங்களில் ஈடுபடுவது நல்லது. ஜூன் 15,16,19,20,21,23,25,26,27,29,30 ஜூலை 5,6,8,10,12,13,15 தேதிகள் சிறப்பானவை. வடக்கு, தென்கிழக்குத் திசைகள் அனுகூலமானவை. மிதுன, கடக ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,5,6,8 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## துலாம்: (சித்திரை 3ஆம் பாதம் முதல், சுவாதி, விசாகம் 3ஆம் பாதம் முடிய)

கோசாரப்படி கிரகநிலை திருப்திகரமாக இல்லாததால் உங்கள் அபிலாஷைகள் ஈடேறத் தடைகளும், குறுக்கீடுகளும் உண்டாகும். மனத்தில் நிம்மதி இராது. உடல் நலம் கவனிக்கப்பட வேண்டிவரும். இங்குமங்கும் அலைந்து திரிய நேரும். பொருளாதார நிலை சீராக இராது. எதிர்பாராத செலவுகள் ஏற்படும். ஸ்பெகுலேஷன், கொடுக்கல்-வாங்கல் இனங்களில் ஈடுபட வேண்டாம். குடும்பத்தில் சலசலப்புகள் உண்டாகும். மறைமுக எதிரிகளால் தொல்லைகளுக்கு ஆட்பட வேண்டிவரும். மறதிக்கு ஆட்பட்டு மற்றையோரின் அதிருப்திக்கு உள்ளாக நேரும். கூட்டுத் தொழிலில் கவனம் தேவை. நூதனமான முயற்சிகளை ஒத்திப் போடுவது நல்லது. மாமூலான காரியங்களில்கூட எச்சரிக்கையுடன் ஈடுபடுவது அவசியமாகும். நூதனமானவர்களது தொடர்பு கூடாது. பயணத்தின் போதும், இயந்திரங்களின் பக்கம் நெருங்கும் போதும் பாதுகாப்புத் தேவை.

கணவன், மனைவியிடையே களிப்புறவு குறையும். ஒருவரை விட்டு ஒருவர் பிரிந்திருக்கவும் நேரலாம். விட்டுக் கொடுத்துப் பழகிவருவது நல்லது. கலைஞர்கள் அகலக்கால் வைக்கலாகாது. கணிதம், விஞ்ஞானம், வியாபாரம், எழுத்து போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் பொறுப்புடன் காரியமாற்றினால் ஓரளவு வளர்ச்சி காணலாம். தொழிலாளர்களும், உத்தியோகஸ்தர்களும் எவ்வளவுதான் பாடுபட்டாலும் அதற்கான பயனைப் பெறுவது அரிதாகும். தொழில் அதிபர்கள் புதிய துறைகளில் முதலீடு செய்ய வேண்டாம். உங்கள் ஜனன கால ஜாதகப்படி தற்சமயம் யோக பலம் உள்ள தசை, புக்தி, அந்தரங்கள் நடைபெறுமானால் சங்கடங்கள் என்பவை குறைய வழியுண்டு. தசா புக்தியும் சரியாக இல்லாதவர்கள் இறைவழிபாட்டில் முழுமையான கவனத்தைச் செலுத்துவதன் மூலம் மன அமைதி பெறலாம். ஜூன் 15,16,19,20,21,23,25,26, 27,29,30 ஜூலை 3,8,10,12,15 தேதிகள் சுமாரானவை. வடதிசை அளவோடு நலம் தரும். மிதுன ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,5 எண்கள் ஓரளவு அதிர்ஷ்டமானவை.

## விருச்சிகம்: (விசாகம் 4ஆம் பாதம் முதல், அனுஷம், கேட்டை முடிய)

ராசிநாதன் 6இல் பலம் பெற்று உலவுவதால் உங்கள் மனத்தில் துணிவும், தன்னம்பிக்கையும் கூடும். எடுத்த காரியங்களில் திறம்பட ஈடுபட்டு அவற்றில் வெற்றி காண்பீர்கள். பொருள்வரவு கூடும். புதிய ஆடை, அணிமணிகள், அலங்காரப் பொருள்களின் சேர்க்கை நிகழும். அந்தஸ்தும், கௌரவமும் உயரப் பெறுவீர்கள். உடல்நலம் சீர்பெறும். மனத்தில் உற்சாகம் கூடும். எதிரிகள் விலகிப் போவார்கள். குடும்பத்தில் நற்காரியங்கள் நிகழும். போட்டிப் பந்தயங்களிலும், வழக்கு, வியாஜ்ஜியங்களிலும் அனுகூலமான போக்கைக் காண்பீர்கள். நிலம், மனை ஆகியவற்றால் லாபம் பெறமுடியும். பொறியியல் துறை ஆக்கம் தரும்.

கடன் உபத்திரவம் குறையும். பிற மொழி, மதக்காரர்கள் உங்களுக்கு உதவ முன்வருவார்கள். செய்துவரும் தொழில் எதுவானாலும் அதில் உங்கள் திறமைக்குரிய வளர்ச்சியைக் காண முடியும்.

நிறுவன, நிர்வாகத் துறைகளைச் சேர்ந்தவர்கள் ஏற்றம் பெறுவார்கள். வியாபாரிகளுக்கு லாபம் கூடும். மாணவர்கள் சுபிட்சம் காண்பார்கள். எழுத்தாளர்களுக்கும், பத்திரிகையாளர்களுக்கும் வரவேற்பு கூடும். எலக்ட்ரானிக், கம்ப்யூட்டர் இனங்கள் லாபம் தரும். சினிமா, சங்கீதம் போன்ற கலைத் துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னணிக்கு உயருவார்கள். ஏற்றுமதி, இறக்குமதி துறைகள் ஆக்கம் தரும். மாதர்கள் தங்கள் நிலை உயரப் பெறுவார்கள். சமுதாய நலப்பணியாளர்களுக்கு வரவேற்பு கூடும். பெற்றோரால் – மக்களால் ஓரிரு பிரச்னைகள் உண்டாகும். பக்குவத்துடன் சமாளிப்பது நல்லது. வீண் அலைச்சலைத் தவிர்ப்பது அவசியமாகும். ஜூன் 15,16,19,20,21,23,25,26,27,29,30 ஜூலை 3,5,6,10,12,15 தேதிகள் சிறப்பானவை. தெற்குத்திசை நலம் தரும். மேஷ, கடக ராசிக்காரர்கள் உதவுவார்கள். 5,6,7,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## தனுசு: (மூலம், பூராடம், உத்திராடம் 1ஆம் பாதம் முடிய)

குரு, சனி ஆகியோரது பலம் கூடியிருப்பதால் உங்கள் எண்ணங்கள் இனிதாக நிறைவேறும். எதிர்ப்புகள் அகலும். பொருளாதார நிலையில் வளர்ச்சி காணச் சந்தர்ப்பம் கூடிவரும். ஸ்பெகுலேஷன், கொடுக்கல்-வாங்கல் இனங்கள் லாபம் தரும். முக்கியமானவர்களது தொடர்பால் நலம் பெறுவீர்கள். நிலம், மனை, வீடு, வாகனம் போன்ற ஸ்திரச் சொத்துகளின் சேர்க்கையோ அல்லது அவற்றால் ஆதாயமோ பெற முடியும். அலுவலகப் பணியாளர்கள் தங்கள் நோக்கம் ஈடேறப் பெறுவார்கள். பொன்நிற, செந்நிறப் பொருள்கள் லாபம் தரும். மகப்பேறு அல்லது மக்களால் பாக்கியம் உண்டாகும். மற்றையோரால் புகழப் படுவீர்கள். உடல் ஆரோக்கியம் சீராக இருந்து வரும். உற்றார், உறவினர் சேர்க்கை மனமகிழ்ச்சியைக் கூட்டும்.

நிறுவன, நிர்வாகத் துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னணிக்கு உயருவார்கள். சினிமா, நாடகம், நாட்டியம் சங்கீதம் போன்ற கலைத்துறைகள் ஆக்கம் தரும். மாதர்களது குறிக்கோள் நிறைவேறும். கடல் வாணிபம் செய்வோர் அதிகம் லாபம் பெறுவார்கள். திரவப் பொருள்களால் வருவாய்க்கு இடமுண்டு. எழுத்தாளர்களுக்கும் பத்திரிகையாளர்களுக்கும் புகழும், பொருளும் வந்து சேரும். 25ஆம் தேதி முதல் வெற்றி வாய்ப்புகள் அதிகமாகும். ஜூலை 2ஆம் தேதி முதல் உங்கள் ராசிநாதன் வக்கிர நிவர்த்தி பெறுவதால் எதிர்பாராத அதிர்ஷ்ட வாய்ப்புகள் கூடிவரும். ஒன்றுக்கு மேற்பட்ட இனங்களில் ஈடுபட்டு வருவாய் பெறுவீர்கள். பொருள் நடமாட்டமுள்ள இனங்களில் தொடர்புடையவர்கள் செழிப்பான சூழ்நிலையைக் காண்பார்கள். திருமணம் ஆகாதவர்களுக்குத் திருமணமாகும். திருமணம் ஆனவர்கள் இல்லறத்தில் நல்லறம் காண்பார்கள். முன்னேற்றத்திற்கான நல்ல வாய்ப்புகள் கூடிவரும். ஜூன் 15,16,19,20,21,23,25,26,27,29,30 ஜூலை 3,5,6,8,12,13,15 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, மேற்குத் திசைகள் அனுகூலமானவை. கும்ப, மேஷ, துலா ராசிக்காரர்கள் உதவுவார்கள். 3,4,6,8,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## மகரம் : (உத்திராடம் 2ஆம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2ஆம் பாதம் முடிய)

6இல் உள்ள சூரியன், புதன், 10இல் உள்ள ராகு ஆகியோர் அனுகூலமான நிலையில் சஞ்சரிப்பதால் உங்கள் அறிவாற்றலும், நிர்வாகத் திறமையும் மேலோங்கும். எதிர்ப்புகளைக் கடந்து வாழ்வில் வெற்றி காண்பீர்கள். அரசாங்கத்தாரால் எதிர்பார்த்த ஓரிரு காரியங்கள் நிறைவேறும். நிறுவன, நிர்வாகத் துறைகளைச் சேர்ந்தவர்களுக்கு முன்னேற்றமான பாதை தெரியவரும். எலக்ட்ரானிக், கம்ப்யூட்டர் துறைகளைச் சேர்ந்தவர்கள் செழிப்புப் பெறுவார்கள். எழுத்தாளர்களுக்கும், பத்திரிகையாளர்களுக்கும் புகழ் கூடும். அரசியல் வாதிகள், மருத்துவர்கள், விஞ்ஞானிகள், இரசாயனத் துறைகளைச் சேர்ந்தவர்கள் ஆகியோருக்கெல்லாம் வரவேற்பு அதிகமாகும். வியாபாரிகள் தங்கள் திறமைக்குரிய வளர்ச்சியைக் காண்பார்கள்.

பிற மொழி, மதக்காரர்களது தொடர்பு ஆக்கம் தரும். பயணத்தால் ஒரு குறிக்கோள் நிறைவேறும். திரவப்பொருள்கள் ஆதாயம் கொண்டுவரும். அலைச்சலும், உழைப்பும் அதிகமாகுமென்றாலும் அதற்கான பயனும் கிடைத்துவரும். அலுவலகங்களில் பணிபுரிபவர்கள் இடமாற்றம், நிலைமாற்றம் ஆகியவற்றைப் பெறுவார்கள். மக்கள் நலம், சகோதர நலம் ஆகியவற்றில் கவனம் தேவைப்படும். கணவன், மனைவியிடையே சிறுசிறு சலசலப்புகள் ஏற்படும். விட்டுக் கொடுத்துப் பழகி வருவது நல்லது. கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் அகலக்கால் வைக்க வேண்டாம். மாதர்கள் தங்கள் எண்ணம் ஈடேற அரும்பாடுபட வேண்டி வரும். பெற்றோரால் ஓரிரு தொல்லைகளுக்கு ஆட்பட நேரலாம். தெய்வ வழிபாட்டின் மூலமும், பெரியவர்களின் தொடர்பு மூலமும் சங்கடங்களைக் குறைத்துக் கொள்ளவும், மனஅமைதி பெறவும் முடியும். தீயோர் தொடர்பு கூடாது. ஜூன் 19,20,21,23,25,26,27,29,30 ஜூலை 3,5,6,8,10,15 தேதிகள் சிறப்பானவை. வடக்கும், தென்மேற்கும் அனுகூலமான திசைகளாகும். கும்ப, மேஷ, மீன ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,4,5 எண்கள் அதிர்ஷ்டமானவை.

**கும்பம் :** (அவிட்டம் 3ஆம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3ஆம் பாதம் முடிய)

குரு, செவ்வாய் ஆகிய முக்கியமான கிரகங்கள் அனுகூலமான நிலையில் உலவுவதால் உங்கள் அபிலாஷைகள் இனிது நிறைவேறும். தடைக்கல்லைப் படிக்கல்லாக்கிக் கொண்டு வாழ்வில் வெற்றி நடைபோடுவீர்கள். எதிரிகளால் விளைந்து வந்த தொல்லைகள் அகலும். வழக்கு, வியாஜ்ஜியங்களிலும், போட்டிப் பந்தயங்களிலும் வெற்றி காணச் சந்தர்ப்பம் சாதகமாக அமையும். நல்லவர்கள் உங்கள் பக்கபலமாக விளங்குவார்கள். எழுத்தாளர்களுக்கும், பத்திரிகையாளர்களுக்கும் செல்வாக்குக் கூடும். இயந்திரப் பணிகள் லாபம் தரும். நிலம், மனை, வீடு, வாகனம் போன்ற இனங்கள் அளவோடு ஆதாயம் கொண்டுவரும். பக்தி மார்க்கத்திலும், ஞானமார்க்கத்திலும் ஈடுபாடு கூடும். புனித யாத்திரை மேற்கொள்ளவும், சாதுக்கள் மகான்கள் ஆகியோரது தரிசனம் கிடைக்கப் பெறவும் சந்தர்ப்பம் கனிந்து வரும்.

கணவன், மனைவியிடையே சிறுசிறு சல சலப்புகள் ஏற்பட்டாலும் அவை விலகவும் வழி பிறக்கும். வியாபாரிகள், உத்தியோகஸ்தர்கள், மருத்துவர்கள், விஞ்ஞானிகள், கணிதத் துறையாளர்கள், ஆசிரியர்கள் ஆகியோருக்கெல்லாம் செழிப்பான பாதை தெரியவரும். அயல்நாட்டுத் தொடர்பால் அனுகூலம் உண்டாகும். பொருளாதார நிலை திருப்தி தரும். ஸ்பெகுலேஷன், கொடுக்கல்-வாங்கல் இனங்கள் லாபம் தரும். எதிர்பாராத திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புக்கும் இடமுண்டு. மக்களால் பெற்றோருக்கும், பெற்றோரால் மக்களுக்கும் அனுகூலம் உண்டாகும். மகப்பேறு பாக்கியமும் உண்டாகும். திருமணம் ஆகாதவர்களுக்குத் திருமணமாகும். கலைத்துறைகளைச் சேர்ந்தவர்களும், மாதர்களும், சமுதாய நலப் பணியாளர்களும் தங்கள் பொறுப்புணர்ந்து கடமையாற்றினால் ஓரளவு நலம் பெற முடியும். கடுமையாக உழைத்துப் பாடுபடுபவர்கள் இரட்டிப்பு பயன் பெறுவார்கள். வீண் அலைச்சலைக் குறைத்துக் கொள்வது நல்லது. ஜூன் 15,19,20,21,23,25,26, 27,29,30 ஜூலை 3,5,6,8 10,12 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, தெற்குத் திசைகள் அனுகூலமானவை. மேஷ, மிதுன, துலா ராசிக்காரர்கள் உதவுவார்கள். 3,5,7,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

**மீனம் :** (பூரட்டாதி 4 ஆம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)

குரு, சனி, செவ்வாய் ஆகிய முக்கியமான கிரகங்கள் அனுகூலமான நிலையில் உலவுவதால் நீங்கள் எக்காரியத்திலும் விழிப்புடன் ஈடுபடுவது நல்லது. சிறிதும் அலட்சியப்போக்கு கூடாது. உடல் நலனில் கவனம் செலுத்துவது அவசியம் ஆகும். தீயோர் தொடர்பை அகற்றி, நல்லவர்களின் நட்புறவை நாடிப்பெறுவது நல்லது. அதன்மூலம் சங்கடங்களுக்கு ஆளாகாமல் தப்பலாம். நேரான வழியில் சிந்தனையைச் செலுத்துவது அவசியமாகும். பொருள்வரவு குறைந்து செலவுகள் அதிகமாகும். வீண் விரயத்தைக் குறைப்பது நல்லது. தொழிலாளர்கள், உத்தியோகஸ்தர்கள், ஆசிரியர்கள், பேராசிரியர்கள், மருத்துவர்கள், இரசாயனத் துறைகளைச் சேர்ந்தவர்கள், விஞ்ஞானிகள் ஆகிய அனைவருக்குமே சிறுசிறு பிரச்னைகள் அவ்வப்போது உண்டாகும். பேச்சில் சூடான வார்த்தைகளை உதிர்க்காமல் இருப்பது நல்லது. அதன்மூலம் குடும்பத்திலும், வெளிவட்டாரத்திலும் உங்கள் செல்வாக்கைக் காத்துக் கொள்ள முடியும்.

நூதன நட்பு வேண்டாம். உணவு விஷயத்தில் கட்டுப்பாடு தேவை. 25ஆம் தேதி முதல் செவ்வாய் 3ஆமிடம் மாறுவதால் சங்கடங்கள் என்பவை குறைய ஆரம்பிக்கும். நற்காரியங்களில் ஈடுபடச் சந்தர்ப்பம் கூடிவரும். எதிரிகள் விலகுவார்கள். போட்டிப் பந்தயங்களில் வெற்றி பெறமுடியும். கலைத்துறை ஊக்கம் தரும். வியாபாரம் விருத்தி அடையும். எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்கள், கற்பனையாளர்கள், கவிஞர்கள் ஆகியோருக்கெல்லாம் செழிப்பான பாதை புலப்படும். நல்ல தகவல் வந்து சேரும். பொறியியல், சட்டம், காவல், ராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் வெளிச்சமான பாதையைக் காண்பார்கள். பெண்களுக்கு ஜூலை மாதம் 4ஆம் தேதி வரையிலும் அனுகூலமான போக்கு நிலவிவரும். அதன்பிறகு சிறுசிறு குறைபாடுகள் ஏற்படும். தெய்வ வழிபாட்டில் தொடர்ந்து ஈடுபடுவது நல்லது. ஜூன் 15,16,21,23,25, 26,27,29,30 ஜூலை 3,5,6,8,10,12,13,15 தேதிகள் சிறப்பானவை. வடக்கும், தென்கிழக்கும் அனுகூலமான திசைகள் ஆகும். 5,6 எண்கள் நலம் தரும். மிதுன, கடக ராசிக்காரர்கள் உதவுவார்கள்.

# கங்காபுரிக் காவலன்

## 12. திறந்த விழிகளும் கலங்கிய விழிகளும்

இராசேந்திர சோழ தேவரின் இலட்சிய மான பெரிய கோயிலில் அமைக்கப்பட விருந்த சிற்பப் பணிகள் மிகவும் வேகமாக நடைபெற்றுக் கொண்டிருந்தன. ஒவ்வொரு சிற்பத்தையும், வீரமாதேவி ஆவலுடன் பார்த்தாள். ஓர் அதிசயத்தைப் பார்ப்பது போல் பரந்த விழிகளுடன் நோக்கினாள். ஒரு குழந்தையைப் போல் குதூகலித்துக் கரம் கொட்டிக் குதித்தாள்.

"தங்கள் கரங்களுக்குத்தான் எத்தனை திறமை?" என்று சிற்பியின் கரத்தை எடுத்துத் தன் விழித்தாமரையில் ஒத்திக் கொண்டாள். சிற்பியின் மெய் சிலிர்த்தது.

சிற்பத்தின் விழிகளைத் திறப்பதற்குத் தேர்ந்தெடுத்த நாளன்று மாணிக்க சேகரன், பொழுது புலருமுன்பு நீராடித் திருநீறணிந்து, தன் குடிலிலுள்ள பிள்ளை யாரைக் கும்பிட்டுத் தோத்திரம் சொல்லி, சிற்றுளியை வணங்கி, வெளியே வந்து சகுனம் பார்த்துச் சிற்பக் கூடத்துக்குப் புறப்பட்டான். கஞ்சிக் கலயத்துடன் விரை வில் வருவதாகக் கூறி, குமுதவல்லியும் மலர்ந்த முகத்துடன் வழியனுப்பினாள். முதல் நாளிலிருந்து சிற்பி ஏதும் உணவு அருந்தவில்லை. சிற்பத்தின் விழிகளைத் திறப்பதைப் புனிதமான நோன்பாகக் கொண்டான். இறைவன் திருவடிகளை நினைத்துக் கொண்டே இரவைக் கழித் தான்.

அவன் படைத்த ஞான சரஸ்வதியின் சிலை மிகச் சிறப்பாக அமைந்து விட்டது. சிற்பத்தின் விழிகளைத் திறந்தவுடன்தான் கலைதேவியின் பூரணப் பொலிவு புலப் படும். விழி திறக்கும்போது எள்ளளவு தவறு ஏற்பட்டாலும் முழுச் சிற்பமும் வீண்தான். தவறு நிகழாது என்ற உறுதி அவனுள்ளத்தில் இருக்கிறது என்றா லும், அச்சமுமில்லாமற் போகவில்லை. தெய்வம் துணை நிற்க வேண்டும் என்ற பிரார்த்தனையுடன் சிற்பம் உருவாகும் கூடத்திற்குச் சென்றான்.

ஞான சரஸ்வதி முழுப் பொலிவுடன் விளங்கினாள். மாணிக்க சேகரனின் விழி களில் ஆனந்தக் கண்ணீர் பொங்கி நின்றது.

ஞானசரஸ்வதியின் சிற்பத்தின் எதிரே வீரமாதேவி, மெய்மறந்து நின்றாள்.

"கலையின் அதிதேவதையே! உங்களைப் பணிகிறேன். வெள்ளைக் கலை உடுத்தி, வெண் தாமரைப் பூவில் வீற்றிருக்கும் தேவியே! உன் திருவடிகளில் வணங்கு கிறேன். நடனம், இசை ஆகிய அறுபத்து நான்கு கலைகளின் நாயகியே! உன் பாதங்களில் சரணடைகிறேன்.

சகல கலைகளையும் படைத்தவளே! உன்னைப் பணிகிறேன். நிருத்தியத்தின் மூலம் தங்களை அஞ்சலி செய்யும் ஆற்றல் என்றும் என்னிடமிருந்து அகலாமலிருக்க அருள வேண்டும். எனக்குத் தாங்கள் அளித்த நடனக் கலையைக் கண்டுதானே அரசர் எனக்கு இவ்வளவு பெரிய வாய்ப்பு அளித்தார்!" என்று வீரமாதேவி பிரார்த்தித் தாள்.

மாணிக்க சேகரன் வீரமாதேவியின் இதழ்கள் துடிப்பதை நோக்கியவாறிருந் தான்.

"தேவி! தங்களுடைய ஊக்கமும் ஆதர வும் இல்லாவிட்டால் கலைவாணி இங்கு எழுந்தருளுவது ஏது?" என்றான் மாணிக்க சேகரன்.

"எல்லாம் சக்கரவர்த்தியின் கருணை. அவருடைய கலைக் கனவுதான் சிற்ப அற்புதங்கள் இங்கு நிகழக் காரணம். அவர் இப்போது இங்கிருந்தால் உங்க

விக்கிரமன்

ளுக்குப் பல்லாயிரம் பொன் பரிசாக அளித்திருப்பார். என்னிடம் பொன் இல்லையே, சொல்லால் உங்களைப் புகழ்வதற்கு வார்த்தைகள்கூட வரவில்லையே" என்று உணர்ச்சி மிகுதியுடன் பேசினாள் வீரமாதேவி.

"சக்கரவர்த்திகள் திக் விஜயம் முடிந்து எப்போது திரும்பி வருகிறார்கள், தேவி? அதற்குள் கோயிற் பணிகள் முடிந்து விடவேண்டாமா?" என்று மாணிக்க சேகரன் கேட்டான்.

"ஆமாம், ஆமாம். எனக்கும் அதே கவலைதான், இரவில் உறக்கம் வருவதில்லை. விழிகளை வலுக்கட்டாயமாக மூடினால் கலீர், கிணிங், கிணிங் என்ற ஓசைதான் கேட்கிறது. முன்னேற்றம் போதாது என்று தோன்றுகிறது. முன் மண்டபம் முடிந்து, மளமளவென்று விமானம் வளர்கிறது. தஞ்சைப் பெரிய கோயிலைப் படைத்த பரம்பரையில் வந்தவரின் கை வண்ணத்தைப் பார்த்தீர்களா? ஈழ நாட்டிலிருந்தும், மதுரையினின்றும் நான் எதிர்பார்த்ததைவிட அதிகமானவர்கள் உற்சாகத்துடன் இங்கு பணிபுரிய வந்திருக்கிறார்கள். மதுரையினின்று வந்தவர்கள் சில நாள்கள் வரை அரை மனதுடன் கோயில் பணியிலீடுபட்டார்கள். இப்போது முழு உற்சாகத்துடன் வேலை செய்கிறார்கள். நம் சக்கரவர்த்திகளைக் காணவேண்டும் என்ற ஆவலுடன் பலர், 'சக்கரவர்த்தி எப்போது திரும்பி வருவார்கள்?' என்று ஒருவரையொருவர் கேட்டுக் கொள்கிறார்கள். "நாம் பணியை விரைவில் முடித்தவுடன் அவர்கள் வந்து



விடுவார்கள்" என்று அவர்களே பேசிக் கொள்கிறார்கள்" என்று வீரமாதேவி பணிபுரிபவர்களின் கருத்தை எடுத்துக் கூறினாள். அவ்வாறு கூறும்போது முழுத் திருப்தி அவள் உள்ளத்தில் நிரம்பியிருந்தது அவள் விழிகளில் புலப்பட்டது.

ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு சிலையின் அருள் விழிகளைத் திறப்பது எனத் திட்டமிட்டிருந்தான் மாணிக்க சேகரன். வரிசையாக நான்கு நாள்களும் நல்ல நாள்களாக அமைந்தன.

பௌர்ணமி அன்று, கருவூர்ச் சித்தர் கோயில் பணிகளில் ஏற்பட்டுள்ள முன்னேற்றத்தைக் காண வருவதாகச் செய்தி கிடைத்தவுடன், வீரமாதேவி பரபரப்படைந்தாள். கோயில் பணிகள் நடைபெறும் பகுதியை ஒருமுறை சுற்றிப் பார்க்க விரும்பினாள்.

ஓர் ஆண்டிற்கு முன்பு அடர்ந்த காட்டுப் பகுதியாக இருந்த அந்த இடம் இப்போது முற்றிலும் மாறியிருந்தது. பரந்த



வெளியாக மாறி இப்போது கண்ணுக்கு எட்டிய தொலைவு வரை தொழிலாளர்கள் சுறுசுறுப்பாகப் பணிபுரிவது தெரிந்தது.

மாட்டு வண்டிகளும், குதிரை பூட்டிய வண்டிகளும் அங்கும் இங்கும் சென்று கொண்டிருந்தன. ஏராளமான மூங்கில்கள் காததொலைவிலிருந்து கொண்டு வரப் பட்டன. ஆற்று மணலும், செம்மண்ணும், கருங்கற்களும் ஏற்றிய பார வண்டிகள் அசைந்தாடி வந்தன. மாளிகை, இல் லங்கள், விடுதிகள், வீடுகள் என ஆங் காங்கே கட்டப்பட்டு வந்தன. வீடுகட்டும் கலைஞர்கள் சோம்பலின்றி இயங்கினர். அவர்களுக்கு உதவியாக இளம் பெண்களி லிருந்து முதிர்ந்த வயதுடையவர்கள் வரை ஓய்வு இன்றி அல்லும் பகலும் உழைத்தனர்.

புதிய நகரமும், மாளிகையும், கோயிலும் உருவாவதைப் பார்க்கத் தொலைவிலுள்ள பட்டி தொட்டிகளிலிருந்து மக்கள் வந்த வண்ணமிருந்தனர். வேடிக்கை பார்த்துச் செல்லாமல் தங்களால் இயன்ற பணி களைச் செய்து கூலியாக தானியங்களை யும், காசுகளையும் பெற்றுச் சென்றனர். பழையாறை நாணய சாலையிலிருந்து புதிதாக உருவான செப்பு நாணயங்கள் அவர்களுக்குக் கூலியாகக் கொடுக்கப் பட்டன. அந்தக் காசுகளைப் பார்த்து அவர்கள் வியப்படைந்தனர்.



எதிர்பார்த்தது போலவே கருவூரார் வந்துவிட்டார். சிற்பங்களைக் காண அவர் விரும்பினார். வீரமாதேவி உற்சாகத்துடன் கருவூராருடன் சிற்பக் கூடங்களுக்குச் சென்றாலும் அவளுள்ளத்தில் அச்சமும் நிறைந்திருந்தது. சித்தர் என்ன சொல்லப் போகிறாரோ என்ற கவலை அவள் விழிகளில் நிறைந்திருந்தது.

மாணிக்க சேகரன் ஒவ்வொரு சிற்பமாக விளக்கி வந்தான்.

ஆலமர் செல்வர், காலாந்தகர், காமாந்தக மூர்த்தி, தக்ஷிணாமூர்த்தி என்று சிவபெருமானின் பலவிதத் தோற்றங்கள் கல்லில் அழகுறக் காட்சியளித்தன.

ஆடவல்லாரின் சிற்பம் உருவாகிக் கொண்டிருந்தது.

கருவூரார் மாணிக்க சேகரனைத் தன் அருகே அழைத்து, சில குறிப்புகளைத் தெரிவித்தார்.

"ஆடவல்லாரின் சிற்பத்தை மிக நேர்த்தியாகச் செய்ய வேண்டும். சோழர் குலத்தைக் காக்கும் கடவுள் நடராசர். இராசேந்திரன் புதிய நகரத்தை நிர்மாணிக்காமல் தில்லையம்பதியை மேலும் விரிவு படுத்தியிருக்கலாம். ஆனால் இராசேந்திரனுக்கு எல்லாம் புதுமையாக, மகத்தானதாக இருக்க வேண்டும் என்ற ஆர்வம். அந்த ஆர்வத்தைத் தூண்டியவளே இந்த வீரமாதேவிதான்" என்று கூறித் திரும்பிப் பார்த்தார்.

வீரமாதேவி, நாணமும் அச்சமும் கலந்து கரங்கூப்பி, நிலத்தை நோக்கித் தலை குனிந்து நின்றாள்.

"என்ன, தேவி! நான் சொல்வது சரிதானே? காட்டு வெளியைக் கண்ணுக்கெட்டிய தொலைவு வரை பொட்டல் வெளியாக மாற்றி அங்கே கயிலாயத்தையே படைத்துவிடப்போகும் இராசேந்திரனின் எண்ணத்தை ஊக்குவிப்பவள் நீதானே?" என்று வெண் தாடியை உருவியவாறு கேட்டார் கருவூரார்.

மறுமொழி கூற வீரமாதேவிக்கு நா எழவில்லை. உணர்ச்சியால் விழிகளில் நீர் திரையிட்டது. இமைகளை மெல்ல மூடித் திறந்தாள்.

'சித்தர் பாராட்டுதலுக்கு நான் தகுதியானவள்தானா?' என்ற ஐயம் அவளுள்ளே எழுந்தது. மூங்கில் துறைக் கிராமத்திலிருந்தபோது இப்படியொரு மகத்தான இலட்சியம் மனத்தில் விதைக்கப்பட்டதாகக் கூடத் தெரியவில்லையே! பிறகு எப்படிப் பிறந்தது? எல்லாம் இறைவன் அருள்" என்று நினைத்தாள்.

"சிறிது நேரமாக நீ ஒன்றுமே பேசாமல் இருக்கிறாய். மனத்தில் ஏதோ ஒரு கவலை – அப்படித்தானே பெண்ணே?" என்று கேட்டார் கருவூரார்.

"வடக்கே வெகு தொலைவில் இருக்கும் உன் நேசன் இப்போது என்ன செய்துகொண்டிருக்கிறாரோ என்ற கவலை. எந்த விதத் துன்பமும் தொல்லையும் ஏற்படாமல் திரும்பி வர வேண்டுமே என்ற கவலை, கங்கை நீரைக் கொண்டு வந்து, விரைவில் குடமுழுக்குச் செய்ய வேண்டுமே – கங்கை நீரை இவ்வளவு தொலைவு அவர் எப்படிக் கொண்டு வரப்போகிறாரோ என்ற கவலை.

இராசேந்திரன் வருவதற்கு முன்பு கோயில் விமானம் பூர்த்தியாகிவிட வேண்டும். சுற்றுக் கோட்டங்களில் பிரதிஷ்டை செய்யப்பட வேண்டிய தேவதைகளின் சிலைகள் இடர்ப்பாடின்றி முடிவடைந்திருக்க வேண்டும். ஆவுடையாரும் மாபெரும் லிங்கமும் செய்யப்பட்டு பாலாலயத்தில் ஒரு மண்டலப் பூசையில் இருக்க வேண்டும். இப்படிப் பல கவலைகள். இன்னொரு கவலையையும் உன் உள்ளத்தில் ஏற்றிக் கொள் – " என்று கூறினார். வெண்தாடியையும் தாண்டி அவர் நகைப்பது தெரிந்தது.

"வீரமாதேவி! கோயில் கட்டும் பணி என்பது இலேசன்று. இராசேந்திரனுக்குத் தன் தந்தை எழுப்பிய இராசராசேச்வரம் திருக்கோயில் முன்மாதிரியாக இருந்திருக்கிறது. ஆனால் இராசராசன் பெரிய கோயிலைக் கட்டும்போது கோயில் அமைப்பு முறை, விதிகள், அளவு எல்லாம் அவனுடைய சொந்த ஆற்றலால் எழுந்தன. திறமையான சிற்பியும் அவருக்கு உறுதுணையாக அமைந்தார்" என்று கூறி மாணிக்க சேகரனை நோக்கி, "இள

வயதிலேயே கலைமகளின் பூரண அருள் பெற்றிருக்கும் நீ, உன் முழு கவனத்தையும் செலுத்தி, இராசேந்திரனின் பெரிய கோயிலை உலகப் புகழ் அடையுமாறு அமைக்க வேண்டும். உன் மனத்தில் சஞ்சலம் ஏற்படுவதற்கான சூழ்நிலைகள் ஏற்படலாம். பிரம்ம கர்மத்தைக் கடைப் பிடித்து நீ, உன் கை வண்ணத்தால் தெய் வங்களை இங்கே வந்தமரச் செய்ய வேண்டும்" என்றார்.

மாணிக்க சேகரன் மிகப் பயபக்தியுடன் அவர் கூறுவதைக் கேட்டுத் தலை யசைத்தான். மீண்டும் வீரமாதேவியை நோக்கி, "எல்லாம் நல்ல விதமாக அமை யும். அங்கே சோழர்கள் எதிர்ப்ப வர்கள் இன்றியே கங்கை நீரைக் கொண்டு வரப் போகிறான் இராசேந்திரன்" என்று, புதிய நம்பிக்கையை அளித்தார் கருவூரார்.

"வீரமாதேவி! அரிந்தவன் தேவியின் உடல்நிலை கவலைக்கு இடமாயிருக்கிறது என்று லிகிதம் அனுப்பினாயே. அதைக் கேட்டுப் பதற்றத்துடன் இராசேந்திரன் திரும்பி வந்து விட்டால்? கங்கை நீரைக் கொண்டு வருவது தடைப்பட்டுவிடுமே! நீ இப்படியொரு செய்தி அனுப்பியிருக்க லாமா? பட்டத்தரசியும் அங்கே சென்றிருக் கிறாள் என்பது உனக்குத் தெரியாதா? இந்தச் செய்தி கேட்டவுடன் கங்கை நீரா டாமல், கங்கை நீரைக் கொண்டு வரத் திட்ட மிடாமல் திரும்பி வந்து விட்டால் உன் இலட் சியம் என்னாவது? ஒன்று உறுதியாகச் சொல்கிறேன். பொதிகை மலைக்குச் செல்லும் திட்டத்தை நான் மாற்றிக் கொள்ள மாட்டேன். இன்னும் மூன்று பௌர்ணமிகள் உள்ளன– " என்று கூறி, வீரமாதேவியின் உள்ளத்தை ஊடுருவதுபோல் பார்த்தார் கருவூரார்.

என்ன சொல்வது என்று தெரியாமல் திகைத்து நின்றாள் வீரமாதேவி.

"அரிந்தவன் மாதேவியின் இறுதிக் காலத்தில் அரசரை அவளருகே இருக்கச் செய்வது என் கடமையல்லவா?" என்று கேட்டாள் வீரமாதேவி.

"அந்தக் கடமையைச் செய்ய அவளுடைய மகன் இருக்கிறானே. அவனுக்கு இல்லாத பாசம் உனக்கு எப்படி ஏற்பட்டது?" கருவூராரின் இந்தக் கேள்விக்கு மறுமொழி

## மனம் விட்டுப் பேசுவோம்

47 ஆவது ஆண்டில் முதல் இதழ் கண்டேன். கொளுத்தும் கோடை வெயிலுக்கு இதமான, குளிர்ச்சியான மேலட்டை. பார்க்கும்போதே நாக்கைச் சப்பு கொட்டவும் செய்திருக்கிறீர்கள்.

*– திருமதி சுகந்தி நாராயண், மதுரை 625 011.*

மே மாத இதழில் வெளியான சிறு சிறு நோய்களின் குறிப்புகள், அதற்கான மருந்துகள், அதைத் தீர்க்க வைப்பதற்குச் சொன்ன முறைகள் அனைத்தும் அருமை.

*–டாக்டர் பி. மாசிலாமணி, பாண்டிச்சேரி 605 001.*

ஒவ்வொருவரும் படித்து, பாதுகாத்து, கடைப்பிடித்து, ஆரோக்கியமாக வாழத்தக்க வகையில் அமைந்த – 'அமுதசுரபி' தந்த – மருத்துவச் செய்திகள், மருத்துவக் குறிப்புகள் மிகவும் பயனுள்ளவை. அடுத்த மருத்துவச் செய்திகள் சிறப்புப் பகுதியையும் ஆவலோடு எதிர்பார்க்கிறோம்.

*– அ. செபாஸ்டின், களியல் – 629 101.*

' மே 94' மாத அமுதசுரபி மிகவும் பயனுள்ள மருத்துவத் தகவல்களுடன் வெளிவந்துள்ளது. பாராட்டுகள், பாதுகாக்க வேண்டிய சிறப்பிதழ்.

*– சந்திரா ஜானகிராமன், சென்னை – 600 001.*

அடேயப்பா! எத்தனை கவிதைகள்! எத்தனை கவிதைகள்!! மே 94 அமுதசுரபியை 'கவிதைகள் ஸ்பெஷல்' என்றும் சொல்லலாம்.

*– அன்பின் செபா, குமரி மாவட்டம்.*

'உயில் ஏன் எழுத வேண்டும்?' இதுவரை உயில் பற்றியே சிந்திக்காத பலரையும் உடனே உயில் எழுத வைக்கும் பயனுள்ள ந(ாண)யமான கட்டுரை.

*– திருமதி சாந்தி சுவாமிநாதன், வியாசர் காலனி.*

47 ஆவது ஆண்டின் முதல் இதழ் சாதனை மலர். இம்மாத 'அமுதசுரபி'யில் மருத்துவப் பகுதி மிக அருமையான தொகுப்பு.

*– ஆறு. அழகப்பன், சிதம்பரம்.*

கூறுவதற்கு முன், மீண்டும் கருவூரார் கேட்டார்.

"பெண்ணே! தர்ம நியாயத்திற்கு நீ கட்டுப்படுகிறாய். ஆனால் அரிந்தவன் தேவி, உனக்குத் தொல்லை தருவதையே தன் கொள்கையாகக் கொண்டிருந்தாளே! அவள் சொற்படி, இராசேந்திரன் நடந்திருந்தால் இங்கே கோயில் ஏது? சிற்பம் ஏது, ஏரி ஏது, புதிய நகரம் ஏது?"

வீரமாதேவி கண் கலங்கினாள். குரல் தழுதழுக்க, "நான் அப்படி நினைக்கவில்லை, என்ன இருந்தாலும் இளவரசி அரிந்தவன் மாதேவிக்கு இருக்கும் உரிமை எனக்கு இல்லை. சக்கரவர்த்திகளின் அபிமானத்தைப் பெற்று, தன் உரிமையில் ஒரு பகுதியை நான் பகிர்ந்துகொண்டேன் என்ற கோபம்தான், பெரிய கோயில் உருவாவதற்கு அவர்கள் தடையாக நின்றது. இளவரசியின் தடையையும் மீறி கோயில் பணிகள் வேகமாக நடைபெற்று வருகின்றன. அதனால், இளவரசி மீதுள்ள கோபத்தைப் புலப்படுத்த இது தருணமல்ல என்ற முடிவுடன், அரசருக்குச் செய்தி அனுப்பினேன். செய்தி அறிந்து அவர், திரும்பி விட்டால் - என்ன செய்வது புரியவில்லையே சுவாமி!" வீரமாதேவியின் விழிகள் வேதனையை நீராகச் சொரிந்தன.

சித்தர் வீரமாதேவியின் இரு கரங்களையும் அன்புடன் எடுத்து தன் கரத்துடன் பிணைத்து, "கலங்காதே வீரமாதேவி! எல்லாம் நல்ல வண்ணமாக நடக்கும். அரிந்தவன் தேவியின் உடல்நிலையில் முன்னேற்றம் ஏற்பட்டு விட்டது. பெரிய கோயில் குட முழுக்கு விழாவைப் பார்த்து விட்டுத்தான் அவள் கண் மூடுவாள். இப்போதே நீ அரசருக்கு ஓர் ஓலை எழுது. 'கங்கை நீருடன் வரவும். திருப்பணிகள் எல்லாம் நல்லபடி முடியும் தருவாயில் உள்ளன" என்று குறிப்பிட்டு விரைந்து செல்லுமாறு நம்பிக்கையான தூதுவரை அனுப்பிவை. அரசர் கரத்தில் கிடைக்குமாறு அனுப்பிவை.

கங்கைக்கரைக்கு, சோழ வீரர்கள் சென்றடைந்து விட்டனர். அரசி பஞ்சவன் மாதேவி வருவதை அறிந்து, கோதாவரிக் கரையில் காத்திருக்கிறார் அரசர். நினைவிருக்கட்டும். இன்னும் மூன்று பௌர்ணமிகளே உள்ளன" என்றார்.

அரிந்தவன் தேவி பிழைத்து விட்டாளா? வீரமாதேவியின் முகம் மலர்ந்தது, அகம் குளிர்ந்தது. சித்தர் சொன்னது போல் ஓலை அனுப்பத் திட்டமிடலானாள்.

"வீரமாதேவி!" என்று மீண்டும் அழைத்தார் சித்தர். "செய்தியைத் தக்கவரிடம் அனுப்ப வேண்டும் என்று ஏன் சொன்னேன் தெரியுமா? அரிந்தவன் மாதேவியின் உடல் நிலை சரியில்லை என்று நீ தெரிவிக்குமாறு சொன்ன ஓலை, அரசரை இன்னும் சென்றடையவில்லை" என்று சித்தர் கூறினார்.

(தொடரும்)

கணவன் டி. ராஜேந்தரும், மனைவி கௌதமியும் வழக்கறிஞர்கள். இந்தத் தம்பதிக்கு ஒரு குழந்தை. கௌதமியின் தம்பி ராக்கி ராஜேஷ் வில்லன். வில்லன் செய்த கொலைக்காக வழக்காடும் டி. ராஜேந்தர், வில்லனைச் சிறைக்குள் தள்ளி விடுகிறார். இதனால் கோபப்படும் வில்லன், சில்க் ஸ்மிதாவை வைத்து கணவன் – மனைவியைப் பிரித்து விடுகிறார். மனைவியும் குழந்தையும் லண்டனுக்குப் பயணமாகிறார்கள். ஏழு வருடம் கழித்துத் திரும்பி வரும் குழந்தை வளர்ந்து சிலம்பரசனாகி தந்தை. டி. ராஜேந்தரை வெறுக்கிறான்.

எல்லாவற்றையும் பொறுமையாகத் தாங்கிக் கொள்ளும் டி. ராஜேந்தர் ஒரு கட்டத்தில் கொந்தளித்துப் போய், மனைவி கௌதமி பேரில் தனக்கிருக்கும் அன்பை, பெரிய பெரிய போட்டோக்களைக் காட்டி சிலம்பரசனுக்குப் புரிய வைக்கிறார்.

இது பொறுக்காத வில்லன் எல்லாரையும் ஒட்டுமொத்தமாகக் கட்டி வைத்துப் பழி வாங்கும் போது சண்டை – சுபம்.

இடைவேளைக்குச் சற்று முன்பு வரும் சிலம்பரசனின் வருகை படத்திற்குப் புதிய வேகத்தைத் தருகிறது. இந்த வேகம் படிப் படியாய் குழந்தைப் பாட்டு, சாமியாட்டப் பாட்டு என்கிற இடையூறுகளால் தேய்ந்து, படம் முடிகிறது.

ஏழு பொறுப்புகளைத் தன் மேல் சுமந்திருக்கும் டி. ராஜேந்தரின் திறமை சிலம்பரசனின் வசன அசைவுகளில் பளிச்சிடுகிறது. நமக்காக படத்தைப் பார்த்தவர்களின் கருத்துகளைத் தொகுத்திருக்கிறோம். ○

## திருமதி ஆர். மீனாட்சி

முக்கோணக் காதல், ரத்... பீய்ச்சி அடிக்கும் வன்முறை... காட்சிகள், இரட்டை அர்த்... கொச்சை வசனங்கள் நிறை... தமிழ்த் திரைப்படங்களு... நடுவே டி. ராஜேந்தரின் ... வசந்த கீதம், கணவன் – மனை... அன்பு, மகன் – தந்தை பாசத்... வெளிப்படுத்தியிருக்கிறது.



தவறாகப் புரிந்து கொள்ள... பட்டு தண்டிக்கப்படும் கண... னாக, மகனால் வெறுக்கப்படு... தந்தையாக டி. ராஜேந்தர் நடிக்... றார். நடிகர் டி. ராஜேந்தரைவ... வசனகர்த்தா ராஜேந்தர் ... காட்சிகளில் நம்மை அசத்துகிறா... திருமணத்தைப் பற்றிய பாட... கருத்தைக் கவருகிறது. நடிப்பி...

# ஒரு வசந்த கீதம்



குட்டிப் பையன் சிலம்பரசன் பதினாறு அடி பாய்கிறான்.

படத்தில் குறைகள் இல்லாமல் இல்லை. நிறையப் பாடல்கள், நடனங்கள், படத்தின் நீளம் ஆகியவை மைனஸ் பாயிண்ட்கள். ஆயினும் தமிழ்ப் படத்தின் தலைவிதி அது, ஒரு சிலரைத் திருப்திபடுத்துகிறது என்பதால் இக் குறைகள் மன்னிக்கப்பட வேண்டியவை.

## திரு. ராஜதுரை ராபர்ட்ஸ்

இனிமையான பாடல்களும், அடுக்கு மொழி வசனமும் கலந்த டி. ராஜேந்தரின் மூன்று மணி நேர முழு நீளப் படம்.



இதுவரை டி. ராஜேந்தர் மட்டும்தான் கையை ஆட்டிப் பேசிக் கொண்டு இருந்தார். இப்படத்தில் எல்லாக் கதாபாத்திரங்களையும் கை ஆட்ட வைத்திருக்கிறார்.

சிலம்பரசனின் நடிப்பு ஓ.கே. தந்தையின் முகத்தில் காறித் துப்புவது மிகைப்படுத்திக் காட்டப்படுகிறது. குணச்சித்திர – சிரிப்பு – நடிகர்கள், பார்த்தவுடன் சிரிப்பு வரக்கூடிய லூஸ் மோகன் கூட மிக அமைதியாக எந்தவித நடிப்புப் பாத்திரமும் இல்லாமல் வருவதற்கு என்ன காரணமோ?

பாடல் என்றவுடன் கனவுக் காட்சி, அதற்கு தடபுடலான செட்டுகள். அப்பப்பா! பணத்தை வாரி இறைத்திருக்கிறார். விசுவைப் போலவே குடும்பப் படம் எடுப்பதாக எண்ணி அதில் தோல்வி கண்டுள்ளார் டி.ஆர். என்றுதான் சொல்ல வேண்டும்.

## திருமதி வசந்தா கோபாலன்

'மெய்ப் பொருள் காண்பது அறிவு', 'தீர விசாரிப்பது மெய்' என்பவற்றின் உட்கருத்து படத்தில் கையாளப்பட்டிருக்கிறது. ராஜேந்தரும் கௌதமியும் தத்ரூபமான நடிப்பை வெளிப்படுத்தியிருக்கிறார்கள். சிக்கல் சந்தேகங்களைக் களைந்திட ஒரு பாடமாக ஏற்க – எல்லாத் தம்பதியரும் ஒரு தடவை இப்படத்தைப் பார்க்கலாம்.



புலிக்குப் பிறந்தது சிங்கம் என்கிறபடி சிலம்பரசன் ஆழமான வசனங்களைக் கொட்டி இருக்கிறார். எப்பொழுதும் போல் மிக அபரிமிதமான, விலையுயர்ந்த நடன அமைப்புகள், அதிகப்படியான பாடல்கள்.

## திரு. நீலவன்

சண்டைக் காட்சிகளில், கோர்ட் காட்சிகளில், பாடல் காட்சிகளில், அன்பை, பாசத்தை வெளிப்படுத்தும் காட்சிகளில் உணர்ச்சிகளின் ஒட்டு மொத்தங்களாகியிருக்கிறார் டி.ஆர். தந்தையாய்க் கணவனாய்த் தத்ரூபங்களாய்த் தன்னைத் தோலுரித்து – ரசிகர்களின் சிந்தையில் விந்தையைப் பாந்தமாய் விதைத்திருக்கிறார். ஓரிரு இடங்களில் ஓவர் கத்தலைத் தவிர்த்திருக்கலாம்.



சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளை. ஆனால் இந்த டி.ஆரின் பிள்ளை சொல்லாததையும் செயலாக்கியிருக்கிறது. (அதாவது நடித்திருக்கிறான்). வேங்கையையும் விஞ்சிச் சிலிர்க்கிறது வேங்கைக்குட்டி. சிலாகித்தே தீர வேண்டும். வக்கீல் டிரஸ்ஸில் தாத்தா வீட்டில் வாதிடும்போது பண்பட்ட பெரிய நடிகனாகவே மாறி ரசிகர்களின் கண்பட்டு விடுமளவு பிரகாசிக்கிறான்.

## திரு. டி. ஆர். கணேசன்

டெக்னிகலாக இப்படத்தில் பல குறைகள். வீட்டில் உள்ள கல்தூண் சண்டைக் காட்சிகளில் ஆடுவது, ஆட்டோ நம்பர் ஒட்டப்பட்டது, நியூஸ் பிரிண்ட் ரீலையே கையால் வீசுவது போன்ற பல அபத்தங்களுக்கிடையே, பாசத்தை வலியுறுத்தும் கதைக்காகவும், சித்ரா, எஸ்.பி.பியின் குரல் வளத்திற்காகவும் ஒருமுறை (கண்ணை மூடிக் கொண்டு) பார்க்கலாம்.

## திரு. பரணி

கணவனைப் பிரிய ஒரு வலுவான ஆதாரம் இல்லை என்றாலும், சந்தேகத் தீயை அடுக்கடுக்காக வளர்த்துள்ள விதம் டி. ராஜேந்தரை ஒரு நல்ல திரைக் கதாசிரியராகக் காட்டியுள்ளது.

'கல்யாணம் என்பது' ஒரு பாடலைத் தவிர மற்ற பாடல்கள் அரங்கோடு சரி. மக்கள் செவியரங்கைச் சேரா ரகம்.

சண்டைக் காட்சிகளை இப்போதெல்லாம் அற்புதமாக அமைக்கிறார்கள். ஆனால் இப்படத்தில் ஓர் அடி விழுந்ததும், ஸ்டண்ட் நடிகர்கள் எதன்மீதாவது பாய்ந்து உடைக்கிறார்கள்.

கடைசிக் காட்சி – தாலிக்கும் ஆண்டவனுக்கும் முடி போட்டு, பெண்களைக் கவர நினைக்கிறார் ராஜேந்தர். அவர் எண்ணம் நிறைவேறினால் சரி.

## கே. ஆர். பிரதீப்

பெண்களுக்கான கதை, வசனம், டைரக்ஷன், காட்சி அமைப்புகளைத் திறமையாக திரு டி.ஆர். கையாண்டுள்ளார். டி. ராஜேந்தர் நடிப்பு நன்றாக உள்ளது. சிம்புவையும், குறளரசனையும் நடிக்க வைத்துள்ள சிறப்பு டி.ஆரையே சாரும்.

கௌதமியின் பாத்திரம் பெண்களுக்கு ஒரு படிப்பினையாக இருக்கும்.

இறுதிக் காட்சி நடனம் மிக நன்றாக அமைந்துள்ளது.

தொகுப்பு : நாகு

# பில்ராத் ஆஸ்பத்திரி




★ பில்ராத் ஆஸ்பத்திரி

பெயர் வினோதமாக இருக்கிறதே!

யார் இந்த பில்ராத்?

'வியன்னாவில் வாழ்ந்த டாக்டர்!' என்கிறார் டாக்டர் வி. ஜெகநாதன்.

"சென்ற நூற்றாண்டில் வாழ்ந்தவர். மருத்துவத் துறையில் இவரிடம் பல முதல் கண்டுபிடிப்புகள் உண்டு. முதன் முதல் வயிற்றை அறுவை செய்தவர் இவர். 1881இல் புற்றுநோய் கண்ட இரைப்பையை வெட்டி எடுத்தார் மேலும் மருத்துவத்தில் அறுவை வரலாற்றுக்கே வழி வகுத்தவர். உடல் உறுப்புகளை மாற்றவும், நீக்கவும் முடியும் என்று செய்து காட்டியவர் இவர்

வியன்னாவில் இவர் பெயரில் இருக்கும் மருத்துவ மனையில் தான் நான் படித்தேன்" என்றார் டாக்டர் வி. ஜெகநாதன்.

இந்த மருத்துவ மேதையின் தன்னலமற்ற சேவை ஜெகநாதனுக்குப் பிடித்துவிட்டது.

எனவே, சென்னையில் தாமே ஓர் ஆஸ்பத்திரி கட்ட நினைத்த போது இவர் பெயரையே அதற்குச் சூட்டிவிட்டார்.

வியன்னாவில் இரண்டரை ஆண்டு படித்து இரைப்பை, குடல் அறுவை சிகிச்சைகளில் முதன் முதலாகத் தேறிய தமிழ் நாட்டு டாக்டர் இவர்தான்!

சென்னாய் நகரில், லட்சுமி டாக்கீஸ் சாலையில், இந்த 'பில்ராத்' ஆஸ்பத்திரிக் கட்டடம் ஒரு வெள்ளைக்காரப் பெண் போல் சிக்காக, சுத்தமாக, நவீனமாக இருக்கிறது.

உள்ளே நுழைந்தால் சுத்தம் உங்களைத் தொடர்கிறது.

"குடல் வால் (அப்பண்டிஸிடிஸ்) ஏற்பட்டால் முன்பெல்லாம் அறுவை செய்து கொண்டிருந்தார்கள். ஆனால் இப்போது பாருங்கள். வயிற்றில் ஒரு சின்ன துவாரம்தான் இடுகிறோம். சிகிச்சையை அதன் வழியே சீக்கிரம் முடிக்கிறோம். இரண்டு நாளில் வீடு திரும்பலாம்."

இதை எப்படிச் செய்கிறார்?

லேப்ரோஸ்கோபி கருவி இந்த மாயத்தை நிகழ்த்துகிறது. உள்ளே சிகிச்சைக்கு உட்பட வேண்டிய பகுதியை இதன் மூலம் வெளியிலிருந்தே பார்க்க முடியும்.

கதிர்களைச் செலுத்துவதன் மூலம் உள்ளே சிகிச்சை நடக்கிறது!

அறுவை என்ற பேச்சே இல்லாமல் அத்தனை அதிசயமும் நடக்கிறது.

இந்த லேப்ரோஸ்கோபி மூலம் வேறு என்னென்ன செய்ய முடியும்?

பித்தப்பையில் கல் உண்டாகி விடும். இதற்கும முன்பெல்லாம் அறுவைதான், சிகிச்சை!

இப்போது இந்த லேப்ரோஸ்கோபி மூலம் கல்லை அகற்றி விடலாம்.

ஹெர்னியா என்கிறார்களே, குடல் இறக்க நோய், இதையும் அறுவை இல்லாமல் முடித்து விடலாம்!

தவிர அறுவை நடந்த குடலில் மற்றொரு பகுதி ஒட்டிக் கொள்ளும். இதை அறுவை இல்லாமல் நீக்கி விடலாம்.

பெண்களின் கர்ப்பப்பையில் கட்டி உண்டாகும்.

அதையும் இந்த முறையில் நீக்கிவிடலாம்.



கர்ப்பப்பையை அகற்றிவிட
ண்டுமானால்கூட அறுவை
ல்லாமல் அகற்றி விடலாம்.

"டாக்டர்! நீங்க சொல்வதைப்
ர்த்தால், கொஞ்ச காலத்தில்
றுவை என்கிற பேச்சே இல்லா
ல் போய்விடும் போல இருக்கே!"
ன்றேன்.

"அவ்வளவு தூரம் வந்து
டுமா என்று தெரியவில்லை"
ன்றார் டாக்டர் ஜெகநாதன்.

ஆஸ்பத்திரி பகுதிகளுக்குள்
நுழைந்தாலே கட்டடம் அப்போது
ான் கட்டப்பட்ட புதுமையுடன்
ருந்தது. பராமரிப்பு அப்படி!

ரத்தப் பரிசோதனையில் ஆரம்
த்தால் ஒரு மருத்துவப்பிரிவு
ாக்கி இல்லை. எக்ஸ்ரே.
கப்பேறு, மூளை நரம்பியல்
கிச்சை, சரும நோய், மனநோய்,
ஆகிய சிகிச்சை செய்து, மூக்கு,
தொண்டை பிரிவுகள், எலும்பு
ரிவு அத்தனையும் கச்சிதமாக
அந்த இரண்டு மாடிக்
ட்டடத்துள் அடங்கி இருக்
கின்றன.

லேபரோஸ்கோப் மூலம் குண
ான நோயாளிகளைக் காண்
த்தார். "பத்து சத
பிகிதம் நோயாளிகளுக்கு இல

வசமாகவே சிகிச்சை செய்கிறோம். சில நோயாளிகளுக்கு மருத்துவச் செலவு மட்டும் வாங்குகிறோம். சோதிக்க வரும்போதே பணத்தைக் கேட்டுக் கஷ்டப்படுத்துவதில்லை. மனிதாபிமான இதயம் நிறைய இருக்கிறது. மருத்துவத் தொழிலில் கருணையும் இதமும் சேவை மனப்பான்மையும் நிறைய வேணும்" என்கிறார் ஜெகநாதன். அப்படி ஓர் இளைஞர் சொல்வதே ஆச்சரியமாயிருக்கிறது.

"சிறிது அதிசயமாக ஏதாவது செய்திருக்கிறீர்களா?"

"சமீபத்தில் ஒரு கேஸ்! துண்டித்த கையைச் சேர்த்து விட்டோம்" என்றார் டாக்டர் ஜெகநாதன்.

கொஞ்சம் நிமிர்ந்து உட்கார்ந்தேன்.

"பஸ்ஸில் வெளியே கையை நீட்டிக் கொண்டிருந்தார். எதிரே வந்த பஸ் கையைத் துண்டாக்கி விட்டது! துண்டிக்கப்பட்ட கையை உடனே போய் எடுத்தார்கள். அதை உடனே பனிக்கட்டியில் வைக்கச் சொன்னார்கள்! அதில் வைத்தே ஆஸ்பத்திரிக்கு எடுத்து வந்தார். எங்கள் டாக்டர் குழு நிபுணர்கள் பல மணி நேரம் இந்தச் சிகிச்சையில் ஈடுபட்டார்கள்"

"கையை அப்படியே ஒட்ட வேண்டியதுதானா?"

"சரியாப்போச்சு! இந்த அறுவை முறையே வேறு! சாதாரண அறுவை போல் இல்லை! நுண்ணிய அறுவை செய்யணும்! நம்ப கண்ணாலே நேரிலே பார்த்துச் செய்ய முடியாது!"

"அப்போ எப்படிச் செய்யணுங்க?"

"மைக்ரோஸ்கோப் மூலமாக! அதன் அடியில் கைத் துண்டத்தை வைத்து, மிக நுண்ணிய கருவிகளால் சிகிச்சை நடக்கும். துண்டிக்கப்பட்ட ரத்தக் குழாய்களைச் சரியாகப் பொருத்தித் தையல் போடணும்! அது மட்டுமல்ல; நரம்புகளைச் சேர்க்கணும்!"

"கஷ்டந்தானே!"

"ரொம்பக் கஷ்டம்! நரம்பே பொடிசு! அதிலே மூன்று தனித்தனிப் படிவங்கள் உண்டு. குறிப்பிட்ட படிவங்களில்தான் தையல் போடலாம். தையல் போடறது மகா கஷ்டம். பத்து மணிக்கு ஆரம்பிச்ச சிகிச்சை ராத்திரிதான் முடிஞ்சது".

"சேர்ந்து போயிட்டுதா?"

"சேர்ந்துடுத்து! பெரும் வெற்றி! இப்டி சவாலான கேஸ்களை நாங்கள் தைரியமாக எடுக்கிறோம்.

நீட்டமாக பட்டப் படிப்புகளை வாங்கிக்கொண்டவர் 'டாக்டர் வி. ஜெகநாதன்' M.B.M.S., MAMS., FRSH., (LONDON)., FAGE, FAMS - Gastro (Vienna)

இளமை மாறாத உடல்கட்டு. சதா முகத்தில் புன்னகைதான்! வாய்க்கு 'நோ' என்று சொல்லியே பழக்கமில்லை.
"நோ"வுடன் சேர்த்து "நோ ப்ராப்ளம்" என்று சொல்லித்தான் பழக்கம்! டாக்டர் ஜெகநாதனைப் பார்க்கும்போதும், அவரிடம் பேசும்போதும் மனத்தில் ஓர் உணர்ச்சி தோன்றுகிறது.

'சமூகம் அங்கங்கே சில நல்லவர்களை உருவாக்குகிறது. அவர்கள் சேவை மனப்பான்மையோடு திகழ்கிறார்கள்' என்று! ००

—புஷ்பா தங்கதுரை.




☆ இயற்கை உணவு மருத்துவ முகாமில் டாக்டர் ஏ.வி.ஜி. ரெட்டியுடன் பாலகுமாரன், சைதை துரைசாமி, ஓய்வு பெற்ற ஐ.ஏ.எஸ். அதிகாரி வி. பெரியசாமி ஆகியோர்.

# உணவே மருந்து, மருந்தே உணவு!

சென்னை அண்ணா நகர் டவர் அருகில் Y81 இலக்கம் உள்ள இல்லம்; படியேறி மாடியில் உள்ள ஹாலை அடைந்தேன். சுமார் 25 பேருக்கு (ஆடவரும், பெண்டிருமாக, பல்வேறு வயதினர், வெவ்வேறு பகுதிகளைச் சேர்ந்தவர்கள், வேறுபட்ட தொழில் புரிபவர்கள் அடங்கிய ஒரு குழு, அது என்று பிறகு புரிந்தது) நடுவே, நாற்பது வயது மதிக்கத்தக்க நாகரிக உடையணிந்த நபர் ஒருவர் சரளமாக உரையாடிக் கொண்டிருந்தார்.

சற்று கவனித்தபின் அவர்கள் அனைவரும் இயற்கை உணவு சிகிச்சை முறையில் பயிற்சி 'பெற வந்திருப்பவர்கள் என்பதும், வெளிப்படையான பேச்சில் விவுயங்களை அள்ளி வீசிக் கொண்டிருந்த அந்த 'நடு நாயகர்' இதற்கென்றே ஆய்வு மையம், மருத்துவமனை, கல்லூரி ஆகியன அமைத்திருக்கும் டாக்டர் ஏ.வி.ஜி. ரெட்டி என்பதும் தெரிய வந்தது.

பயிற்சி பெற வந்திருந்தவர்களில் ஒரு பெண்மணி எம்.பி.பி.எஸ். மருத்துவர் என்ற உண்மை, தற்போது 'அலோபதி' முறை மருத்துவர்கள் பலரும்கூட, 'இயற்கை உணவு சிகிச்சை முறையின் சிறப்பை ஏற்றுக் கொண்டுள்ளனர்' என்று சொல்லப்படுதவற்கு உதாரணமாக இருக்கிறது.

அது மட்டுமின்றி, கேரள மாநிலத்தில் உடற்பயிற்சிக் கூடம் அமைத்துள்ள ஒரு பெண், இயற்கை உணவு முறையில் ஆர்வத்துடன் இப் பயிற்சியில் கலந்து கொண்டிருக்கிறார் என்பதிலிருந்து இயற்கை உணவு சிகிச்சை முறை பரவலான புகழை அடைந்துள்ளது என்பதையே காட்டுகிறது.

'அலோபதி' முறை சிகிச்சையை ஒருவர் மேற்கொள்ளும் போது, அவரது நோயைப் பொறுத்து உணவுப் பழக்கத்தில் சில மாறுதல்கள் செய்ய வேண்டி வரும்; சித்த, ஆயுர்வேத சிகிச்சை முறைகள் என்றால், கடுமையான பத்தியம் மேற்கொள்ள வேண்டியிருக்கும். ஆனால், இயற்கை மருத்துவத்தில் உணவே மருந்தாகிறது, மருந்தே உணவாகிறது. ஆம்; நோய்வாய்ப்பட்டவர், மருந்து என்று தனியாக எதையும் உட்கொள்ள வேண்டியதில்லை; உணவாகக் கொள்ளத்தக்க தாவர வகைகளின் காய்கள், கனிகள் தவிர இலைகள், பட்டைகள், வேர்கள், முளைகள், விதைகள் இவற்றையும், இயற்கை நல மருத்துவரின் அறிவுரைப்படி தம் உணவில் சேர்த்துக் கொள்ளும் போது நோய் குணமாவதுடன், பொதுவான உடல் நலனும் உரம் பெற்று விடும்.

பக்க விளைவு, எதிர்விளை
பின்விளைவு போன்ற எ
ஆபத்தும் நேராது. அத்தகை
உணவு, நோயாளிக்கு மட்டுமல்
நோயற்ற மற்றவர்க்கும் உக
தாகவே அமையும் என்பது சிற
அல்லவா?

நீரிழிவு, ஆஸ்துமா, இரும
சளி, வெண்குட்டம், ஒவ்வா
சிறுநீரகக் கோளாறு, இர
அழுத்தம், குடற்புண் முத
நோய்களைத் தடுப்பதில
போக்குவதிலும் இயற்கை உ
சிகிச்சை ஈடிணையற்றது எ
தம் அனுபவங்களின் வாயில
எடுத்துக் கூறுகிறார் டாக்
ஏ.வி.ஜி. ரெட்டி, நடமாடக் கூடி
சாப்பிடக் கூடிய நிலையில் உ
எந்த நோயாளிக்கும், இயற்
உணவு சிகிச்சை விரைவிலே
பயன்தர வல்லது என்றும் இ
தெரிவிக்கிறார்.

பத்து ஆண்டுகளுக்கு மு
சிறுநீரகக். கோளாறு, உயர் ர
அழுத்தம் ஆகியவற்றால் பா
கப்பட்டு, பல வைத்தியர்களி
சிகிச்சை பெற்றும்கூட, கு
அடையாமல், மருந்தை நிறு
னால் உபாதை அதிகரிக்கும் எ
நிலையில் சலிப்புற்ற இ
'மனிதருக்கு நேரும் நோய்க
கெல்லாம் காரணம், சமை
உணவே' என்ற முடிவிற்கு வ
இயற்கை சார்ந்த உணவை ப
தர்கள் உண்ணத் தொடங்கின
தான், நீடித்த உடல்நலன் 
திப்படும் என்று தாம் உண
பேருண்மையை சமூகம் மு
மைக்கும் பயன்படுத்த மு
தார்.

சிவசைலம் அருகில் உ
இயற்கை நல்வாழ்வு ஆசிரமத்
நிறுவிய புலவர் மு. இர
கிருஷ்ணன் அவர்கள்தான் (
காய், பழச்சாமியார் என்பது 
ளூர் மக்கள் அவருக்கு இட்டு
பெயர்) தம் குருநாதர் எ
நன்றியுடன் குறிப்பிடும் டாக்
ஏவி.ஜி. ரெட்டி. மேலும் 
இயற்கை நல மையங்க
தமக்கு இந்த எழுச்சியை ஊட்
தாகச் சொல்கிறார். இர
அழுத்தத்திற்காக தான் சாப்பி
மருந்துகளின் விளைவாக 
இதயத் துடிப்பு குறைந்து
மருத்துவர்களும் அந்த உ
மையை மேம்போக்காக ஒ

காள்ள, மருந்தின்றி மனிதர் வாழ
ழி ஒன்று காண வேண்டும் என்ற
வட்கை இவருக்குப் பிறந்ததாம்.

பஞ்சபூதங்களினால் ஆகிய
ளித உடலுக்கு, தாவர உணவு
ளைத் தருவதன் மூலமே, அதன்
நாய் எதிர்ப்புத்திறனை வளர்க்க
டியும் என்ற கருத்தை அடிப்
டையாகக் கொண்டு, 'உயிருள்ள
யற்கை உணவுகள்' என்ற நூலை
89இல் வெளியிட்டார்.

இந்நூலில், சமைத்த உணவில்
யிர்ச்சத்து இல்லை என்பதை
ளக்க, 'கடைகளில் வாடி வதங்கி
ள்ள காய்கறி, கீரை ஆகியவற்றை



ாங்க மறுக்கும் நாம், உயிர்ச்சத்
டன் தளதள என்றிருக்கும்
ாய்கறி, கீரைகளை நன்றாக
மைத்து சாப்பிடும்போது அவற்
ின் சத்துகள் அழிந்து விடுவதைப்
ற்றி சிந்திப்பதில்லையே?' என்று
ளிமையாக வினா எழுப்பிச்
ிந்திக்க வைக்கிறார் இவர்.

இதுவரை ஏழு பதிப்புகளைக்
ண்டுள்ள இந்நூலின் ஆங்கில
டி வரும் அண்மையில் வெளி
ந்துள்ளது. 1989 முதல் தமிழ
த்தின் பல ஊர்களில் முகாம்கள்
டத்தி, பொதுமக்களிடையே
சமைக்காத இயற்கை உணவின்

நன்மைகளைப் பற்றிய விழிப்
புணர்வை வளர்த்துள்ளார்.
சென்னையில் இயற்கை உணவு
நல ஆராய்ச்சி நிறுவனத்தையும்,
இயற்கை சிகிச்சைக் கழகத்தையும்
நிறுவி, சான்றோர் பலரின்
துணையுடன் அவற்றை நடத்தி
வரும் இவர், திருவேற்காட்டில்
இலவச மருத்துவமனை ஒன்றை
அமைத்திருந்தார்.

தற்போது அண்ணாநகரில்
எளிய கட்டண முறையில் ஓர் அக
மருத்துவமனையைத் தொடங்கி
யிருப்பதுடன், இயற்கை உணவு
சிகிச்சை முறையில் பலதரப்
பட்டோரும் பயிற்சி பெற்று
மருத்துவராக விளங்க நேரிலும்
தபாலிலும் கற்றுத் தரவும் ஏற்
பாடுகளைச் செய்துள்ளார்.
இவரது சிகிச்சை முறையில் நலம்
பெற்றோர் பட்டியலில் முன்னாள்
குடியரசுத் தலைவர் ஆர்.வி.
முதல் பல வி.ஐ.பிக்களும், சைதை
சா. துரைசாமி போன்ற அரசியல்
வாதிகளும், பல திரைப்பட நட்சத்
திரங்களும் இடம்பெற்றிருக்
கிறார்கள்.

திருவேற்காட்டில் மருத்துவ
மனை நடத்தியபோது, தலைமுதல்
கால்வரை புண்களினால் ஆறுமாத
காலம் அவதிப்பட்டுக் கொண்
டிருந்த ஏழைச் சிறுவர்களுக்கு,
வல்லாரை இலைச்சாறு குடிக்க
வும், குப்பைமேனி - பூவரசு இலை
களின் சாறு தடவவும் கொடுத்து
ஒரே வாரத்திற்குள் குணப்படுத்தி
யதையும், யானைக்கால் நோயி
னால் நடக்க முடியாத நிலையில்
உட்கார்ந்து வந்த சிறுவன்
இருவார சிகிச்சைக்குப் பிறகு
நடந்தே திரும்பியதையும் பற்றி
இவருடைய அன்பர்கள் ஆர்வமாக
எடுத்துரைக்கிறார்கள்.

அதேபோல், இவருடைய
அறிவுரைக்கேற்ப தம் உணவுப்
பழக்கத்தை மாற்றிக் கொண்ட
தால் உடல் நலம் பெற்றவர்கள்,
இவர் நடத்தும் முகாம்களில்
பங்கேற்று பிறர் அறியும் வண்
ணம் தங்கள் எண்ணங்களை
வெளியிட்ட அனுபவங்களும்
உண்டு.

நாள்தோறும் காலை முதல்
இரவுவரை அருகம்புல், வில்வம்,
துளசி, தூதுவளை, சிறு குறிஞ்
சான், அத்தி, ஆல், அரசு, மருதம்,
அகத்தி, தாமரைப்பூ, வேம்பு
போன்ற பல்வேறு இலைகளின்
சாறுகள், பொடிகள் ஆகியவற்
றுடன், பச்சைக் காய்கறிகள்,
பழங்கள் இவையும் அடங்கிய
உணவுப் பட்டியலை, பொதுவான
உடல்நலனுக்கென்றும், பல்வேறு
நோய்களைக் குணப்படுத்தும்
வகையில் மாற்றி அமைத்தும்
சிபாரிசு செய்கிறார் இவர்.
இயற்கை உணவைச் சிறிது சிறி
தாக அதிகமாக்கிக் கொண்டே
வந்து நாம் சாப்பிடும் உணவில்
50 சதவிகிதம் வரை இயற்கை
உணவை மேற்கொள்வது எவ
ருக்கும் சாத்தியமானதே என்கி
றார் இவர்.

சிகிச்சைக்காக வரும் நோயாளி
களுக்கு முதலில் உபவாசம், பிறகு
இளநீர், பழச்சாறு என்று
தொடங்கி இயற்கை உணவிற்குப்
பழக்கி, விரைவில் குணமடையச்
செய்கிறார். உடல் இளைப்பதற்
காக இவரது ஆலோசனைப்படி,
இயற்கை உணவை மேற்கொண்ட
பருமனான ஒரு பெண்மணி
இரண்டே வாரங்களில், அடை
யாளம் காண முடியாத அளவில்
மாறிவிட்டாராம்.

மூட்டு வலியால் நடக்க முடியாத நிலையில் வந்த பெண்மணி தற்போது யோகாசனம் செய்யும் அளவுக்குத் தேறியிருக்கிறாராம். இவரது சிகிச்சை முறையில், யோகாசனத்திற்கும், வாழை இலைக்குளியல், தொட்டிக் குளியல், சூரிய ஒளிக் குளியல், மண்பற்று போன்றவற்றுக்கும் இடம் உண்டு. ஆஸ்துமா நோயாளிக்கு ஈரத்துணியை மார்பில் கட்டுவது நல்லது. நரம்புத்தளர்ச்சிக்கு சுடுநீர் ஆகாது, பல்முளைத்த பிறகு பால் உடலுக்குக் கெடுதி, வேக வைத்த உணவுடன் பச்சைக் காய், பழங்களை சேர்த்து சாப்பிட்டால் பலனில்லை என்பது தவறு - இப்படி இவர் கூறுவதெல்லாம், நாம் கொண்டிருக்கும் பல ஐயங்களைத் தெளிவுபடுத்துகிறது.

நுரையீரல் அகற்றப்பட்டு, தைராய்டு சுரப்பி வீக்கத்தினால் அவதியுற்ற, மதுரையைச் சேர்ந்த சிஸ்டர் மேரி இம் மருத்துவமனைக்கு வந்து ஆறு நாள்கள் உபவாசம் இருந்து, இயற்கை உணவிற்கு மாறி ஒரே வாரத்தில் குணம் அடைந்ததை நம்மிடம் கூறினார். பழைய (முந்தைய மருத்துவர்கள், அவர் பட்டினி கிடக்கவே கூடாது என்று எச்சரித்திருந்தார்களாம்!) வாய்ப்புற்று நோயாளியான ஒரு பெண்மணியின் நிலையிலும் முன்னேற்றம் இருப்பதைக் காணமுடிந்தது. காய்ச்சலினால் அவதியுற்ற நோயாளிக்கு, பச்சைத் தண்ணீரில் துணியை நனைத்து உடலில் சுற்றிக்கொள்ளும்படி டாக்டர் கூறி நம்மை வியக்க வைத்தார். அவரது முறைகள் யாவும், பரீட்சார்த்தமானவை அல்ல, பகுத்தறிந்து புரிந்து கொள்ளத்தக்க உண்மைகளே என்பது விளங்குகிறது. எல்லாவற்றுக்கும் மேலாக, இவரது இதமாகப் பழகும் தன்மையே நோயாளிகளுக்குப் பெரும் ஆறுதலைத் தருவது கண்கூடான விஷயம். கேஎஸ்

# மருத்துவத்தில் கீரை



பசலைக்கீரையில் இரும்பு, பாஸ்பரஸ், கால்ஷியம் குளோரின் மற்றும் ஏ.பி.சி வைட்டமின்கள் அதிக அளவில் இருக்கின்றன. தொடர்ந்து பசலைக் கீரை சாப்பிடுவதால் நோய் எதிர்ப்புச்சக்தி அதிகமாகிறது.

கீழாநெல்லிக் கீரையை அரைத்து நெல்லிக்காய் அளவு எடுத்து ஒரு டம்ளர் மோரில் கலக்கி தினசரி காலையில் குடித்து வர நீரிழிவு நோய் குணமாகும்.

மணித்தக்காளிக் கீரையில் புரதம், இரும்பு, சுண்ணாம்பு, பாஸ்பரஸ், வைட்டமின் சி, சத்துகள் ஆகியவை அதிக அளவில் இருக்கின்றன. மணித்தக்காளிக் கீரை, வற்றல் என்ற வகையில் ஏதாவது ஒன்றை தினம் சாப்பிட குடற்புண், வாய்ப்புண் குணமாகும். கபம், இருமல் நீங்கும். நுரையீரல் நோய் குணமாகும். நரம்புத் தளர்ச்சி நிவர்த்தியாகும். சோகை, மூலநோய்த் தொந்தரவுகள் நீங்கும். சிறுநீர் பெருகும். பெண்களின் மார்பு வளர்ச்சியை ஊக்கப்படுத்தும்.

வெந்தயக் கீரை பல்வேறு நோய்களுக்கு மருந்தாக உதவுகிறது. வயிற்று உப்புசத்தை நீக்கும். வாய்வைப் போக்கும். கட்டிகளை உடைக்கும். வீக்கத்தை வற்றச் செய்யும். இடுப்பு வலியைக் குணப்படுத்தும். மார்பு வலி, இருமல், மூலம் ஆகியவை நீங்கும். மலச் சிக்கல் தீரும். கண் பார்வை தெளிவடையும். சொறி சிரங்கு வாரா. மாதவிடாய் சீராகும். அஜீரணத்தைப் போக்கும், பசியைத் தூண்டும். காச நோயைக் கண்டிக்கும்.

தூதுவளை - ஆஸ்துமா, ஈசினோபிலியா நுரையீரல் சம்பந்தப்பட்ட நோய், இருமல், காசநோய், நீரிழிவு, காது மந்தம், உடம்பு குடைச்சல், உள்நாக்குக் குத்தல், ஆண்மைக் குறைவு, நரம்பு நோய் ஆகியவற்றைக் குணப்படுத்துகிறது. விஷக் கடிக்கும் இது ஒரு வரப் பிரசாதம்.

அகத்திக்கீரையுடன் வெங்காயம் சேர்த்துச் சாப்பிடுவதால் குடலுக்கும் நரம்புகளுக்கும் பலத்தைத் தருகிறது. அகத்திக் கீரையை வேக வைத்து சூப் செய்து சாப்பிடுவதால் இருதயம், மூளை, கல்லீரல், ஜீரண உறுப்புகளுக்கு வலிமை தருகிறது. அகத்திக் கீரையை அளவோடு உண்ணுதல் நலம்.

—டி.ஆர்.ஜி.

## ஞாபக சக்தி வளர

'வல்லாரை' என்ற மூலிகை ஞாபகசக்திக்கு மிகவும் உகந்தது. யானைகள் இந்த இலையை விரும்பி, அது இருக்கும் இடத்தை நோக்கிச் செல்லும் என்பார்கள்.

'சமய சஞ்சீவி', 'சரஸ்வதி' என்று இதற்குப் பெயர்கள் உண்டு. இது இளைத்த உடலைத் தேற்றி சரீரத்தை நல்லபடியாக வைக்கும். உடல் உஷ்ணத்தைக் குறைக்கும். வாதத்தைப் போக்கும். வாய்வு, அண்டவீக்கம், யானைக்கால், குட்டரோகம், நெறிக் கட்டி, கண்டமாலை, மேகரணம், பைத்திய ரோகம், படை, சூதகக் கட்டு - ஆகியவற்றைக் குணப்படுத்தும் சக்தி வல்லாரைக்கு உண்டு. 'எல்லாரையும் அருந்தென்றேயுரைத்து நன்மனையுள் வல்லாரையை வளர்த்துவை' என்பது வல்லாரைக்குரிய சிறப்புப் பாடல்.

தலைமுடி கொட்டுபவர்களும், வழுக்கை விழுந்தவர்களும் வல்லாரையை நன்றாக இடித்துப்பிழிந்து நல்லெண்ணெயைக் காய்ச்சி நல்ல பதமாகும் தருணத்தில் நல்லெண்ணெயோடு கலந்து மீண்டும் பதமாக்கி ஆறியபின் வடிகட்டி வைத்துக் கொள்ளவும். இதைத் தினமும் காலையிலும் மாலையிலும் தலையில் தடவிக் கொண்டே வந்தால் தலைமுடி வளரும். உஷ்ணமும் குறையும். அவர்களுக்கு ஞாபக சக்தியும் அதிகமாகும்.

—த.கி.இராமசாமி



★ டாக்டர் அக்பர் கவுசர்

# போதையின் பகைவன்

மது, கஞ்சா, பிரவுன் ஷுகர், பார்பிச்ரேட்ஸ், மார்பின், பெத்தடின், மெதாடன், காசிக் கட்டி, புகையிலை, பீடி, சிகரெட், மூக்குப் பொடி, ஜர்தா பீடா, தூக்க மாத்திரை...

இன்னும் எத்தனையெத்தனையோ போதைப் பொருள்கள். இவை யாவும் பொல்லாதவை. தனிமனிதனை மட்டுமின்றி சமூகத்தையும் பாதிப்பவை. இவற்றுக்கு அடிமையான போதை அடிமைகளை மீட்கும் பணியில் 'கவுசரி 500' எனும் மூலிகை மருந்தைக் கண்டு பிடித்த யுனானி மருத்துவ நிபுணர் டாக்டர் ஹகீம் எஸ். அக்பர் கவுசர் இன்றைக்கு மிகவும் பரபரப்பாகப் பேசப் படுபவர். இவரது மேலாண்மையில் வட ஆர்க்காடு அம்பேத்கர் மாவட்டம், வாணியம்பாடி நியூ டவுனில் 'மது போதை அடிமைகளின் மறுவாழ்வு மையம்' இயங்கி வருகிறது.

பதினாறு ஆண்டுகளாக 20,000க்கும் மேற்பட்ட மது போதை அடிமைகள் இவரிடம் சிகிச்சை பெற்றுப் பூரண நலமுற்றிருக்கின்றனர். 100 படுக்கைகள் உள்ள இம்மையத்தில் தங்கி சிகிச்சை பெறக் கட்டணம் வசூலிக்கப் படுவதில்லை என்ற செய்தி சற்றே வித்தியாசமான செய்திதான்!

அகில உலக மருத்துவப் பல்கலைக் கழகத்தின் 'டாக்டர் ஆஃப் சயன்ஸ்' பட்டம் பெற்ற டாக்டர் ஹகீம் எஸ். அக்பர் கவுசர், அகில இந்திய யுனானி மருத்துவ ஆராய்ச்சிக்கான பரிசைப் பெற்றவர்.

'கவுசரி 500' என்ற மூலிகை மருந்தினால் போதை அடிமைகள் விடுதலை பெறுகிறார்கள் என்பது மட்டுமல்லாமல், மூட்டு சம்பந்தமான வலிகள், சிறுநீரகக் கோளாறுகள், கை, கால் இயங்காமை, எய்ட்ஸ், நீரிழிவு, இளம்பிள்ளை வாதம், ஆறாத புண்கள் போன்ற ஐம்பதுக்கும் மேற்பட்ட நோய்கள் பூரணமாய் விலகுகின்றன என்ற செய்தி நம்மை வியக்க வைக்கிறது.

கஞ்சா, பிரவுன் ஷுகர் ஆகியவற்றை கவுசரி 500 ஓரிரு வாரங்களிலேயே வெறுக்கச் செய்து டர்க்கி என்ற பக்க விளைவு நீங்கி, அந்த நோயாளிகளின் மூக்கில் நீர் வடிதல், உறக்கமின்மை, மனக் கிலேசம் ஆகியவற்றை இருக்குமிடம் தெரியாமல் விரட்டி விடுகிறது.

தேய்ந்த எலும்பு மூட்டுகளில் எண்ணெய்ப் பசை சுரந்து, முடங்கிப் போன கை, கால்கள் அசைவு கண்டு, வீக்கம், வலி முற்றிலுமாய் நீங்கிப் பழைய இயக்கம் தொடர்கிறது. "வாத நோய் மூட்டுகளைத் தாக்கி இதயத்தைக் கடிக்கும்' எனும் முதுமொழியைப் பொய்ப்பிக்கும் இவரது சிகிச்சை அபூர்வமானது.

சிறார்களைத் தாக்கும் மூட்டு வாதம் பட்டுப்பூச்சி கூண்டு, அஸ்வகந்த வேர் கொண்டு தயாரிக்கப்பட்ட லேகியத்தாலும், ரோகன்சுர்க் என்ற எண்ணெயை மூட்டுகளில் 'மசாஜ்' செய்தலாலும் குணமாகி விடுகிறது.

சீத்தாப்பழக் கொட்டை, மரப் பட்டை, வேர் போன்றவற்றுடன் ஜத்வார், மூக்கிரட்டை போன்றவற்றையும் இடித்துத் தயார் செய்த யுனானி மருந்து, அறுவைக்கு அவசியமில்லாமலேயே மார்புப் புற்று, கர்ப்பப் பைப் புற்று, மார்புப் புண், கர்ப்பப் புண் ஆகியவற்றைக் குணமாக்குகிறது.



★ டாக்டர் திருமதி அப்சர் சையீதா

சென்னைப் பல்கலைக் கழகம் வெண்ணிற எலிகளைப் போதையுறச் செய்து, அவற்றிற்கு 'கவுசரி 500' மூலிகை மருந்தைக் கொடுத்து ஆய்வு மேற்கொண்டது.

போதையின் தொல்லைகளில் இருந்து வெண்ணிற எலிகள் முழுமையாய் சுகமான பின்னரே, "மது - போதை அடிமைகளை மீட்க 'கவுசரி 500' சிறந்த மூலிகை மருந்து" என்று சான்றிதழ் வழங்கியது.

டாக்டர் ஹகீம் எஸ். அக்பர் கவுசர் மத்திய அரசு விளம்பரக் களத்துறை மற்றும் போதை அடிமை மீட்புக் கமிஷன் தலைவராய்ப் பல்வேறு ஆலோசனைகளைத் தந்து, இந்திய மக்களை மது போதை அடிமைகளாகாமல் காப்பாற்றி வருகிறார். இருபதுக்கும் மேற்பட்ட வைத்திய நூல்களையும் எழுதியிருக்கிறார். அக்கு பிரஷர் முறையைக் கையாள்வதிலும் இவர் மிகச் சமர்த்தர். இவருக்குத் துணையாக இவரது துணைவி டாக்டர் அப்சர் சையீதா, போதையின் பகைவராய் இருந்து அரிய சேவைக்கு உரியவராய்த் திகழ்கிறார்.

— நீலவன்

# வருமுன் காப்போன்



'மாஸ்டர்ஸ் – ஹெல்த் செக்கப்'பில் இதயநோய் வரக்கூடிய சாத்தியங்களை கண்டறியும் இயந்திரம்

அவசரம்! அவசரம்! எல்லாம் ஜெட் வேகம்! அனைவருக்கும் அனைத்திலும் அசுர வேகம்! அரை நூற்றாண்டுக்கு முன் கூட இப்படியோர் அவசரயுகம் இருக்கவில்லை. இது காலத்தின் கோலம்! பழைய அமைதியான வாழ்க்கை முறையை இனித் திரும்பப் பெற முடியாது என்னும் போது, இப்போதுள்ள சூழ்நிலைக்கேற்ப நாம் மாறுவது மட்டுமன்றி, வேண்டாத விருந்தாளிகளை வெற்றிலை பாக்கு வைத்து அழைக்காமலாவது இருக்கலாமே! வந்தபின் காப்பவனை விட வருமுன் காப்பவன் அறிவாளியன்றோ!

மனித இதயம் பலமான தசைகளால் ஆனதுதான். வாழ்நாள் முழுவதும் இமைப்பொழுதும் அயராமல் சுருங்கி விரிந்து வேலை செய்யும் இந்த இறைவனின் அற்புத இயந்திரம், மனிதனாலும் மாறுபட்ட சூழ்நிலைகளாலும் விரட்டப்படும்போது, அழற்சி அடைகிறது – சோர்ந்து போகிறது. பாதிப்பு (Risk Factor) பலவகையில் ஏற்படுகிறது. பாரம்பரியமாக வரும் இதயநோய் ஒரு பக்கம். மூப்பு என்பது மற்றொன்று. இவை தவிர, சிகரெட் மற்றும் மதுவகைகளால் உண்டாகும் இதயநோய், இரத்தக் கொதிப்பு மற்றும் டயாபடிஸ் நோய்கள் தூண்டிவிடும் இதயநோய். இந்த பாதிப்புகளில், விலக்கக் கூடியவற்றை விலக்கி வாழ்நாளை நீட்டிக் கொள்ள முடியும் என்றால், நாம் ஏன் அதைச் செய்யக் கூடாது!

'இஸ்கீமியா' என்ற கொரனரி (Coronary) இரத்தக் குழாய்களின் அடைப்பு நோய், வரப்போகும் மாரடைப்பு நோயின் முதல் அறிகுறி. இந்த நிலையின் தொடக்க நிலை அறிகுறிகளை நவீன மருத்துவக் கருவிகளால் தொடக்க நிலையிலேயே கண்டறிய முடியும். ஈ.ஸி.ஜி. என்ற இதய மின்னலையைவிடத் துல்லியமாகக் கண்டறிய 'கம்ப்யூட்டரைஸ்ட் ஸ்ட்ரெஸ் டெஸ்ட்' (Computerised stress test) செய்வது மிக அவசியம். மனித இதயம் செய்யும் வேலையை டிரட்மில்லினால் செயற்கையாக அதிகமாக்கி அது வேலை செய்யும் தன்மை மற்றும் வேலையால் உண்டாகும் அழற்சியைக் கம்ப்யூட்டர் துல்லியமாகக் கணக்கிட்டுக் காட்டுகிறது.

இந்த டெஸ்டின் போது ஒருவரின் வயது, எடை, உயரம் மற்றும் அவர் இரத்தத்திலுள்ள கொலஸ்ட்ரால், அவரது புகை பிடிக்கும் பழக்க வழக்கங்கள், ஈ.ஸி.ஜி. ஆகியவற்றை ஆய்ந்து, கூட்டிக் கழித்து, இந்த நபருக்கு இதய நோய் வரும் சாத்தியக்கூறு எவ்வளவு விழுக்காடு உள்ளது என்பதை 'எக்ஸெக்' (EXEC) ஸாஃப்ட்வேர் பொருத்தப்பட்டுள்ள கம்ப்யூட்டர் "CAD Probability"யாக எடுத்துரைக்கிறது.

CAD Probability என்றால் Coronary Artery Disease வரக்கூடிய சாத்தியக்கூறு. டெஸ்ட் எடுப்பதற்கு முன் (Pre-CAD) 2% ஆக இருந்த இந்தச் சாத்தியக்கூறு, டெஸ்ட் முடிந்தபின் (Post-CAD) 68% ஆக மாறினால், இதன் பொருள் என்ன? அந்தக் குறிப்பிட்ட நபருக்கு மாரடைப்பு நோய் வருவதன் சாத்தியக்கூறு மற்றவரைவிட மிக அதிகமாக இருப்பதைக் காட்டுகிறது.

தற்கால நெருக்கடியான சூழ்நிலையில் வாழ்ந்தாக வேண்டிய கட்டாயத்தில், 30 வயதான ஆண், பெண் இருபாலாரும் இந்த டெஸ்டைச் செய்து கொள்ள வேண்டியது இன்றியமையாதது. இதயத்தில் 'இஸ்கீமியா' இல்லையென்றால் நிம்மதிப் பெருமூச்சு விடலாம் அல்லவா! இருக்கிறது என்றாலோ, அது இருப்பதன் அளவை அனுமானிக்கலாம். தவிர்க்க வேண்டியவற்றைத் (Modifyable Risk Factors) தவிர்த்து, தகுந்த மருந்துகளை உட்கொண்டு, இதயத்தைப் படிப்படியாக வலுவடையச் செய்யலாம். இதய நோயால் அகால மரணம் ஏற்படாமல் தவிர்க்கலாம்.

எனவே முப்பது வயது முடிந்துவிட்டால் எல்லாரும் இந்த CAD Probability பார்த்துக் கொள்வது மிகுந்த நன்மை பயக்கும். சில சமயங்களில் அறிகுறிகளே இல்லாமல் உள்ளிருக்கும் இதயநோய் (Silent Ischemia) இந்த டெஸ்டின்போது வெளிப்படுகிறது. முக்கியமாக நீரிழிவு நோய் உள்ளவர்கள் இந்த 'சைலண்ட் இஸ்கீமியா'வால் பாதிக்கப்படுகிறார்கள். மேலும் இரத்தக் கொதிப்பு, உடல் பருமன் அதிகரிப்பு (Obesity), சோம்பித் திரிதல் (Sedentary Habit), சிகரெட் மற்றும் மது அருந்துதல், ஆபீஸ் வேலை மற்றும் டென்ஷன் (Corporate Stress), இதய நோய்ப் பாரம்பரியம் (Family History) ஆகியன உள்ளவர்கள் இந்த டெஸ்டை அவசியம் செய்வதன் மூலமாக, தேவையானால் தகுந்த நடவடிக்கைகளை எடுத்துக் கொண்டு, வரப்போகும் பேராபத்தைத் தவிர்க்க முடியும்.

–சுபத்ரா கோவிந்தராஜன்

# நவீன மருத்துவத்தில் கம்ப்யூட்டர்



நோயாளிகளின் சிகிச்சை பற்றி அறிய உதவும் கம்ப்யூட்டர்.

டாக்டர் திலீப் கிருஷ்ணா

இருபதாம் நூற்றாண்டில், அதிசயக் கண்டுபிடிப்பான 'கம்ப்யூட்டர்' என்னும் கணிப்பொறி, நவீன மருத்துவத்துறையையும் விட்டு வைக்கவில்லை. 'சி.டி. ஸ்கானர்', 'என்.எம்.ஆர்', 'அல்ட்ரா சவுண்ட்' இன்னோரன்ன கருவிகள் பற்பல முறைகளில் மருத்துவ உலகத்தை மிக நவீனமாக்கி விட்டன. "கம்ப்யூட்டர் இல்லாத டாக்டர், 'ஸ்டெதஸ்கோப்' இல்லாத மருத்துவர் போல" என்ற ஒரு புதுமொழியை உருவாக்கி இருக்கிறது என்றால் அது மிகையன்று. சிறிய கிராமங்களில் உள்ள மருத்துவர்களின் மேஜைமீதுகூட ஒரு கணிப்பொறி, கம்பீரமாக வீற்றிருக்கும் காலம் வெகு தொலைவில் இல்லை.

கம்ப்யூட்டர், டாக்டரின் இனிய நண்பன். 'பிஸியாக உள்ள ஒரு டாக்டரின் கம்ப்யூட்டர், பல உதவியாளர்கள் செய்யக்கூடிய வேலையை ஒட்டுமொத்தமாக, மின்னல் வேகத்தில், குற்றம் குறையின்றிச் செய்து முடித்து விடுகிறது. மனித மூளை செய்ய நேரும் தவறுகளைக் கம்ப்யூட்டர் செய்வதில்லை.

ஒரு டாக்டரின் 'க்ளினிக்'கைத் திறம்பட நிர்வாகம் செய்து, நோயாளிகளுக்குத் தேவையானவற்றை விரைவில் கொடுத்துதவும் "டாக்டர் மாஸ்டர்" போன்ற "ஸாஃப்ட்வேர்" பொருத்தப்பட்ட கம்ப்யூட்டர், மிகப் பெரிய வரப்பிரசாதமாகும். "ஸாஃப்ட்வேர்' உயர்தரமாக அமைந்துவிட்டால் கமப்யூட்டரால் இயலாதது ஒன்றும் இல்லை.

"டாக்டர்! ஆறு வருடங்களுக்கு முன் வயிற்று வலியால் துடித்துக் கொண்டு உங்களிடம் வந்தேன். நீங்கள் செய்த சிகிச்சையால் முற்றிலும் குணமாகிவிட்டது. இப்போது மீண்டும் அந்த வலி வந்திருக்கிறது. நீங்கள் கொடுத்த 'பிரிஸ்கிரிப்ஷனும்' கைவசம் இல்லை. என்ன செய்வது?" என்று வேதனையுடன் முனகும் நோயாளியைச் சமாதானப்படுத்துகிறார் டாக்டர்.

"நோ பிராப்ளம்" என்கிறார். எதிரில் இருக்கும் கணிப்பொறியை இயக்குகிறார். அவரிடம் அதுவரையில் வந்து சிகிச்சை பெற்றுள்ள ஆயிரக்கணக்கானவர்களின் குறிப்பேடுகளில் இருந்து, சம்பந்தப்பட்ட நோயாளிகளின் குறிப்பேட்டைத் தேடிக் கொடுக்கும்படி பணிக்கிறார். இமைக்கும் நேரத்தில் கேட்டது கிடைக்கிறது. நோயாளியின் நோய் சம்பந்தப்பட்ட தகவல்கள் அனைத்துமே மானிட்டரில் தெரிகிறது.

கம்ப்யூட்டரின் "மூளை"யில் அரிய பல பயனுள்ள விவரங்கள் உள்ளன. 'லேப்' குறிப்புகள், 'பயோ கெமிகல்', 'மைக்ரோ பயோலாஜிகல்', 'ஸீரோலாஜிகல்', 'இம்யூனோலாஜிகல்', 'எண்டோக்ரினோலாஜிகல்', 'கிளினிகல்', 'பாதோலாஜிகல்' டெஸ்ட்களின் ஆரோக்கியமான அளவுகள் - 'ஈ.சி.ஜி.', 'எக்கோ' முதலியவற்றின் நார்மல் அளவுகள் பதிவாகியுள்ளன. எந்தச் சமயம் எது தேவை என்றாலும் எடுத்துத்தர கம்ப்யூட்டர் தயார். சாதாரணமாக ரத்தத்தில் 'கொலஸ்ட்ரால்' எவ்வளவு இருக்கலாம் என்று டாக்டர் தன் மூளையைக் குடைய வேண்டியதில்லை. கம்ப்யூட்டர் இருக்கக் கவலை எதற்கு?

நாள்தோறும் நூற்றுக்கணக்கானவர் வந்து போகும் மருத்துவமனையில் நோயாளிகளுக்குப் பற்பல பரிசோதனைகள் செய்ய வேண்டியிருக்கும். அவற்றுக்கான 'ரிக்விஸிஷன்'களை கம்ப்யூட்டரே தவறுகள், காலதாமதம் இன்றிக் கொடுத்துவிடும்.

நோயாளிகளின் விலாசங்கள் எல்லாம் கம்ப்யூட்டரில் அடக்கம். எந்தச் சமயத்திலும் யாருடன் வேண்டுமானாலும் தொடர்பு கொள்ள முடியும். ஒரே மாதிரியான கடிதங்களை ஐயாயிரம் பேருக்குக்கூட அயராமல் அச்சிட்டுக் கொடுத்துவிடும் கம்ப்யூட்டர் எத்தனை அற்புதமானது!

இவை யாவும் இதுவரை நிகழ்ந்துள்ள சில அற்புதங்கள். வருங்காலத்தில் கம்ப்யூட்டரின் உதவியுடன் என்னென்ன விந்தைகள் - வித்தகங்கள் செய்ய முடியுமோ! யாரே அறிவர்?

-சுபத்ரா

# "செய்தக்க அல்ல செயக்கெடும்"...

—— டாக்டர் கி. வேங்கடசுப்பிரமணியம்

"இடும்பை இயல்பென்பா னின்" அருங்குணங்களைச் சென்ற மாதம் பார்த்தோம். ஆதிசங்கரர், கௌதம புத்தர், வர்த்தமான மகாவீரர், வாழையடி வாழை யெனவந்த ரிஷிகள், நம் உபநிட தங்கள், இயேசுநாதரின் பொன் மொழிகள் இவையெல்லாம் உல கத்தின் நிலையாமையை வற் புறுத்தின. உலகத்தின் நிரந் தரமே அதன் நிரந்தரமற்ற தன்மைதான் என்பதே உண்மை. இதை உணராத பலர் நாமே நிரந்தரம் என்று கூறி வருவதைக் கண்ணுறும்போது நமக்கு விந்தை யாக இருக்கிறது. பட்டினத்து அடிகள் ஒருமுறை, ஒருவர் இறந்த வீட்டுக்குச் சென்றபோது கூறியது நமது ஞானக்கண்களைத் திறக்கும். அடிகள் கூறினார்கள் : "சாகாத பிணமாகிய நான் செத்த பிணமாகிய நண்பரைக் காண வந்துள்ளேன்" என்றார். எத்துணை உண்மை இது! பாருங்கள்.

சில வாரங்கட்கு முன்பு நான் பரோடா சென்றிருந்தேன். அங் குள்ள மகாராஜா சையாஜிராவ் பல்கலைக்கழகத்துடன் எனக்கு நெருங்கிய தொடர்பு உண்டு.

அங்கு நான் சென்றது ஒரு முக்கிய பொருளாதார மாநாட்டில் கலந்து கொள்ள. பல்வேறு பல் கலைக் கழகங்களிலிருந்து பொரு ளாதார விற்பன்னர்கள் வந்திருந் தார்கள். அவர்கள் எப்படி இந் தியப் பொருளாதாரத்தை மேம் படுத்துவது என்பது பற்றி ஆய்வு நடத்தினர். இக்கருத்தரங்கில் பல தொழிலதிபர்களும் கலந்து கொண்டனர். புகழ்மிகு நிர்வாக இயல் நிபுணர்கள் பங்கேற்றனர்.

தலைசிறந்த நிர்வாகிகள் கூறிய ஒரு குறை இதுதான். பல்வேறு தொழில் நிறுவனங்கள் செய்யத் தகாத செயல்களைச் செய்து அத னால் அழிவுப் பாதையில் செல் கின்றனர். அதில் ஒரு நிர்வாகி பஞ்சாப் மாநிலத்திலிருந்து வந்த ர். கொஞ்சம் பச்சையாகவே கூறினார் : "இன்று ஓர் அரசியல் போராட்டமென்றால் ஓங்கி வளர்ந்த மரங்களை வெட்டிச் சாய்க்கிறார்கள். இந்த வெற்று சாமிகளால் ஒரு சிறுசெடியை உருவாக்க முடியுமா? ஆனால் 40 ஆண்டு 50 ஆண்டு வளர்ந்த மரங் களை ஒரே வெட்டில் வீழ்த்து கிறார்கள். இவர்கட்கு மரண தண்டனை தரவேண்டும்" என்று பஞ்சாபி சகோதரர்கட்கு உரிய காரத்துடன் இவர் கூறினார்.

"எது செய்யக் கூடாதோ அதைத்தான் செய்கிறோம்" என்று கூறிய மகாராஷ்டிரப் பேராசிரியர் உதாரணமாக, தேர்வின்போது (Examinations) ஆசிரியர்கள் தேர்வுத்தாளை மதிப்பீடு செய்ய மறுப்பது பற்றிக் கூறினார். ஆசிரியர் பணியே தேர்வு மதிப்பீடு தான். ஒரு பத்து ரூபாய் சம்பளம் அதிகம் வேண்டுமென்பதற்காக எதை நாம் செய்யக்கூடாதோ; அதைச் செய்கிறோம்" என்று அமைந்தார்.

குறுக்கே இடைவெட்டிப் பேசிய கேரள அன்பர் பேராசிரியர் மோகன் தம்பி கூறியது மிகவும் பொருத்தமாக இருந்தது. "செய்யக்கூடாதவற்றைச் செய்கி றோம். ஆனால் செய்ய வேண்டி யதைச் செய்வதில்லை" என்றார். கேரள மக்களுக்கே உரித்தான வெளிப்படை நகைச்சுவையுடன் இவர் கூறினார். "ஒரு சாதாரண மந்திரி. ஐந்தாண்டு பதவியில் இருப்பவர்தான் இவர், ஆனால் இவருக்காக பல லட்சங்கள், பதாகைகட்கும், விருந்துகளுக்கும், பாண்ட் வாத்யங்களுக்கும் ஒரு சில மணித்துளிகட்காக பலப் பல லட்சங்கள் செலவிடும் நிர்வாகம், அதனுடனே காலங்காலமாக உழைத்து ஓடாய்ப் போகும் தொழி லாளிக்கு சில நூறுகள் கொடுக்கக் கூடத் தயங்குகிறது. எனவே, செய்ய வேண்டியனவற்றையும் நாம் செய்வதில்லை என்பதற்கு இது ஓர் உதாரணம்" என்றார்.

ஆம்! நம் பொருளாதாரம், இரண்டு வகையான நோய்க்கு அடிமைப்பட்டிருக்கிறது. ஒன்று செய்யவே கூடாதவை என்று சொல்லப்படும் செயல்கள் தவ றாது செய்யப்படுகின்றன. அதே நேரத்தில் அவசியமாகச் செய்யப் படவேண்டும் என்ற செயல்கள் செய்யப்படாது நிற்கின்றன; அல் லது தள்ளிப் போடப்படுகின்றன.

உலகமேதை டாயின்பீ (Professor Toyenbe) கூறுவார் : "உலகின் மக்களை இருவகையாகப் பிரிக்கலாம். ஒரு வகை, எதைத் தொட்டாலும் தங்கமாக்கும் பண் பாளர். ("Whatever they touch they adorn") மற்றொரு வகை எதைத் தொட்டாலும் ஒத்தி வைக்கும் பான்மையாளர். ("What-ever they touch they adjourn") இவ்விருவேறு மக்களிடமும் மாட் டிக்கொண்டு உலகம் விழி பிதுங்குகிறது. முன்னவர் முன் னேறினால், பின்னவர் சறுக்கு கிறார். எனவே உலகம் இருந்த இடத்திலேயே இருக்கிறது" என்பார் இவர்.

இதுபற்றி இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னரே நம் பொய்யா மொழியார் மிகத் தெளி வாகக் கூறினார்.

*"செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க*
*செய்யாமை யானும் கெடும்"* என்று
*(47-466)*

ஆம். செய்ய வேண்டியவற்றை உடனே இன்றே இப்போதே செய்.

செய்யக்கூடாததை என்றும் எப்போதும் செய்யாதே.

இன்றைய பரோடாவில் 1994இல் நிர்வாக மேதைகள் கூறிய வற்றை நம் வள்ளுவப்பெருந்தகை இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே சொல்லி, நமக்குக் கொடுத்த எச்சரிக்கையைக் கவனி யுங்கள்; தமிழ் வள்ளுவன் வாக்கு எந்த நூற்றாண்டுக்கும் பொருந் தும் என்ற பேருண்மை நமக்குப் புலப்படும். ஃ

# பாவையர் பக்கங்கள்



## எண்ணிப் பார்க்கலாம் பெண்ணே!

அன்புச் சகோதரிகளே!

பெண்கள் முன்னேற்றம், பெண்களை அடிமைத் தளையிலிருந்து விடுவித்தல் என்றெல்லாம் ஒரு பக்கம் மேடையில் பேசுகிறார்கள் இன்னமும். ஆனால் உண்மையில் பெண்கள் வேகமாக முன்னேறிக் கொண்டிருக்கிறார்கள்.

"வீட்டிற்குள்ளே பெண்ணைப் பூட்டி வைத்தார்கள்" என்ற வரிகளெல்லாம் இனிமேல் மியூசியத்தில் தான் வைக்க வேண்டும். வெளியே வந்து படித்து, வேலைக்குப் போய் சம்பாதித்து உயர் அதிகாரிகளாகி... இன்னும் என்னென்னவோ!

இப்போது இன்னும் ஒரு விதத்தில் பெண் யோசிக்கத் தொடங்கியிருக்கிறாள். வீட்டில் இருந்தபடியே சம்பாதிப்பது எப்படி? பெருகிவரும் சுயவேலை வாய்ப்புத் திட்டங்களும், விவரங்களும் பெண்களை இப்படிச் சிந்திக்க வைக்கின்றன. சென்னையைத் தாண்டி வெளியிடங்களுக்குப் போகும்போது பல பெண்கள் என்னை இப்படிக் கேட்பதைப் பார்க்கிறேன்.

பெரிய அளவில் தானாக தொழில் ஆரம்பித்து முயல்வதற்கு முன்னால், பெண்கள் சின்னதாக தன்னைச் சுற்றி இருப்போருக்குத் தேவையான ஏதாவது ஒன்றைச் செய்து பார்க்கலாம்.

இதன் மூலம், இயல்பாக இருக்கக்கூடிய தயக்கங்கள் போகலாம். நாலு பேரிடம் நாமாக வலியப் போய்ப் பேசும் குணத்தை ஏற்படுத்திக் கொள்ளலாம். கொள் முதல், செலவு, லாபம் என்று கணக்கு எழுதத் தெரிந்து கொள்ளலாம். பல தரப்பட்டவர்களிடம் அட்ஜெஸ்ட் செய்து கொள்ள வேண்டிய அவசியத்தைத் தெரிந்து கொள்ளலாம். ஒரு தொழிலைத் தனியாகத் தொடங்கிச் செய்யக் கூடியதில் இருக்கும் கஷ்டநஷ்டங்களைப் பார்க்கலாம். எல்லாவற்றுக்கும் மேலாக நமக்குத் தொழில் செய்ய வருமா வராதா என்பதை நிதர்சனமாகத் தெரிந்து கொள்ளலாம்.

சிறிய அளவில் என்ன செய்யலாம்? சுலபமாக, புதுமையாக ஏதாவது செய்தால் பலன் நன்றாக இருக்கும். மாதிரிக்கு எனக்குத் தோன்றிய சில விஷயங்களைச் சொல்லியிருக்கிறேன். முயன்று பாருங்களேன்!

**1. புக் பைண்டிங் :** இது ஸ்கூல் சீசன். அநேகமாக எல்லா வீட்டிலுமே குழந்தைகளின் புத்தகங்களை பைண்ட் செய்து விடுகிறார்கள். பைண்டிங் வேலை தெரிந்த ஒரு சிறிய பையனை முதலில் வேலைக்கு அமர்த்திக் கொள்ளுங்கள். உங்கள் தெருவில் அல்லது அக்கம் பக்கத்துத் தெருக்களில் இருக்கும் வீடுகளுக்குச்சென்று புக் பைண்டிங் ஆர்டர் எடுங்கள். வந்து வாங்கிச் சென்று, பிறகு கொண்டு வந்து கொடுப்பதாகக் கூறுங்கள். உட்கார்ந்த இடத்தில் காரியம் ஆகிறதென்றால் யார்தான் தரமாட்டார்கள்? பக்கத்தில் உள்ள பள்ளிகளுக்குச் சென்று, என்றைக்குப் புத்தகங்கள் கொடுக்கும் நாள் என்று தெரிந்து கொள்ளுங்கள். அந்த நாளில் அங்கு போய், வந்திருக்கும் பெற்றோரிடம் பேசி ஆர்டர் வாங்குங்கள். உங்கள் சாமர்த்தியத்தைப் பொறுத்து 50 வீடுகளிலிருந்து 200 வீடுகள் வரை (ஃப்ளாட் முறை இருக்கும் இக் காலத்தில் இது சுலபமாக சாத்தியம்.) ஆர்டர் கிடைக்கலாம். விலை நிர்ணயம், அதற்குண்டான பொருள்கள் வாங்குவது இவற்றை, சாதாரணத் தகவலுக்குக் கேட்பதுபோல ஓர் அச்சகத்தில் போய் விசாரித்து விடுங்கள். அவர்கள் சார்ஜைவிட ஒரு நாலணா குறைத்து வாங்குங்கள். எது வந்தாலும் உங்கள் முயற்சியால் வந்த லாபம் சந்தோஷப்படுங்கள்.

**2. காபி சப்ளை :** உங்கள் வீட்டிற்கு அருகிலுள்ள சில அலுவலகங்களைப் போய்ப் பாருங்கள் எல்லா அலுவலகங்களிலும் ஒரு நாளைக்குக் குறைந்தது மூன்று தடவையாவது காபி சாப்பிடுவார்கள். பத்து பேருக்குக் குறையாமல் வேலை செய்யும் இரண்டு மூன்று அலுவலகங்களைத் தேர்ந்தெடுங்கள். அங்கு சென்று பேசி குறிப்பிட்ட நேரத்துக்கு காட அனுப்புவதாகக் கூறுங்கள். 40 ரூபாய்க்கு, சூடாகக் காபி வைக்கக் கூடிய தெர்மாஸ் டிரம் கிடைக்கும். வேலைக்கு நம்பிக்கையாக ஓர் ஆளைப் போட்டுக் கொள்ளுங்கள். வீட்டிலிருந்து போகும் டிகாஷன் காப்பி என்றால் கண்ணை மூடிக்கொண்டு ரூ. 2.50 தருவார்கள். குறைந்த பட்சம் ஒரு நாளைக்கு 50லிருந்து 100 காபி அனுப்பலாம். ஒரு காபிக்கு 1 ரூபாய் லாபம் நிச்சயம் செய்யலாமே!

**3. தரமான பொடி வகைகள்** இட்லி பொடி, மசாலா பொடி ரசப்பொடி, கறிவேப்பிலை பொடி போன்றவற்றைப் பல இன்று கடையில்தான் வாங்கு கின்றனர். கம்பெனியிலிருந்து கடைக்கு வந்து கடையிலிருந்து கைக்கு வருவதற்குள் இரண்டு மூன்று பேர் சம்பந்தப்பட்டிருப்ப தால் அவர்கள் லாபமும் விலை யில் ஏறுகிறது. குறிப்பிட்ட 5 வீடுகளில் ஆர்டர் எடுங்கள். வெளி விலையை விட 100 கிராமுக்கு ரூபாய் குறைத்தால்கூட உங்க ளுக்கு 2 ரூபாய் லாபம் இருக்கும் ஐந்து விதப் பொடிகள், ஐம்பது வீடுகள், ஒரு வீட்டிற்கு மூன்று பாக்கெட் என்றால்கூட மாதத் திற்குக் குறைந்த பட்சம் 750 பாக் கெட்கள். 1500 ரூபாய் கணிசமான லாபம். மணமான வியாபாரம்.

இவை தவிர சர்குலேட்டிங் லைப்ரரி, குழந்தைகள் காப்பகம் என்று இன்னும் பலவும் செய்ய லாம்.

யோசித்துப் பார்த்தால் வித்தியாசமாக உங்களுக்கே பல விஷயங்கள் தோன்றலாம். முத வில் அதிக முதலீடு இல்லாமல் சிறிய அளவில் செய்யத் தொடங் குங்கள். தயக்கங்களை, வெட்கங் களை, பயங்களை விட்டொழி யுங்கள். இரண்டு இடத்தில் இடறி விழுந்தாலும் பரவாயில்லை.

இன்று பெரிய அளவில் நடக்கும் பல தொழில்கள், முத வில் இப்படி சிறிய அளவில் ஆரம்பிக்கப்பட்டவைதான். எனவே முயன்று பார்த்து, உங்கள் அனுப வங்களை எங்களுக்கு எழுதுங்கள்.

பாவை பக்கங்களில் சமையல் ஏன்? இப்போதெல்லாம் யார் கோலம் போடுகிறார்கள்? அதற் கெதற்கு ஒரு பக்கம் என்கிற ரீதியிலும் விமர்சனங்கள் வரு கின்றன. பலதரப்பட்ட பெண்க ளுக்காகவும், பெண்களின் எல்லா ரசனைகளுக்காகவும் நடத்தப்படும் பகுதி இது. அடிப்படையில் பெண் மென்மையானவள்தானே! அவளின் அழகுணர்ச்சியே கோலத் திலும், சமையலிலும்தானே இருக் கிறது!

**நட்புடன்,**

**கிரிஜா ராகவன்**

## புதுமையான கோலப்போட்டி

வாசகர்கள் இந்த இடம் பிடித்துப் பரிசு பெற இதுவரை வெளிவராத புதுமையான சிறந்த கோலத்தை, கறுப்பு மையினால் வரைந்தனுப்பவும். தேர்ந்தெடுக் கப்படும் கோலத்துக்குப் பரிசு ரூ. 50/-.




இந்த மாதம் பரிசு பெறும் கோலத்தை வரைந்தவர் : திரு வாரூர் ஜே. சத்தியபாமா, 9, ரவி காலனி, அறந்தாங்கி – 614 616.



புள்ளி விபரம் - 17 புள்ளி இடைப்புள்ளி 9-ல் நிறுத்தவும்.




பிரசுரத்திற்குத் தேர்ந்தெடுக் கப்பட்ட மற்ற கோலங்களை வரைந்தவர்கள் : செல்வி, விஷ்ணு ப்ரியா, மதுரை 625 002. குமாரி வி. ஜெயந்தி, சென்னை – 600 005.



# அழகுக்கு அரிய கலை

“பியூட்டி பார்லர்” போய் முகத்தை அழகு பண்ணிக்கிட்டேன் - என்று வெளியே சொல்வதற்குப் பெண்கள் தயக்கப்பட்ட காலம் போய் “எங்கள் ஊரில் பியூட்டி பார்லர் நடத்த கோர்ஸ் படிக்கிறேன்” - என்று முன்னுக்கு வந்து விட்ட காலம் சந்தோஷப்படுத்துகிறது.

இதை முறையாகப் பாடங்களாக்கி, ஒரு மாதத்தில், ஒரு பார்லர் ஆரம்பித்து நடத்தும் அளவுக்கு சொல்லித்தருகிறேன் என்று நம்பிக்கையாகக் கற்றுக் கொடுப்பவர் “மைதிலி”.

அப்படி இதில் என்னதான் சொல்லிக் கொடுக்கிறார்கள், சம்பாதிக்க முடிகிற அளவு இது பெரிய தொழிலா, இவ்வளவு செலவழித்தபின் சரியாக வருமா, ஒரு மாதத்தில் ஒரு கலையைக் கற்றுக் கொள்ள முடியுமா - என்கிற பலவித சந்தேகங்களோடு மைதிலியை அணுகினோம்.

“எட்டு வருஷத்துக்கு முன்னால், நான் ஒரு பியூட்டி கோர்ஸ் படிச்சிட்டு முதலில் வேலைக்குப் போனபோது எனக்கு பிராக்டிகலாக நிறைய விஷயங்கள் தெரியவே இல்லை. அப்போதுதான் புரிஞ்சிக்கிட்டேன், இந்தப் படிப்பில் பிராக்டிகல் டிரெயினிங் நிறையத் தேவை என்று.

அந்த வகையில்தான் நிறைய பிராக்டிகல்ஸ் இருக்கிற மாதிரி இக் கோர்ஸை ஏற்படுத்தினேன். ஒரு மாதத்தில் இந்த மாணவிகள் குறைஞ்சது 50 முகங்களையாவது தானே ஹாண்டில் செய்திருப்பாங்க. இந்தப் பயிற்சி பின்னால் இவர்களுக்கு உதவும்”.

சென்னை தவிர பிற மாநிலங்களிலிருந்து, பிற நாடுகளிலிருந்தெல்லாம் மாணவர்கள் வர ஆரம்பித்ததும், அவர்களுக்காகப் பல இடங்களில் ஹாஸ்டல் வசதி செய்துதர ஏற்பாடு செய்தது மைதிலியின் புத்திசாலித்தனம்.

இன்னும் ஒரு விஷயம் நெருடலாக இருந்தது. 7000/- ரூபாய் பீஸ் அதிகமில்லையோ என்று தயக்கமாகக் கேட்டபோது படபடவென்று கணக்கு சொன்னார்.

“படிக்கும் காலத்தில் அழகு சாதனங்களை இவர்களால் சிக்கனமாக உபயோகிக்கத் தெரியாது. அந்த செலவே நிறைய ஆகிவிடும். தவிரவும், படித்தபின் சொந்தமாகத் தொழில் தொடங்கினால் ஒரு நாளைக்கு குறைந்த பட்சம் ரூ. 300/- சம்பாதிக்கலாம். ஒரு கணக்கு சொல்கிறேன் கடை வாடகை, உட் ஒர்க், உட்பட சில குறைந்த மிஷின்களுடன் குறைந்தது ரூ. 60000/- முதலில் ஒரு பியூட்டி பார்லர் ஆரம்பித்து விடலாம். கடைக்கு வருபவர்கள் தவிர கல்யாண மேக்கப், பிற விசேஷங்களுக்கு என்று போவதில் கூடுதல் வருமானம் வரும். மொத்தத்தில் 6 மாதத்திலிருந்து 1 வருடத்திற்குள் நிச்சயமாக முதலை எடுத்து விடலாம்” என்றார்.

சரி கோர்ஸ் படித்ததும் எப்படி கடை ஆரம்பிப்பது? அதற்கு வேண்டியவற்றை எங்கே எப்படி வாங்குவது என்றால் அதற்கும் இவர்களே ஏற்பாடு செய்து தருகிறார்கள்.

“இக் கோர்ஸில் சேர அடிப்படைத் தகுதி என்ன?” என்றோம். சிரித்தார் மைதிலி.

“திருச்சியிலேர்ந்து ஒரு மாணவி வந்தார், வந்தபோது அவங்களுக்கு தனக்குத்தானே லிப்ஸ்டிக் கூடப் போடத் தெரியாது. இப்ப அவங்க ஒரு கல்யாணத்துக்கு மேக்கப் போட ரூ. 3000/- வாங்கறார். வீடியோவுல தன் பெயரும் முகவரியும் டைட்டில் கார்டுல போடணும்னு கட்டாயப் படுத்தறார். போதுமா!” என்றார்.

வெளியூரிலிருந்து இங்கு வந்து தங்கிப் படிக்க முடியாதவர்கள் என்ன செய்வது? அதற்கும் ஒரு வழி சொன்னார் மைதிலி. உங்கள் ஊரில் குறைந்தது 20 பேர் சேர்வ தாக இருந்தால் ஒரு மாதம் வந்து வகுப்பு எடுக்கிறார்களாம். ரூ 4000/- சார்ஜ் செய்கிறார்களாம்.

ஹாங்காங்கிலும், அமெரிக்கா விலும் உள்ள பயிற்சி நிறுவன களில் இதற்காக டிப்ளமா வாங்க யிருக்கும் மைதிலி, ஹெர்ப அழகு சாதனங்கள் தயாரித் ஏற்றுமதி செய்கிறாராம். ப வெளிநாட்டுப் புத்தகங்களை வ வழைத்து அழகுக் கலையில் ஏ படும் முன்னேற்றங்களை உடனு குடன் படித்துத் தெரிந்து கொள் றாராம். அங்கங்கே நடக்கு அழகுத்துறை நிபுணர்களி மாநாட்டுக்குப் போய் நிறைய வி யங்களைத் தெரிந்து கொள்கிற ராம். எந்த நேரத்திலும் இவ ‘8255579’ என்ற தொலைபேசி எ ணில் தொடர்பு கொண்டு விவர களைத் தெரிந்து கொள்ளலாம்.

பெண்களுக்குக் ஜ்கவ தொழில் இது. பல இடங்கள் நன்கு சம்பாதிக்கும் வாய்ப்புள் தும்கூட. முயன்றால் இன்னு நிறைய “மைதிலிகள்” உருவ லாமே!

— ஜ்வாலாமு

தண்ணீர் போதுமான அ குடிக்காதவர்களுக்கு சிறு கத்தில் கல் உருவாகிறது. பா பேட் கற்கள் சைவ உணவு ச பிடுபவர்களுக்கும், ஆக்ஸ கற்கள் அசைவ உணவு சாப் பவர்களுக்கும் தோன்றுகின்ற சுண்டக் காய்ச்சிய பாலைப் ப பவர்களுக்கும் கால்சியம் க யாகிக் கல்லாகி விடுகின்ற இவற்றை அதி நவீன முறை ‘பெர்குடேனஸ் அல்ட்ரா சோ லித்தோடிரிப்சி (P.U.L) அலைகளைச் செலுத்து, கற்க நுண்ணிய பொடியாக்கி, பி அவற்றை வலியின்றி உறி வெளியே எடுத்து விடலாம்.

—டி. ஆர்.



# நாணயம்

நேர்மை, நாணயம், உழைப்பு செழிக்கவும் உங்கள் பொருளாதாரம் கொழிக்கவும் வழிகாட்டும் புதிய பகுதி.

## எப்போது கடன் வாங்கலாம்?

எஸ். இராஜரத்தினம்

"கடன் பட்டார் நெஞ்சம் போல் கலங்கி நின்றான் இலங்கை வேந்தன்" என்று இராமாயணத்தில் வரும் சொற்றொடர் அனைவரும் அறிந்த ஒன்று. கலங்கி நிற்பது கடன் கொடுத்தவரே இக்காலம் என்பது ஒரு வேடிக்கை வாதம். "கடன் பட்டாலே கலங்கத்தான் வேண்டுமா?" என்பதையும் ஒரு வேண்டாத வாதமாக ஒதுக்கி விடமுடியாது.

கடன் வாங்குவது எளிது. ஆனால் அதனைத் திருப்பிச் செலுத்துவது சிரமம். இது எல்லோருக்கும் பொருந்தும். அடிக்கடி கடன் வாங்குவதையே வழக்கமாகக் கொண்டிருப்பவர்கள் சற்று சிந்திக்க வேண்டும். ஒருவரிடம் வாங்கிய கடனைத் திரும்பச் செலுத்துவதன் மூலம் அவரிடம் மேலும் மேலும் கடன் பெற முடியும். வாங்கிய கடனுக்கான வட்டியை மட்டுமே செலுத்தும் நிலையிலுள்ள நடுத்தர வர்க்கத்தினர் பலரை நாம் காணலாம்.

### கடன் வசதிக் கார்டுகள்

இன்றைய நாகரிக உலகில் வசதியுள்ள பலரும் பல வங்கிகள் வழங்கி வரும் 'கடன் வசதிக் கார்டுகள்' (CREDIT CARDS) வைத்திருப்பதைப் பார்க்கிறோம். ஒரு மாதத்திற்கு வட்டியில்லாமல் அவர்கள் கடன் அளிப்பதாகச் சொன்னாலும், வருடாந்தரக் கட்டணம் கட்டுவதோடு இந்த வசதியை அளிக்கும் நிறுவனங்கள் இந்த வசதிக்கென விகிதாச்சாரப்படி கட்டணம் கட்டுவதாக இருப்பதால் அந்த நிறுவனங்களின் விற்பனை விலையில் இதுவும் ஓர் அங்கமாக இருக்கும். பணம் கட்டுவதில் கால தாமதம் ஆனால் அதிகப்படியான வட்டியையும் இந்தக் கடன் வசதியை வழங்கும் வங்கிகள் வசூலித்து விடுகின்றன. இம்மாதிரி 'கடன் வசதி அட்டைகள்' மூலம் பொருள்கள் வாங்கும் நேரத்தில் பணமில்லாவிட்டாலும் கூட தவிர்க்கப்பட வேண்டிய செலவினங்களைக் கூடத் தவிர்க்க இயலாமல் போவது உண்டு.

அமெரிக்க நாட்டில் இந்த 'கடன் வசதி அட்டை'யை உபயோகிப்பது சர்வ சாதாரணமாக உள்ளது. ஒவ்வொருவரும் பல நிறுவனங்களின் கார்டுகளை வைத்திருப்பதும் உண்டு. சிக்கனத்தை வலியுறுத்தும் அறிஞர்கள் பலர் சிக்கனத்திற்கு முக்கிய வழியாகக் கூறுவது, இந்தக் கார்டுகளைத் தவிர்ப்பதுதான். வேண்டாத பொருள்களை வாங்குவதற்கு இவை வசதியாக இருக்கின்றன. அதனால் செலவுகள் கூடுவது ஏதுவாகிறது. வரவுக்குள் செலவு என்பதற்கு இவை பெரும் முட்டுக்கட்டையாக உள்ளன. அதிகப்படியான விலையுள்ள பொருள்களை வாங்குவதில், வாங்குபவர் அதனைத் தவணை முறையில் திருப்பிச் செலுத்துவதற்கும் சில கார்டுகளில் வசதி உண்டு. ஆனால் அவ்வாறு திருப்பிச் செலுத்தும்போது வட்டி எவ்வளவு வாங்குகிறார்கள் என்பது பலருக்குத் தெரிவதில்லை. தவணை முறையில் வாங்கும் போது உண்மை விலையோ கொடுக்கும் வட்டியோ பலருக்கும் தெரிவதில்லை. அதனால் இந்த கடன் வசதிக் கார்டுகளினால் பயனே இல்லை என்பது பொருள் அல்ல. அவற்றைக் கவனத்துடன் பயன்படுத்த வேண்டும் என்பது தான் விவேகம். வரவுக்கு மிஞ்சிய செலவுக்கு இவை வழி செய்கின்றன.

### கடன் எப்போது வாங்கலாம்?

கடன் வாங்குவதே தவறாகுமா? இல்லை. கடன் பல நேரங்களில், தவிர்க்க முடியாதது. ஆயினும் சாதாரண வீட்டுச் செலவிற்குக் கடன் வாங்குவதைத் தவிர்க்க வேண்டும். செலவைக் குறைக்க வழி தேட வேண்டும். வீடு கட்டுவதற்கோ அல்லது ஒரு நல்ல சேமிப்பிற்காகவோ கடன் வாங்கினால் அது தவறல்ல. இருப்பினும், எவ்வளவு வட்டிக்குக் கடன் வாங்குகிறோம், கடன் வாங்கிக் கட்டும் வீடு அல்லது சேமிப்பு எந்த விகிதாச்சாரத்தில் பயனளிக்கும், எவ்வளவு காலத்தில் அந்தக் கடனைத் திருப்பிச் செலுத்த வேண்டும், அதற்குள்ள வசதி நம்மிடம் உள்ளதா என்பதைக் கவனத்தில் கொள்வது அவசியம்.

நாம் சேமித்து வைத்த பணத்திலிருந்துதான் வீடு மற்றும் இதர சொத்துகள் வாங்க வேண்டும் என்பதில்லை. பணம் சேர்த்த பிறகுதான் நாம் சொத்து வாங்குவது என்று நினைத்தால், விலைவாசி ஏற்றத்தினால் அது நம்மை விட்டு விலகியே போக இடமுண்டு.

கூட்டுறவு முறையிலோ, அரசு அல்லது அரசு சார்ந்த நிறுவனங்கள் மற்றும் பெரிய கம்பெனிகள் முதலியவை தங்கள் ஊழியர்களுக்கு வீடுகள் கட்டுவதற்காக வழங்கும் கடனைப் பெற்றுக் கொள்வது ஒரு விவேகமான செயலாகும். எவ்வளவுக்கெவ்வளவு முன்னதாகக் கடனைப் பெறுகிறோமோ அந்த அளவிற்கு திருப்பிக் கொடுக்கும் காலவரை அதிகரிக்கும். ஆயினும், இந்த வீட்டு மனைகளைத் தனித்தனி மனைகளாகப் பிரித்து விற்பவர்கள் சில சமயம் வட்டியில்லாமலோ அல்லது குறைந்த வட்டிக்கோ மனைகளை விற்கலாம். ஆனால் இந்த வீட்டு மனைகள் வீடுகளாக மாற வாய்ப்பு உண்டா என்பதை கவனித்து வாங்குதல் நலம். கண்மூடித்தனமாக அவற்றை வாங்கி இன்றுவரை அந்த மனை அவர்கள் பெயரில் பதிவு கூட ஆகாமல் பல வருடங்களாக விற்கவும் முடியாமல், வாங்கி அவதிப்படுபவர் பலர்.

சில கடன்கள் செலவினங்களுக்கு அல்லாமல் அல்லது வீட்டு வசதிப் பொருள்கள், மோட்டார் வாகனங்கள் போன்றவற்றிற்காக அளிக்கப்படுகின்றன. பழைய வண்டி வைத்திருப்பவர்கள் அந்த வண்டியை விற்று அதிகப்படியான தேவைக்குக் கடன் கொடுப்பவர் இருக்கின்றனர் என்பதால் புதிய வாகனத்தை வாங்குவது இயற்கை. அவர்கள் வியாபாரத்திலோ அல்லது சொந்தத் தொழில் செய்வதாக இருந்தால் வருமான வரிக்கு அதிகப்படியான தேய்மானம் கிடைக்கும். அதனால் வருமான வரி குறைகிறது. புதிய வண்டி வாங்குவது ஒரு புத்திசாலித்தனமான காரியம் என்று சிலர் நினைப்பதுண்டு. வருமான வரி விகிதம் குறைந்து வருவதால் வரிக்குறைப்பு என்பது ஓரளவு தான். ஆனால் இந்தப் புதிய வண்டியினால் வாங்கியவர் இதுவரை செலுத்தாத வட்டியை இப்போது கட்டுவதுடன் காப்பீட்டுத் தொகையும் பன்மடங்கு பெருகும்; செலவும் அதிகமாக எதிர்பார்க்கலாம். இந்த அதிகப்படி செலவினங்களைப் பார்க்கும் போது வரிக்குறைப்பு அதில் ஒரு சிறு பகுதியாகவே இருக்கும். ஒரு புதிய காருக்கு அதிகப்படியான விலை கொடுத்தாலும் அது பழைய காரைப் போலவே ஒரு நல்ல வாகனமாக இருக்குமா என்றால் அதுவும் பல நேரங்களில் இருப்பதில்லை.

## கடனே வாங்காமலிருந்து விட முடியுமா?

திடீர் விருந்தினர் வரும்போது ஏற்படும் செலவு வருமானத்தை விட அதிகப்படலாம். நோய் நொடிகளாலும், குழந்தைகளைப் பள்ளியில் சேர்க்கும்போது ஏற்படும் செலவினங்களும் சில சமயம் கட்டுமீறிப் போவதுண்டு. அந்த மாதங்களில் கடன் வாங்குவதை யாரும் குறை கூற முடியாது.

## சில எச்சரிக்கைகள்

'குடும்பப் பொருளியல்' பற்றி எழுதும் மேல்நாட்டு அறிஞர்கள் கீழ்க்கண்ட அறிவுரைகளைக் கூறுகின்றனர் :

## 1) வரவுக்குள் செலவு :

அன்றாடச் செலவிற்காகக் கடன் வாங்குவதை முழுமையாகத் தவிர்க்க வேண்டும். அன்றாடச் செலவிற்கு வருமானம் போதவில்லை என்றால் செலவைக் குறைப்பதைத் தவிர வேறு வழியில்லை.

## 2) அளவிற்குள் சிறு கடன்கள் :

அன்றாடச் செலவிற்காக அல்லாமல் வீட்டிற்கு வேண்டிய அத்தியாவசியப் பொருள்களான மிக்ஸி போன்ற வீட்டு வசதி, மின் சாதனங்கள், வாகனங்கள் போன்றவற்றிற்காக கடன் வாங்கினால், அதை அந்தச் சாதனங்களின் விலை, தவணை முறையில் வாங்கினால் அதற்குக் கட்ட வேண்டிய வட்டி, ரொக்க விலை கொடுத்து வாங்குவதற்கும் தவணை முறைக்கும் உள்ள வேறுபாடு, இவற்றை கவனத்தில் கொண்டு எவ்வளவு குறுகிய காலத்திற்கு அந்தக் கடன் தேவையோ அந்தக் காலத்திற்கு மட்டுமே குறைந்த வட்டியில் மற்ற செலவினங்களையும் கணக்கில் கொண்டு கடன் வாங்கலாம்.

## 3) சில சமயங்களில் மட்டும் பெரிய கடன்கள் :

வீடு கட்டுவதற்கோ அல்லது மற்றச் சொத்துகள் வாங்குவதற்கோ கடன் வாங்குவது அனுமதிக்கப்படவேண்டிய ஒன்று எனலாம். இருப்பினும், வட்டி விகிதம், முதலையும், வட்டியையும் திருப்பிச் செலுத்துவதற்கு வருங்காலத்தில் நமக்குள்ள பண வசதி, வாங்கப்படும் சொத்தின் பிற்கால உபயோகம், மறு விற்பனை செய்தால் வரக்கூடிய விலை, அதன் சுற்றுப்புற நிலை முதலியற்றை கவனித்து கடன் வாங்குவது நல்லது. அதிகப்படியாக பதினைந்து வருடங்கள் இருக்கலாமே தவிர அதைவிட நீண்ட காலத்திற்கு வாங்கினால் கடனைத் திருப்பிக் கொடுக்க வேண்டியதில் ஆர்வம் குறைந்து அதிகப்படியான வேறு கடன்களை சுமக்க நேரிடும். நீண்ட காலத்திற்குக் கடன வாங்கும்போது வட்டி விகிதம் அதிகரிக்கலாம்.

## 4) யாரிடம் கடன் பெறலாம்? :

கடன் வாங்கும்போது நம்மிடம் இருக்கும் "ஆயுள் காப்பு" (Insurance) "வருங்கால வைப்பு நிதி" (Provident Fund) முதலிய வற்றில் இருந்து பெறப்படும் கடன் குறைந்த வட்டியில் இருக்க ஏதுவாகலாம். சொத்துகளின் மீது கடன் வாங்குவது எளிது. ஆனால் வட்டி விகிதம் மிக அதிகம். வட்டி தவிர கடன் கொடுப்பவர் அல்லது நிதி போன்றவை — பலவிதமான செலவினங்கள், — உதாரணமாக பத்திரங்களைப் பரிசோதிக்க வசூலிக்கப்படும் கட்டணம், சர்வேயர் கட்டணம், நேரடிச் சோதனை (Inspection), அதற்குரிய செலவுகள் முதலியவற்றைக் கவனத்தில் கொள்ள வேண்டும். சில தவணைகள் தவறினால் மிகக் கடுமையான வட்டிவிகிதம் ஏற்படுவதும் உண்டு. இதனால் எங்கு கடன் வாங்குகிறோம் என்பதும் ஒரு முக்கியமான விஷயமாகும்.

## 5) கடனைக் கழிக்கவும் மாற்றவும் செய்யலாம் :

பல இடங்களிலிருந்து கடன்கள் வாங்கப்பட்டிருக்கலாம். உடனடித் தேவைக்காக அதிகமான வட்டியில் கடன் வாங்கியிருக்கலாம். நீண்ட காலக் கடன் வாங்கியிருப்பவர்கள் குறைந்த வட்டியில் பின்னர் வேறு கடன் வாங்க முடியும் என்றால் புதியகடனை வாங்கி பழைய கடனைத் திருப்பிக் கொடுக்கலாம். அவற்றைச் செய்வது நல்லது.

உபயோகப்படாமல் வீட்டிலிருக்கும் வெள்ளிச் சாமான்கள் போன்றவற்றை விற்று அதிகப்படியான வட்டியுள்ள கடன்களைத் திருப்பிச் செலுத்தி விடுவது நல்லது. வெள்ளி, தங்கம் போன்றவற்றிற்கும் வருடத்திற்கு 10 முதல் 20 சதவிகிதம் வரை விலை உயரலாம். ஆனால் வட்டி விகிதங்கள் அதைவிட அதிகமாகவே உள்ளன.

பல இடங்களில் இன்ஸ்யூரன்ஸ் அல்லது வேலை செய்யும் நிறு

## மகளிர் நலம் பேணும் நலநிதி நிறுவனம்

சென்னை மாநகரத்தில் பெனிபிட் பண்டு ஒன்று தொடங்கப்பட்டு செயல்பட்டு வருவதென்பது முக்கியமான செய்தி அல்ல. ஆனால் பார்க்டவுன் பகுதியில் ராசப்ப செட்டித் தெருவில் அமைந்துள்ள கல்பதரு பெனிபிட் பண்டு நிறுவனம் தனித் தன்மையுடன் வாடிக்கையாளர்களுக்குச் சிறந்த முறையில் சேவை புரிந்து வருகின்றது. இதன் டைரக்டர்களில் பெரும்பான்மையினர் மகளிர். அதனால்தான் போலிருக்கிறது சர்வதேச மகளிர் ஆண்டையொட்டி 1994இல் மகளிர் பெயரால் செய்யப்படும் பிக்சட் டிபாசிட்களுக்கு 1% அதிக வட்டி தந்து பெண்களின் பேராதரவைப் பெற்றிருக்கின்றனர்.

நகைக் கடனுக்கு வட்டியைத் தவிர வேறு பெயர்களில் கட்டணம் எதையும் இவர்கள் பெறுவதில்லை. டைரக்டர் குழுவினர் அநேகர் வங்கி மற்றும் நிதி நிறுவன அனுபவம் கொண்டவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. சேர்மன் Lion S. கிருஷ்ணன் அவர்கள் அநேக ஆலயத் திருப்பணிகளில் முன்நின்று தொண்டு புரிந்தவர். இந் நிறுவனத்தைத் தன் ராசியான கைகளினால் தொடங்கிவைத்து வாழ்த்தியவர் பார்க் டவுன் பெனிபிட் பண்டின் ஆலோசகரும் ஸ்ரீகந்த கோட்டம் சீனியர் டிரஸ்டியுமான திரு P. பாலசுப்பிரமணியம் B.Sc., அவர்கள்.

V. ஈஸ்வரபிரசாத்.

## R.D. பரமானந்துகா டெக்ஸ்டைல்ஸ் லிமிடெட்

"பனியன் சிட்டி" என்று உள்ளாடைகளுக்கு சிறந்து விளங்கும் நகரம் திருப்பூர். உலகளவில் ஏற்றுமதித் துறையில் வாகை சூடியுள்ள இந்நகரில் அமைந்துள்ளது R.D. பரமானந்துகா டெக்ஸ்டைல்ஸ். பதினைந்து வருடங்களுக்கு முன் நூல் வியாபாரத்தில் இறங்கிய திரு. சுரேஷ் பரமானந்துகா, உள்ளாடை நெய்வதில் தேர்ந்து 'விரில்' பிராண்டு உள்ளாடைகளை நாடெங்கிலும் டீலர், டிஸ்டிரிபியூட்டர்கள் மூலம் பரவலாகக் கிடைக்கச் செய்துள்ளார். சுவிட்சர்லாந்தில் அமைந்துள்ள 'ஜங்ப்ரா' என்ற வானளாவும் சிகரத்தின் பெயரில் 'டீ' சர்ட்களும் தயாரித்துப் பிரபலப்படுத்தியுள்ளார். தற்பொழுது அராபிய, ஐரோப்பா தேசங்களுக்கு ஏற்றுமதி உற்பத்தியும் மும்முரமாக உள்ளது. ஜெர்மனி, இங்கிலாந்து, இத்தாலி நாடுகளிலிருந்து உயர்தர ப்ராஸஸிங் மற்றும் டீ சர்ட்டில் அச்சிடும் இயந்திரங்களை இறக்குமதி செய்துள்ளார்.

ரூ. 25 கோடிக்கு உள்ளாடைகளும் டீ சர்ட்களும் வாணிபம் செய்யும் R.D. பரமானந்துகா டெக்ஸ்டைல்ஸார் பருத்தி மற்றும் பனியன் நூல் மில்களை நிறுவ உள்ளனர். விரைவில் பப்ளிக் இஷ்யூ ஒன்றும் இவர்களிடமிருந்து எதிர்பார்க்கலாம்!

## "பேம்கோ"

சென்னை நுங்கம்பாக்கத்தில் உள்ள பேம்கோ ரெடிமேட் ஆடை விற்பனை நிறுவனம் நவநாகரிக உடைகளின் விற்பனையில் முன்னணியில் உள்ளது.

ஆண்களுக்குத் தேவையான முழுக்கை சட்டைகள், டீ ஷர்ட்கள், ஜீன்ஸ் பேண்ட்கள், நேர்த்தியான டிசைன்களில், அலுவலகங்களுக்கு அணிந்து செல்வதற்கான சட்டைகள் எனப் பல ரகங்கள் உள்ளன.

மகளிருக்குத் தேவையான சுரிதார், சல்வார் கமீஸ், ஸ்கர்ட்டுகள், உடலை ஒட்டிய இறுக்கமான ஆடைகள், ஜீன்ஸ், பெர்முடா ஆடைகள் குவிந்துள்ளன.

சிறுவர் சிறுமியருக்கான அரைக்கால் சட்டைகள், பேண்ட்டுகள், ரோம்பர்ஸ், பாக்கீஸ் பைஜாமாக்கள், ஸ்கர்ட்டுகள், ஃப்ராக்குகள் எனப் பலவித ரகங்கள் கண்ணைக் கவருவனவாக உள்ளன.

மென்மையான பருத்தி ஆடைகள், நைலான் துணியிலான ஆடைகள், கடினமான டெனிம் துணிகளாலான ஆடைகள் இங்கு கிடைக்கும். பேம்கோ ரெடிமேட் ஆடைகள் தரத்தில் சிறந்தவை மட்டுமல்ல; விலையும் குறைந்தவை. நீடித்து உழைக்கக் கூடியவை. அதனாலேயே அதை இளைஞர்களும் பெண்களும் விரும்பி வாங்கி அணிகின்றனர்.

— டிஆர்ஜி

வனம் இவற்றிலிருந்து குறைந்த வட்டியில் பயன் பெற முடியுமானால் அதைப் பயன்படுத்துவது ஒரு நல்ல யோசனை. வாங்கிய கடனைத் திருப்புவதற்கும் கடன்காரரை மாற்றுவதற்கும் சந்தர்ப்பங்கள் இடையிலே வரலாம். அவற்றைத் தவறவிடலாகாது.

### 6) கடனுக்கொரு திட்டம் :

கடன் வாங்கும்போது அதனைத் திருப்பிச் செலுத்துவதற்கு ஒரு திட்டம் வகுத்துக் கொள்வது ஒரு நல்ல யோசனை. பல நிதி நிறுவனங்களில் கடன் கொடுக்கும் போது மாதாந்திர முதலீட்டுத் திட்டங்களை அறிமுகப்படுத்துவர். இதன் மூலம் கடன் தொகையை ஒரு குறிப்பிட்ட காலத்தில் செலுத்துவதற்கு வசதியாக இருக்கும். ஆயினும் நாம் கொடுக்க வேண்டிய வட்டியையும் இந்தத் திட்டத்தினால் வர வேண்டிய வட்டியையும் கணக்கிடுவது நல்லது. அவர்கள் கொடுக்கும் திட்டம் நல்ல முறையில் இல்லாவிட்டால் இந்த மாதாந்தரத் திட்டத்தை வெளியே எங்காவது வைத்துக் கொண்டு கடனை எவ்வளவு விரைவாகத் திருப்பிச் செலுத்த முடியும் என்பதையும் கவனிக்கலாம்.

கடன் வாங்காமலே இருக்க முடியுமானால் உத்தமம். வாங்க வேண்டிய சூழ்நிலையில் தகுதிக்கேற்ப வாங்கி, திட்டமிட்டுத் திருப்பித் தருவது மத்திமம். 'வாங்கிய கடனில் சிலகாலம் சிறப்பாக வாழ்ந்து பலகாலம் அல்லலுறுவது அதமம்.'

சென்னை - 2இல் உள்ள ஆர்.ஜே. பிராசஸ் ஆஃப்செட் அச்சகத்தில் அச்சிட்டவர் : ஆர். ஜனார்த்தனன். ஸ்ரீராம் டிரஸ்ட், சென்னை - 600 001 சார்பில் வெளியிட்டவர் : ஏ.வி.எஸ். ராஜா. ஆசிரியர் - கலைமாமணி விக்கிரமன், நிர்வாக அலுவலகம், 145, லிங்கச் செட்டி தெரு, த.பெ.எண் : 5043, சென்னை - 600 001. தொலைபேசி : 5228545, 510535. ஆண்டுச் சந்தா ரூ. 72